# சிலப்பதிகார ஆய்வடங்கல்

இரா. காசிராசன், எம். ஏ.




உண்மை உழைப்பு உயர்வு

தமிழ்த் துறை,
கேரளப் பல்கலைக்கழகம்,
காரியவட்டம், திருவனந்தபுரம்

கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறை
வெளியீடு, எண். 9

**Kerala University Tamil Dept.
Publication, Series No. 9**

பொது பதிப்பாசிரியர்

டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், எம்.ஏ.,பி.எச்டி.
தமிழ்த்துறைத் தலைவர், கேரளப் பல்கலைக்கழகம்

General Editor:

Dr. S. V. Subramonian, M. A. PH. D.
(Reader & Head of the Dept. of Tamil,
University of Kerala)

# சிலப்பதிகார ஆய்வடங்கல்

[குறிப்பு விளக்க நூல் தொகை]

# CILAPPATIKARA AYVADANKAL

**[Annotated Bibliography on Cilappatikaram]**

# சிலப்பதிகார ஆய்வடங்கல்

# CILAPPATIKARA AYVADANKAL

இரா. காசிராசன், எம். ஏ.
ஆய்வாளர்

**R. KASIRAJAN, M. A.**
Research Scholar

தமிழ்த் துறை,
கேரளப் பல்கலைக்கழகம்,
காரியவட்டம், திருவனந்தபுரம்

**Department of Tamil,**
**University of Kerala,**
**Kariavattom, Trivandrum.**

# CILAPPATIKARA AYVADANKAL

*[Annotated Bibliography on Cilappatikaram]*

*By*

R. KASIRAJAN, M. A,
Research Scholar, Dept. of Tamil,
University of Kerala, Kariavattom.

Ist Edition, March. 1973

Published By

Department of Tamil,
University of Kerala,
Kariavattom, Trivandrum
Kerala.

Price: Rs. 2·25

Assisi Press, Nagercoil.

# அணிந்துரை

டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
தமிழ்த்துறைத் தலைவர்
கேரளப் பல்கலைக்கழகம்.

காரியவட்டம்
திருவனந்தபுரம்

அச்சுப் பொறிகள் வந்த பின் நூலகள் மிகுதியாக அச்சாகிக் கொண்டிருக்கின்றன. ஓர் இலக்கியம் பற்றிப் பல ஆய்வு நூற்களும் கட்டுரைகளும் வெளிவருகின்றன. சிலர், பிறர் எழுதியதையே, தெரிந்தோ தெரியாமலோ மீண்டும் எழுதிக்கொண்டிருக்கின்றனர். இதை, இலக்கிய மாணவர் 'அரைத்த மாவையே அரைத்தல்' என வேடிக்கையாகக் கூறுவர். ஆயின். ஒரு நூல்பற்றி, இதுவரை என்னென்ன நூற்கள், கட்டுரைகள் வந்துள்ளன என்பதைத் தெளிவாகத் தெரிந்துகொண்டால், அதற்குப் பின்பு நாம் எக்கோணத்தில், எம்முறையில் அந்நூலைப்பற்றி ஆயலாம் அல்லது எழுதலாம் என்ற உணர்வு தோன்றும். இந்நோக்கத்தில், சிலப்பதிகாரத்திற்கு இலக்கண நிலையில் ஆய்வு செய்த காலத்திலேயே, அதுவரை சிலப்பதிகாரம் பற்றி வந்த நூல்களையும் கட்டுரைகளையும் கவிதைகளையும் தொகுத்தல் வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. அப்போது, சிறு நிலையில் அது செய்யப்பட்டது; வெளியிடப் படவில்லை. இப்போது சிலப்பதிகாரத்தை முதன்மையாகக் கொண்டு, தமிழ்க் காப்பியங்களை ஆய்கின்ற ஆய்வாளர், திரு. இரா. காசிராசன் சிலம்பைப் பற்றிய நூல்கள், கட்டுரைகள் அனைத்தையும் படித்து அவை பற்றிய கருத்தையும் முறையாகத் தொகுத்துத் தந்துள்ளார். இது அவருடைய ஆய்வுக்குத் துணைசெய்யும் என்பது ஒன்று. தமிழகத்தில் இதுபோன்று, ஒரு நூல் பற்றிய பல ஆய்வுகளைத் தொகுத்துத் தருவது இத்தகைய பல நூல்களுக்கு வித்திடும் எனக் கருதி, இப்போது இச் 'சிலப்பதிகார ஆய்வடங்கல்' பல்கலைக்கழக வெளியீடாக வருகின்றது.

கேரளப் பல்கலைக்கழகத்தினர், தமிழ்த் துறைக்கு அவர்களால் இயன்ற வகையில் துணைநிற்கின்றனர். ஓர் ஆய்வாளர் தொகுத்த தொகுப்பு முதன் முதலாக இத்துறையினின்றும் வெளிவருவதும் மகிழ்தற்குரியது. அவ்வாய்வாளரைப் பாராட்டுகிறேன்.

இந்நூல், அவர் முதல் முயற்சியாக அமைகின்றது. இது போன்ற தகுதியுடைய, தேவையான பல நூல்களைத் தமிழகத்திற்கு அவர் தருவாரென எதிர்பார்ப்போம்.

அன்பன்,

திருவனந்தபுரம்,
மார்ச்சு 1973

ச. வே. சுப்பிரமணியன்
(ஒப்பம்)

## நன்றியுரை

சிலப்பதிகார ஆய்வடங்கலாகிய இந்நூலைக் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை வெளியீடாக்கித் தமிழ் உலகிற்கு அறிமுகமாகப் பல்லாற்றானும் துணைநின்று, இம்முயற்சியில் என்னைப் பெரிதும் வழிப்படுத்தி, ஊக்குவித்து உரமூட்டி, அணிந்துரையும் நல்கியருளிய என் வணக்கத்திற்குரிய பேராசிரியரும், கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவருமான டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், எம். ஏ., பி. எச். டி. அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றியையும் வணக்கத்தையும் காணிக்கையாக்கிக் கொள்கிறேன். அடுத்து இவ்வாய்வடங்கல் முறையாக வகை பெறக் கருத்துக்கள் தெரிவித்து, அவ்வப்போது வெளிவந்த பல ஆய்வுக் கட்டுரைகள் பற்றி அறிவித்து உதவிய அருமை ஆய்வு நண்பர்கள் திருவாளர்கள் கி. நாச்சிமுத்து, சி. சத்திய மூர்த்தி, அ. திருமால் இந்திரசிங், இலங்கையன், செல்வியர் ஜாஸ்மின் ஆசீர், பெ. ஜெயா ஆகியவர்கட்கும், முதுகலை நண்பர்கள் திருவாளர்கள் டாக்டர் சே. பீ. நசீம்தீன், ஜே. நெல்சன், அ. இராசேந்திரன் ஆகியவர்கட்கும் என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். நூல் அச்சாகுங் காலத்து ஏற்பட்ட பல அச்சுப் பிழைகளைத் திருத்தியமைக்க உதவிய தோழியர், செல்வியர் அ. கமலா, பி. சரசுவதி யாகியவர்கட்கு என் நன்றி.

இவ்வடங்கல் வெளிவர முதற்கருவியாய நூற்கள் தந்தருளிய கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறை நூலகத்தினருக்கும் பல்கலைக் கழக நூலகத்தினருக்கும், திருவனந்தபுரம் பொது நூலகத்தினருக்கும், நாகர்கோயில் தெ. தி. இந்துக் கல்லூரி நூலகத்தினருக்கும் என் நன்றி. இறுதியாக நூல் உரிய காலத்து வெளிவரச் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த நாகர்கோயில் அசிசி அச்சகத்தினருக்கும், நூல் வெளியீட்டிற்கான செலவுத் தொகை முழுமையும் ஏற்றுப் பொருளுதவி செய்த கேரளப் பல்கலைக்கழகத்தினருக்கும் என் நன்றியை உரிமையாக்கி அமைவன்.

இவண்,

இரா. காசிராசன்

# நூலமைப்பு

நூலின் தொடக்கத்தில் சிலப்பதிகாரத்திற்கு இது வரை வந்துள்ள பல பதிப்புக்கள் பற்றிக் குறிக்கப்படு கின்றது. அடுத்த பகுதியாகச் சிலம்பு பற்றிய ஆய்வு நூல், கட்டுரை எழுதிய 'ஆசிரியர் அகர வரிசை' அமை கின்றது. ஆசிரியரின் ஆய்வுத் தலைப்புக்கள், 'எழுதிய நூல் அல்லது கட்டுரை' என்னும் தலைப்பின் கீழ், ஆசிரியர் பெயரை அடுத்து, முறைப்படுத்தப்படுகின்றன. இவ் வாய்வுத் தலைப்புக்களின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ள எண், அவ்வாய்வு, பின்னர் வகைப்படுத்தப்பட்டுள்ள 'தலைப்புக்களின் அகர வரிசை' (Title Index) யில் எத்தனை யாவது எண்ணில் அமைகிறது என்பதைச் சுட்டும். மேலும் இவண் இடம்பெறும் ஆய்வுத் தலைப்புக்களில், தடித்த அச்சில் அமைவன நூற்களையும், மெலிதான அச்சில் இரு மேற்கோள் குறிகளோடு அமைவன கட்டுரைகளையும் குறிக்கும்.

மூன்றாவதாக அமைவது 'தலைப்புக்களின் அகர வரிசை'. இது மூன்று பகுதியாக வகைசெய்யப்பட்டுள் ளது. முதற் பகுதியில் தமிழ் நூற்களும், அடுத்த பகுதியில் தமிழில் வந்துள்ள கட்டுரைகளும், இறுதிப் பகுதியில் ஆங்கிலத்தில் வெளிவந்த நூற்களும், கட்டுரைகளும் அமை கின்றன. இவற்றில் நூற்களைக் குறிக்க இரு மேற்கோள் குறியும், கட்டுரைகளைக் குறிக்க ஒரு மேற்கோள் குறியும் இடப்பட்டுள்ளன.

# நுழை வாயில்

'சிலம்பின் வழித் தமிழ்க் காப்பிய வளர்ச்சியும் மதிப்பீடும்' பற்றி டாக்டர் பட்டத்திற்காக ஆய்வு செய ஓர் அரிய வாய்ப்புக் கிடைத்த ஞான்று, ஆய்வுப் பகுதியைத் திட்டமிட்ட ஒரு வரையறைக்குள் அமைத்துக்கொள்வான் வேண்டி, அது தொடர்பான பல ஆய்வு நூற்களைப் படிக்கின்ற வாய்ப்புக் கிடைத்தது. அது போது என் ஆய்வு மேலாளரும், கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவருமான டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் எம். ஏ., பி. எச். டி. அவர்கள் சிலம்பு தொடர்பான ஆய்வடங்கல் (Bibliography) தயாரிக்கப் பணித்தனர். அம்முயற்சியில் யான் ஈடுபட்ட காலத்து நூல்களும் கட்டுரைகளும் பலவாக விரிந்தன. அது பற்றிப் பேராசிரியர் அவர்கட்டு அறிவித்தபோது, அவர்கள் இதனை நூல் வடிவில் வெளியிடவேண்டும் என்ற தம் விருப்பத்தைத் தெரிவித்ததோடு அமையாது மேலும் பல குறிப்புக்கள் சேர்க்கத் தூண்டினர்கள். இவ்வடங்கல் வெளியீட்டுக்குத் தலைக் காரணம் பேராசிரியரவர்களின் தூண்டுகோலே என்பது புகழ்ச்சியுரையன்று.

இவ் வாய்வடங்கலைக் குறிப்பு விளக்க நூல்தொகையாக (Annotated Biblio graphy) வகைப் படுத்தியதற்குக் காரணம் என்னை எனின், பல திறனாய்வுகளைத் தொடர்ச்சியாகப் படிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்ட ஞான்று அவற்றிற் சில குறைபாடுகள் காண நேர்ந்ததே. பல நூற்களிலும் கட்டுரைகளிலும் சொன்னதையே திரும்பத்திரும்பச் சொல்லும் கிளிப்பிள்ளை ஆய்வுப் போக்குத் தென்பட்டது. மட்டுமன்றி ஓராசிரியர் எடுத்துக் காட்டிய கருத்துக்களையே பிறிதொரு ஆசிரியர் தன் கருத்தாக நிறுவிச் செல்வதையும் பலவிடங்களில் காண நேர்ந்தது. இதனால் அவர்கள் கருத்து திருட்டுச் செய்தார்கள் என்று சொல்ல முடியாது. தனித்தனியாக எழுந்த சிந்தனையின் ஒப்புமைக் கூறுகளே இவை. ஓர் ஆசிரியரின் கருத்துக்களை மற்றவர் அறிவதற்கான வாய்ப்பு இருந்தும், அறிய வேண்டுமென்ற உணர்வு இல்லாத காரணத்தால் இக்குறைபாடு எழுகின்றது. இதுபோன்ற ஒரு நூல் தொகை இருக்குமாயின் இவ்வாறான குறைபாடுகள் நீங்க வழியுண்டு என்ற எண்ணமே இவ்வடங்கல் ஆய்வுச் சுருக்கங்களோடு வெளியிடப்படுவதன் நோக்கமாகும்.

இவ்வடங்கலை முழுமைபெறத் தொகுத்தளித்துள்ளேன் என்று கூற முடியாது. நூற்களில் ஒருபாதியையாவது தொகுத்திருப்பேன் என நம்புகிறேன். கட்டுரைகளைப் பொறுத்தமட்டில் நான்கில் ஒரு பகுதியையாவது தொகுத்திருப்பேன் எனக் கருதுவதுகூட மிகை போலத் தோன்றுகிறது. இந்நூல் தொகையின் தொகுப்பிற்கு இவ்வெளியீட்டோடு முற்றுப்புள்ளி வைத்துவிட விரும்பவில்லை. நூல் வெளிவந்த பின்னரும் இம் முயற்சியைத் தொடர எண்ணமுடையேன். எனவே இவ்வடங்கலைப் பார்க்க வாய்ப்புக் கிடைக்கும் தமிழறிஞர்கள், இவ்வடங்கலில் இடம் பெறாத நூற்கள், கட்டுரைகள் பற்றி அறியின் அருள்கூர்ந்து எனக்கோ, அன்றிக் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைக்கோ அறிவிக்க அன்புடன் வேண்டுவன். மட்டுமன்றி இவ்வடங்கல் அமைப்பு முறையை மாற்றியமைத்தால் சிறப்பாக இருக்குமா என்பது பற்றிய கருத்துக்களை அறிவிப்பின் இதன் அடுத்த வெளியீடு மேலும் பயன் தரத்தக்க வகையில் அமைய ஏதுவாகலாம். நூல் அச்சாகுங் காலத்து இரு கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன. 1. தலைப்புக்களின் அகர வரிசைக்குப் பதிலாக 'பொருள் பற்றிய அகர வரிசை' (Subject Index) அமைத்திருந்தால் நன்றாக இருந்திருக்கும் என்பது. 2. நூல், கட்டுரைகளின் வெளியீடு, ஆண்டு வாரியாக அமைக்கப்பட்டிருக்கலாம் என்பது. இதுபற்றி அறிஞர்களின் கருத்தறிய விரும்புகின்றேன்.

அடுத்துச் சிலம்பிற்கு இதுவரை வந்துள்ள திறனாய்வு பற்றி ஒருசில கருத்துக்களை இங்குக் குறிப்பிட விரும்புகிறேன். தொடக்க காலத்தில் சிலம்பிற்குப் பல பதிப்புக்கள் வெளியிடும் முயற்சி காணப்படுகின்றது. இக்காலப் பகுதியில் சிலப்பதிகாரத்தை அடிப்படையாகக் கொண்டு பல வரலாற்று ஆராய்ச்சிகள் செய்யப்பட்டுள்ளன. மட்டுமன்றிச் சிலப்பதிகாரத்தின் காலம் பற்றிய ஆராய்ச்சி, சேரன் செங்குட்டுவன், கயவாகு, நூற்றுவர் கன்னர், ஆகிய மன்னர்கள் பற்றிய குறிப்புக்கள், சோதிடக் குறிப்புக்கள் கொண்டு எழுந்துள்ளது. அடுத்த நிலையில்

சிலப்பதிகாரத்தை மக்கள் மத்தியில் அறிமுகஞ் செய்யும் முயற்சி டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை, திரு. ம. பொ. சிவஞானம், திரு. ஆர். கே. சண்முகஞ் செட்டியார் முதலானவர்களால் மேற்கொள்ளப்பட்டு வந்திருக்கின்றது. ஆங்கிலத்தின் மூலம் சிலப்பதிகாரத்தை உலகிற்கு அறிமுகப்படுத்தும் முயற்சி திரு. வி. ஆர். எம். தீட்சிதர், திரு அலென் தானியேலு போன்றவர்களால் கையாளப்பட்டுள்ளது. இந்திய மொழிகளில் சமஸ்கிருதம், இந்தி, மராத்தி, மலையாளம் ஆகியனவற்றில் சிலப்பதிகாரம் கவிதை வடிவிலும், உரைநடையமைப்பிலும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. மட்டுமன்றி, இந்தியாவிற்கு அப்பால் உள்ள நாடுகளில் பேசப்பட்டு வருகின்ற ருசிய, செக் மொழிகளிலும் சிலப்பதிகாரம் மொழிபெயர்க்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. இக்காலகட்டத்தில் சிலம்பின் இலக்கிய நயம் சுட்டுகின்ற முகத்தான் பல ஆய்வுகள் வெளியிடப்பட்டுள்ளன. அண்மைக் காலத்தில் வந்துகொண்டிருக்கிற திறனாய்வுகள் சில மேலை நாட்டுத் திறனாய்வுக் கண்ணோட்டத்தோடு அமைகின்றன. சிலப்பதிகாரத்தில் அமைகின்ற இசைக் குறிப்புக்களை அடிப்படையாகக் கொண்டு பல இசை நுணுக்க ஆராய்ச்சிகள் தவத்திரு விபுலானந்த அடிகள் முதலானவர்களால் செய்யப்பட்டுள்ளன. விளக்க வியல் இலக்கண அடிப்படையில் சொல்லடைவு ஒன்று சிலப்பதிகாரத்திற்கு அமைந்துள்ளது. இளங்கோவின் சமயம், குடும்ப உறவு பற்றிய கருத்து மாறுபாடுகளும், சிலம்பின் காலம் பற்றிய கருத்து வேறுபாடுகளும் பல ஆய்வின் கருவாக அமைகின்றன. கண்ணகி வழிபாட்டின் அடிச்சுவட்டைக் காணுகின்ற முயற்சி பல கட்டுரைகளில் காணப்படுகின்றது. இளங்கோவின் பாத்திரப் படைப்புகள் பற்றிப் பல திறனாய்வுகள் வெளிவந்துள்ளன. 'சிலம்பின் கொடிகள்', 'சிலம்பின் பூக்கள்' என்ற இரு நூற்களும், கண்ணகியின் பாத்திரப் படைப்பைத் தத்துவ அடிப்படையில், கண்ணகிக்கு அடிகளால் கொடுக்கப்படுகின்ற பூ, கொடி, ஓவியங்கள் கொண்டு, ஆராய்கின்றன. சிலம்பின் வரிப் பாடல் பற்றிய விரிந்த ஆய்வும் வந்துள்ளது. சிலம்பு கதை நிகழ்ச்சியைக் கருவாகக் கொண்டு பல கவிதை நாடகங்களும்

உரைநடை நாடகங்களும் எழுதப்பட்டுள்ளன. நாட்டு இலக்கியச் (Folklore) செல்வாக்கால் சிலம்பின் கதை பல மாற்றங்கட்குட் பட்டுப் 'பெரிய எழுத்துக் கோவிலன் கதை', 'கோவலன் நாடகம்', இலங்கை மட்டக்களப்புப் பகுதியில் படிக்கப்பட்டு வரும், 'கண்ணகி வழக்குரை'க் குளுத்திப் பாடல்களாகவும், சிங்கள மொழியில் பல கதைகளாகவும் வழங்கப்பட்டு வருகின்றது.

சிலம்பைப் பற்றிய ஆராய்ச்சியில் ஒப்பாய்வு மிகக் குறைவா கவே காணப்படுகின்றது. ஆங்காங்கே பகுதிகளாகச் செய்யப் பட்டுள்ளனவே யன்றி, முழுமை பெறவில்லை. 'சிலம்பும் மேகலை யும்', 'சிலம்பும் பெருங்கதையும்,' சிலம்பும் வடமொழிக் காப்பி யங்களும்,' சிலம்பும் மேலைநாட்டுக் காப்பியங்களும், எனப் பல ஒப்பாய்வுவரின் சிலம்பின் தனித்துவம் பெறப் படுதலன்றித் தமிழ்க் காப்பியங்களின் தனித்தன்மையையும் ஓரளவு வரையறை செய்யத் துணை செய்யலாம். தமிழ்க் காப்பியங்கட்குள்ள ஒப்பு மைக் கூறுகள், வேற்றுமைகள், காப்பியங்களில் வருகின்ற தலை மைப் பாத்திரங்கள் பற்றி முழுமையான ஓர் ஒப்பீடு, காப்பி யங்கள் காட்டுகின்ற பண்பாட்டுச் சூழலில் ஏற்பட்டுள்ள மாற் றங்கள், மொழி நடை ஒப்பாய்வு பற்றி எல்லாம் பெரும்பான்மைத் தமிழறிஞர்கள் கவனம் செலுத்துவதாகத் தோன்றவில்லை வெறு மனே, தனித்தனி நயங்களையும், குறைகளையும், சமய வாதங்க ளையும் சுட்டுவதை விடுத்துப் புதிய முறையில் திறனாய்வுப் போக்கை மாற்றுவது நல்லது. நாட்டிலக்கியத்தின் தாக்கம் சிலம் பில் எந்த அளவுக்குச் செல்வாக்குப் பெற்றுள்ளது என்பது பற்றிய ஆய்வுகளும், மேலைநாட்டு முன்முறை இதிகாசங்கட்கும் (Primitive Epic) சிலம்பிற்கும் தொடர்பு உண்டா? இல்லையா? என்பது பற்றிய தெளிவும்காண அறிஞர்கள் முயற்சி செய்ய வேண்டும் சிலப்பதிகாரமும் திருக்குறளும் என்று ஆராய்ச்சி செய்யத் துணிகின்ற அறிஞர்கள் 'சிலம்பும் நாலடியும்', 'சிலம்பும் பழமொழியும்' என ஆராயத் துணிவதில்லை. தமிழ் ஆய்வு முறை மேலோட்டமாகக் குறிப்பிட்ட சில வட்டத்துக்குள்ளே நிற்ப தாகத் தோன்றுகிறது சங்க இலக்கியம், சிலப்பதிகாரம், சிந்தா

மணி, கம்பராமாயணம், பெரிய புராணம், தற்கால இலக்கியம் என்ற அளவோடு தமிழாய்வு சுருங்கியமைந்து விடுகின்றது. இந்நிலையை மாற்றித் தமிழாய்வை அறிஞர்கள் விரிவுபடுத்த வேண்டும்.

இவ்வடங்கலில் சுருக்கித்தரப்பட்ட ஆய்வுச் சுருக்கம் மேலோட்டமாகத் தலைப்புக்களைப் பார்த்து அமைத்துக் கொள்ளப்பட்டது அன்று. மிகச்சுருக்கமாக அமைய வேண்டிய தேவை ஏற்பட்டதால் சில ஆய்வின் உட்தலைப்புக்கள் மட்டுமே கொடுக்கப் பட்டுள்ளன. ஒவ்வொரு ஆய்வு நூல், கட்டுரைகளின் அடியில் அது பற்றிய என்னுடைய கருத்தையும் குறிப்பிட எண்ணியதுண்டு. அது குறை கூறுதலாக அமையக் கூடாதே என்ற எண்ணத்தில் விடப்பட்டது. அடங்கலில் இடம்பெறும் எல்லா நூற்களும், கட்டுரைகளும் திறனாய்வுக் கண்ணோட்டத்தில் தரமானவை என்று கூற முடியாது புதிய சிந்தனையின்றிப் பல பக்கங்களில் நூல் வெளியிடுவதைவிடச் சிந்தனைத் திறனோடு சில பக்கங்களில் ஒரு கட்டுரை எழுதி வெளியிடின் அது பயனுடைய ஆராய்ச்சிப் போக்காம். இந்நோக்கத்தோடு தமிழறிஞர்கள் செயல்படத் தொடங்கின் தமிழாய்வின் போக்கு புத்துருவம் பெறும்; புதிய திறனாய்வு முறை வளரும். இம்முறையில் தமிழ் இலக்கியத்தை மேலும் வளப்படுத்த அறிஞர்களை வேண்டி அமைகின்றேன்.

இவண்,

*இரா. காசிராசன்.*

# 1. சிலப்பதிகாரப் பதிப்புக்கள்

—:★:—

1 சிலப்பதிகாரம் — பூகார்க்காண்டம்,
[அடியார்க்கு நல்லார் உரை]
மு. ப. 1880. தி. க. சுப்பராயச் செட்டியார்.
விலை. அணா 12.

2 "சிலப்பதிகார மூலமும்,
அரும் பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையும்"
மு. ப. 1892. 1920, 1927, 1944, 1950. 1955, 1960, 1968.
உ. வே. சாமிநாதையர் பதிப்பு.
விலை ரூ. 10–00

3 "சிலப்பதிகார மூலமும்,
ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரையும்"
மு. ப. 1942, 1947, 1950, 1953, 1956, 1959, 1963, 1968.
கழக வெளியீடு, சென்னை — 1.
விலை: ரூ. 11–00.

4 சிலப்பதிகாரம் — புகார்க் காண்டம்.
ஆர். கே. சண்முகஞ் செட்டியார் உரை.
மு. ப. 1946. புதுமலர் நிலையம், கோயம்புத்தூர்.
விலை: ரூ. 3–50.

5 "இரட்டைக் காப்பியங்கள்"
டாக்டர். வ. சுப. மாணிக்கம்.
மு. ப. 1958... 2-ம் ப. 1960.
செல்வி பதிப்பகம், காரைக்குடி.
விலை: ரூ. 6–00.

6 "சிலப்பதிகாரம்"
[புலியூர்க் கேசிகன் தெளிவுரையுடன்]
மு. ப 1958, 1959, 1961, 1962, 1964, 1965, 1967, 1970.
பாரிநிலையம், சென்னை — 1.
விலை: ரூ. 3–50.

7 சிலப்பதிகாரம் (மூலம்)
மு. ப. 1964. லிப்கோ வெளியீடு,
விலை: ரூ 1–50.

8 "சிலப்பதிகாரம் — புகார்க்காண்டம்"
"பொ. வே. சோமசுந்தரனார் விளக்கவுரை"
மு. ப. 1968. கழக வெளியீடு, சென்னை — 1.
விலை: ரூ. 7–00.

9 *"The Silappatikaram" (in English)*
*Translated by V. R. Ramachandra Dikshitar,*
*1st Published 1939.*
*Humprey Mil Ford (Indian Branch)*
*OXFord University Press*

10 *"Shilappadikaram"*
*[The Ankle Bracelet] (English)*
*Translated by, Alain Danielou,*
*1st Pablished in Great Britain: 1967.*
*Geore Allen & Unwin Ltd.,*
*Ruskin House Museam St, London.*

11 சிலப்பதிகாரம் — வஞ்சிக்காண்டம் - [மலையாளம்]
டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்.
மு. ப. 1965. விலை: ரூ. 1–00

12 "சிலப்பதிகாரம்" — (செக்மொழி)
மொழிபெயர்ப்பு: டாக்டர். கமில் சுவெலபில்.

---

# 2. சிலப்பதிகார ஆய்வடங்கல் - ஆசிரியர்

## அகர வரிசை:-

| | ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|---|
| 1 | திரு அகத்தியலிங்கம் ச.— | 1 "குறளும் சிலம்பும்" (98) |
| 2 | ,, அடைக்கலசாமி, எம். ஆர்.— | 1 "சிலப்பதிகாரம்" (130) |
| 3 | ,, அண்ணுமலே, வே. — | 1 "கற்பரசிகண்ணகி" (77) |
| 4 | ,, அப்பனையங்கார், டி என்.— | 1 "சிலப்பதிகார ஆராய்ச்சி" (112) |
| 5 | ,, அப்பாத்துரை, க. — | 1 சிலம்பு வழங்கும் செல்வம்—62. |
| 6 | ,, அரங்கசாமி, ப. — | 1 "காவிரிப்பூம்பட்டினத்துக் கலேவிழா" (90) |
| 7 | ,, அரங்க வேங்கடாசலம் பிள்ளை— | 1 சிலப்பதிகார நாடகம்-31. |
| 8 | ,, புலவர் அரசு. — | 1 சூடாமணித் தெய்வம்—17.<br>2 சிலப்பதிகார வசனம்—38<br>3 "சிலப்பதிகாரம்" (131) |
| 9 | புலவர் அரசுமணி — | 1 "பெண்மை பெற்ற பெருவாழ்வு" (218) |
| 10 | டாக்டர். அருணசலம், ப.— | 1 சிலப்பதிகாரச் சிந்தனை—25. |
| 11 | திரு. அலென் தானியேலு [Alain Danielou] — | 1 Shilappadikaram – 1. [The Anklet Bracelet] |
| 12 | செல்வி. அன்னசெல்வம், அ. — | 1 காப்பியத்தில் முகம்—14. |
| 13 | ,, அன்னி மிருதுல குமாரி தாமசு— | 1 "சிலம்பின் யாப்பமைதி" (177) |
| 14 | திரு. ஆண்டியப்பன், தே.— | 1 கங்கைக் கரையில்—9. |

| | ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|---|
| 15 | திரு. ஆலாவ சுந்தரஞ் செட்டியார், பூ.— | 1 "இளங்கோவடிகள் காட்டும் காப்பியப் பண்பு"(30) |
| | | 2 "முக்காலத் தமிழிசை" (240) |
| 16 | ,, ஆறுமுக முதலியார், ச.— | 1 "கண்ணகி என்னும் கற்புடைத் தெய்வம்" (56) |
| 17 | டாக்டர். ஆறுமுகன், க. — | 1 "முதற்காப்பியத்தின் முரண்தொடை" (242) |
| 18 | திரு. ஆறுமுகனார், அரசு — | 1 "சிலப்பதிகாரம்" (132) |
| 19 | ,, இந்திரா பார்த்த சாரதி— | 1 "கண்ணகி என்ற ஒரு கற்பு இயந்திரம்" (55) |
| 20 | ,, இயேசுதாஸ், த. — | 1 "சிலம்பினைப் போற்றுவோம்" (178) |
| 21 | வித்துவான். இரத்தினம், கா. பொ. — | 1 "கற்பின் தெய்வம்" (79) |
| 22 | திரு. இராகவையங்கார் மு — | 1 சேரன் செங்குட்டுவன்—69 |
| | | 2 "சிலப்பதிகாரம் கூறும் வழக்க ஒழுக்கங்கள்" (152) |
| | | 3 "பத்தினி தேவியைப்பற்றிய சில குறிப்புக்கள்" (209) |
| | | 4 "பத்தனி வணக்கம்" (210) |
| 23 | ,, இராசகோபாலாச் சாரியார், கே.— | 1 கானல் வரி—15 |
| 24 | திருமதி. இராச மாணிக்கம், கை. சி.— | 1 "இரட்டைக் காப்பியங்கள்- ஓர் ஒப்பு நோக்கு" (7) |

| | ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|---|
| 25 | டாக்டர். இராச மாணிக்கனர், மா.— | 1 "சிலப்பதிகாரம்" (133)<br>2 "சிலப்பதிகாரமும் திருமணமும் இல்வாழ்க்கையும்" (156)<br>3 "பூம்புகார்" (217) |
| 26 | திரு. இராசாராம், த. — | 1 "சிலம்பின் சிறப்புக்கள்" (175) |
| 27 | ,, இராமகிருஷ்ணன், எஸ்.— | 1 இளங்கோவின் பாத்திரப் படைப்பு—7<br>2 "சிலப்பதிகாரம்" (134) |
| 28 | ,, இராமச்சந்திர தீட்சிதர், வி. ஆர்.— | 1 The Silappatikaram—2<br>2 "*Ilango Adigal*"—15<br>3 "சிலப்பதிகாரம்" (135) |
| 29 | ,, இராமச்சந்திரன், கோ.— | 1 "வஞ்சிக்காண்டமே வரலாற்றுக்காண்டம்" (248) |
| 30 | ,, இராமச்சந்திரன், பெ.— | 1 "இன்பமும் துன்பமும்" (46) |
| 31 | ,, இராமசாமி. ஏ. — | 1 "சிலப்பதிகாரம்" (136) |
| 32 | ,, இராமசாமி, E. K. – | 1 "*The chorus in Cilappatikaram*-24" |
| 33 | ,, இராமசாமிசாஸ்திரி, K. S. — | 1 "*The Age of The Early Classics*"—22 |
| 34 | ,, இராமசாமிப்பிள்ளை, செ. ரெ.— | 1 "கற்பின் கொழுந்து" (78) |
| 35 | ,, இராமநாதன், வீணை, எஸ்.— | 1 சிலப்பதிகாரத்தின் இசை நுணுக்க விளக்கம் — 30 |

| | ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|---|
| | | 2 *"Ancient Musical Modes in Cilappadi Karam"—9* |
| 36 | திரு. இராமமூர்த்தி, த. — | 1 "சிலப்பதிகாரத்தில் வெண்பாக்கள்" (124) |
| 37 | ,, இராமலிங்கம்பிள்ளை, நாமக்கல். — | 1 "சிலப்பதிகாரமும் சங்கீதமும்" (155) |
| 38 | ,, இராமன், ப. — | 1 "சிலப்பதிகாரம்" (137) |
| 39 | ,, இலட்சுமணசாமி, கே. — | 1 "கோவலனும் மாதவியும்" (105) |
| | | 2 "இளங்கோ வடிகளும் இயற்கையும்" (38) |
| 40 | ,, இலட்சுமணன் சி. — | புலவர் போற்றும் பூம்புகார்ப் பொற்றொடி—75 |
| 41 | செல்வி இலிண்டா. உ. — | 1 "சிலப்பதிகாரம்—ஒரு பெருங்காவியம்" (150) |
| 42 | திரு. இளங்கோ, — | 1 "வங்கத் திருநாளும் வண்டமிழ்ச் சிலம்பும்" (244) |
| 43 | ,, இளங்கோவன், ஜி. சி. — | 1 இளங்கோவின் காதலி—6. |
| 44 | ,, இளங்கோவன், மா. ரா. — | 1 "சிலம்பும் சமுதாய வாழ்வும்" (187) |
| 45 | ,, இளவரசு. சோம. — | 1. 2. "இரட்டைக் காப்பியங்கள்"—8, 9 |
| 46 | ,, இளவழகனர் — | 1 "கற்பு நிலை" (81) |
| 47 | ,, உலகநாதன் மு. — | 1 "மதுரைக் காண்டமும் மன்னவன் சிறப்பும்" (236) |

| | ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|---|
| 48 | திரு. எழில் முதல்வன், மா. — | 1 "இளங்கோவடிகளின் நடை" (37) |
| | | 2 "காவியத்தில் கனவு" (89) |
| | | 3 "மறையவன் மாண்பும் அடிகளின் திறமும்" (227) |
| 49 | செல்வி ஜரின் ராதாபாய் — | 1 சிலம்பு துன்பியல் நாடகம்-56. |
| 50 | திரு. ஃகத்நிவில்லி [*Hugh Niville*] | 1 "*The Story of Kovalan*" — 26) |
| 51 | ,, கணபதி எஸ். — | 1 "கொலைப்பட்ட கோவலனும் வலைப்பட்ட காவலனும்" (99) |
| 52 | ,, கதிரேசன் செட்டியார், பண்டிதமணி. மு. — | 1 "சிலப்பதிகாரக் காப்பிய இலக்கணம்" (115) |
| 53 | ,, கந்தசாமி, வெ. — | 1 "கவுந்தியடிகள் ஒரு கற்பனைப் படைப்பு" (76) |
| 54 | ,, கந்தையா, வி. சி. | 1 "கண்ணகி வழிபாடு" (69) |
| 55 | ,, கபிலன், வெ. — | 1 செந்தமிழ்ச் செல்வம்—67 |
| 56 | செல்வி. கமலாதேவி, எஸ்.— | 1 "மாதவி நல்லாள்" (236) |
| 57 | திரு. கமலேஸ்வரன் K .S. | 1 "*Situation-Action-Relation Analysis in Silambu*" — 20 |
| 58 | ,, கருணாநிதி மு. — | 1 **Tale of the Anklet** - 6 |
| 59 | ,, கன்னிசாமி, சி. து. — | 1 "இளங்கோவடிகள்" (24) |
| 60 | ,, கனகசபை, V. — | 1 **The great Twin Epics of Tamil**—7. |

| | ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|---|
| 61 | செல்வி. கஸ்தூரி — | 1 "இளங்கோவின் சொற்றொடர் அமைப்பு" (42) |
| 62 | திரு. காசிராசன் இரா.— | 1 "சிலம்பின் கதைக் கரு" (174) |
| 63 | ,, காந்திமதிநாதன், தி. வ.— | 1 "பொற்கொல்லன்" (222) |
| 64 | ,, காமாட்சி குமாரசாமி, அ.— | 1 "கண்ணகி" (52) |
| 65 | ,, காஜா முகைதீன், பீ - | 1 "கோவலன்" (103) |
| 66 | ,, கிருஷ்ணசாமி, இரா.- | 1 அடியார்க்கு நல்லார் உரைத்திறன்—1 |
| 67 | டாக்டர். கிருஷ்ணசாமி ஐயங்கார், எஸ். — | 1 சேரன் வஞ்சி—71 |
| 68 | வித்துவான். கிருஷ்ணமூர்த்தி, அ. — | 1 "சிலப்பதிகாரம் மணிமேகலை" (153)<br>2 "மாதவிபாடிய கானற் பாணி" (237) |
| 69 | ,, திரு. குமாரப்பிள்ளை, செய. — | 1 "அடிகள் கண்ட கவுந்தியடிகள்" (1) |
| 70 | செல்வி. குமுதினி — | 1 சிலம்பு மக்கள் காப்பியம்—60 |
| 71 | திரு. குருசாமி, மா. ரா. போ. — | 1 சிலப்பதிகாரச் செய்தி—26<br>2 சிலம்பு வழிச் சிந்தனை—63<br>3 "வஞ்சிக் காண்டம் ஒரு கண்ணோட்டம்" (247) |
| 72 | புலவர். குழந்தை — | 1 "இந்திர விழா" (6) |
| 73 | திரு கேசவன், மு. சி. — | 1 சிலம்பொலி—64 |
| 74 | ,, கோதண்டராமன், ப. - | 1 "இளங்கோ" (16) |

| ஆசிரியர் | | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|---|
| 75 | திரு. கோவிந்தசாமி, பி. எஸ். ஜி. ஜி. — | 1 சிலப்பதிகாரத்தில் ஊழின் வலிமை—28 |
| 76 | செல்வி. சக்திதேவி. இரா. — | 1 "காப்பிய மகள் மாதவி" (87) |
| 77 | திரு. சங்குப் புலவர், தி. — | 1 "சிலப்பதிகாரம்" (138) |
| 78 | டாக்டர். சஞ்சீவி, ந. — | 1 சிலப்பதிகார விருந்து—39<br>2 சிலம்புத் தேன்—55<br>3 "இளங்கோ கூறும் என் கதை" (30)<br>4 "வையையின் வளம்" (252)<br>5 "சிலப்பதிகாரச் சிந்தனைகள் சில" (118) |
| 79 | திரு. சண்முகம், மு. — | 1 சிலப்பதிகாரக் கட்டுரைகள்-23<br>2 "கவுந்தியடிகள்" (73)<br>3 "*Administration and Politics of the Ancient Tamils as Reflected in Silappatikaram*" (8) |
| 80 | ,, சண்முகம்பிள்ளை, மு. — | 1 "சேரன் செங்குட்டுவன்" (191) |
| 81 | ,, சதாசிவப் பண்டாரத்தார், T. V. — | 1 "இளங்கோவடிகள் குறித்துள்ள பழைய சரிதங்கள்" (31) |
| 82 | ,, சதாசிவம்பிள்ளை, ஜி. — | 1 "சிலப்பதிகாரத்திலிருந்து இராமாவதாரம் முதலிய நூல்களில் வந்தன" (125)<br>2 "சிலப்பதிகாரத்திலிருந்து சிந்தனையில் வந்த செய்யுட்கள்" (126) |

| ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|
| 83 திரு. சரவண முதலியார், அ. மு. — | 1 "இளங்கோவடிகள் சாட்டிய சொற்செல்வம்" (29) |
| | 2 "இளங்கோவடிகள் உவமைப் புரட்சி ஒன்று" (35) |
| 84 செல்வி. சரஸ்வதி — | 1 காப்பியத்தில் சிலம்பு–13 |
| 85 திரு. சாம்ராஜ், அ. — | 1 சிலம்புச் செல்வி கண்ணகி—53 |
| 86 ,, சாமி, பி. எல். — | 1 "கண்ணகியும் பகவதி வழிபாடும்" (67. அ) |
| 87 திரு. சாமிமுத்து, ச. — | 1 "சிலப்பதிகாரம்" (139) |
| 88 டாக்டர். சாலை இளந்திரையன், — | 1 சிலம்பின் சிறுநகை – 44 |
| | 2 "சிலம்பு சிலம்பியது" (184) |
| 89 டாக்டர். சிங்காரவேலன், துரை — | 1 சிலம்பொலி – 65 |
| | 2 "இலம்பாடு நாணுத்தரும்" (15) |
| | 3 "உரைசால் பத்தினி" (48) |
| | 4 "சிலப்பதிகாரம் என்பதின் பொருள் யாது?" (149) |
| | 5 "*Pandian Nedunchaliyan — the Symbol of Justice*"–16. |
| 90 வித்துவான், சிங்கார வேலனார், சொ. — | 1 "சேரன் செங்குட்டுவன்" (192) |
| 91 டாக்டர், சிதம்பரநாதன் செட்டியார், அ. — | 1 இளங்கோவின் இன்கவி–5 |
| | 2 சிலப்பதிகாரம்–34 |
| | 3 "சிலம்பில் வென்ற சேயிழை" (171) |
| | 4, 5 "திருக்குறளும் சிலப்பதிகாரமும்" (198, 199) |

| ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|
| | 6 "Cilappatikaram"-10 |
| 92 திரு. சிதம்பரனார், துடிசைக்கிழார், அ. — | 1 "சிலப்பதிகார ஆராய்ச்சி விளக்கம்" (113) |
| 93 ,, சிதம்பரனார், சாமி, — | 1 சிலப்பதிகாரத் தமிழகம்–27. |
| 94 வித்துவான். சிவகுருநாதன், இ. — | 1 "கண்ணகி திருமணம்"(63) |
| 95 திரு சிவஞானம் ம. பொ. — | 1 சிலப்பதிகாரமும் தமிழகமும்–37<br>2 வீரக் கண்ணகி<br>3 "இளங்கோவின் வாரிசு" (44)<br>4 "காப்பிய நிறைவு விழாவும் நீலகேசி உரை வெளியீட்டு விழாவும்" (சொற்பொழிவு) (85) |
| 96 ,, சிவப்பிரகாச சேதிராயர், T. — | 1 "சிலப்பதிகாரத்தில் பாண்டியன் சிறப்பு" (122) |
| 97 ,, சிவப்பிரகாசம், வை. கா. — | 1 "சிலப்பதிகாரம் குடிமக்கள் காப்பியமா?" (151) |
| 98 வித்துவான். சிவலிங்கனார், ஆ. — | 1 சிலம்பு மணிகள் – 61<br>2 "இளங்கோவடிகள் சமயம்" (33)<br>3 "கண்ணகி பெயர்க்காரணம்" (64)<br>4 "கவுந்தியடிகள்" (74)<br>5 "கானல்வரி" (91)<br>6 "கோசிக மாணி" (100)<br>7 "தேவந்தி" (202) |

| ஆசிரியர் | | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|---|
| | | 8 "பத்தினிச் செய்யுள்" (206) |
| | | 9 "பொற்கொல்லன்" (226) |
| | | 10 "மதுராபதி" ( ) |
| | | 11 "மாங்காட்டு மறையவன்" (228) |
| | | 12 "மாடலன்" (230) |
| | | 13 "மாதரி" (231) |
| | | 14 "வசந்தமாலை" (245) |
| 99 | திரு. சிற்சபேசன், கண. — | 1 "போற்றா ஒழுக்கம்" (224) |
| 100 | ,, சீனிவாசன், ரா. — | 1 "இரட்டைக் காவியங்கள்–சிலப்பதிகாரம்" (11) |
| | | 2 "இரண்டு காட்சிகள்" (12) |
| 101 | யோகி. சுத்தானந்த பாரதியார். — | 1 சிலம்புச் செல்வம்–51. |
| 102 | திரு. சுந்தரனார், சா. — | 1 சிலம்பின் மணிகள்—48 |
| 103 | புலவர். சுந்தரேசன், த. — | 1 "பாவை விளக்க வந்த பாவை" (211) |
| 104 | சங்கீதம் சுந்தரேசன், ப.— | 1 "வேனிற்காதை இசைப் பகுதி விளக்கம்" (251) |
| 105 | திரு. சுப்பிரமணிய பிள்ளை, க.— | 1 "சிலப்பதிகாரம்" (140) |
| 106 | ,, சுப்பிரமணிய பிள்ளை, இ. மு. — | 1 "சிலப்பதிகாரக் காலம்" (117) |
| 107 | டாக்டர். சுப்பிரமணியம், வி. ஐ. — | 1 "சிலப்பதிகாரத்தின் கதையமைப்பும் அவலச்சுவையும்" (129) |
| | | 2 "பஞ்சதந்திரமும் சிலப்பதிகாரமும்" (205) |

| ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|
| 108 திரு. சுப்பிரமணியம், க. — | 1 "இளங்கோவடிகளின் அடிப்படைக் கொள்கை" (34) |
| 109 ,, சுப்பிரமணியன், ஆ. — | 1 "சூழ்வினைச் சிலம்பு" (188) |
| 110 ,, சுப்பிரமணியன், கா. — | 1 "மாதவியும் வசந்தசேனையும்" (238. அ) |
| 111 டாக்டர். சுப்பிரமணியன், ச. வே. — | 1 "அடிகளும் அணிநயமும்" (2) |
| | 2 "இளங்கோ மன்றம்" (23) |
| | 3 "ஈரடியும் முத்தமிழும்" (47) |
| | 4 "கானல் வரி – ஒரு திருப்புமையம்" (93) |
| | 5 "சிலம்பில் கால உணர்வு ஒரு குறிப்பு" (165) |
| | 6 "சிலம்பில் மண்ணகமடந்தை" (167) |
| | 7 "சிலம்பில் மலர்கள்" (168) |
| | 8 "சிலம்பில் வஞ்சின மாலை" (170) |
| | 9 **Cilappatikaaram - Describtire grammer with Index"** **3** |
| | 10 *"Treatment of Dreams in Chilappatikaaram-27"* |
| | 11 சிலம்பின் சில பரல்கள் **44 அ.** |
| 112 திரு. சுப்பிரமணியன், ந. — | 1 "சிலம்புச் செல்வியும் சிங்கள இலக்கியமும்" (183) |
| 113 ,, சுப்பு ரெட்டியார், ந. — | 1 "கவிதையும் நீதியும்" (72) |
| 114 புலவர். செந்துறைமுத்து — | 1 "இளங்கோவின் மறதியன்று" (43) |

| ஆசிரியர் | | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|---|
| | | 2 "குணவாயிற்கோட்டம் வாழ்க" (95) |
| | | 3 "சிலம்பில் நாயகன்" (164) |
| | | 4 "புனிதவதி போற்றிய கன்னியர்" (215) |
| | | 5 "பொங்கி எழுந்த புனிதவதி" (220) |
| 115. | திரு. செபரததினம், ஆ. — | 1 "சிலம்பில் ஊழ்வினை" (160) |
| | | 2 "சிலம்பில் கனவு" (162) |
| 116 | ,, செய குமார் — | 1 சிலம்பின் காப்பியப் பண்புகள் — 42 |
| 117 | ,, செயராம் நத்தானியேல், சு — | 1 "சிலப்பதிகாரத்தில் கற்பனை" (120) |
| 118 | ,, செயராமன், ந. வீ. — | 1 "சிலம்புச் சிறப்பு" (180) |
| 119 | ,, செயராமன், வெ. — | 1 "சிலம்பில் முரண்" (169) |
| 120 | ,, செல்லப்பன், கே. — | 1 "*The Architectonics of Silappatikaram*"-23 |
| 121 | ,, செல்லூர்க் கிழார் — | 1 "சிலம்பு" (179) |
| 122 | ,, செல்வத் தாண்டவன், சி — | 1 "மூவகைக் கற்பு" (243) |
| 123 | ,, செல்வநாயகம், வி, — | 1 "சங்கம் மருவிய காலம்" (107) |
| 124 | ,, செல்வ விநாயகன், சாமி. — | 1 "மாதிரி மாண்பு" (232) |
| 124 அ. | திரு. எல். செனர்ட் & பி. ஆர். சுப்பிரமணியன் — | 1 "*Colours in Early Tamil, A Study Based on Cilappatikaram*" 11. A. |
| 125 | திரு. சேசுதாஸ், சி, — | 1 *Silappadikaram of Ilango*—19 |

| ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|
| 126 டாக்டர். சேதுப்பிள்ளை, ரா. பி. — | 1 சிலப்பதிகார நூல்நயம்—32 |
| | 2 சிலப்பதிகார விளக்கம்—40 |
| | 3 "இளங்கோவடிகள்" (25) |
| | 4 "கண்ணகியார்" (66) |
| | 5 "கோப்பெருந்தேவியார்" (102) |
| | 6 "சிலப்பதிகாரத்திலே வள்ளுவர்" (127) |
| | 7 "சிலப்பதிகாரம்" (141) |
| | 8 "சிலம்புச் செல்வம்" (181) |
| 127 திரு. சொக்கலிங்கம், தி. அ. — | 1 காப்பியச் சிந்தனைகள்—12 |
| | 2 "இளங்கோ புகுத்திய புதுமை" (21) |
| 128 ,, சோமசுந்தரம்பிள்ளை, ஜே. எம். — | 1 "Silappatikaram"—17 |
| 129 ,, சௌரி ராசன், பி. — | 1 "கனாத்திறமும் இளங்கோ கலைத்திறமும்" (82) |
| 130 ,, ஞானசம்பந்தன், அ. ச. — | 1 "இளங்கோவும் திருவள்ளுவரும்" (45) |
| | 2 'புதியகோணம்" (212) |
| 131 ,, ஞானசுந்தரம், தெ. — | 1 "பெண்மையின் மூன்று நிலைகள்" (219) |
| 131 அ. திரு. ஞானநாத் — | 1 **Gajabahu and the Gajabahu Synchronism—3-A** |
| 132 டாக்டர். ஞானமூர்த்தி, தா. ஏ. — | 1 "விலைமகளா? கலைமகளா? (250) |

| ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|
| 133 திரு. டாக்டர் நசீம்தீன், சே. பி. — | 1 "சிலம்பில் கனவு" (163) |
| 134 ,, தங்கமணி, சு. — | 1 சிலம்புச் செல்வன் —52 |
| 135 ,, தட்சிணாமூர்த்தி, வெ.— | 1 "கண்ணகி திருமணம்" (63)<br>2 "வஞ்சிக் காண்டம்" (246) |
| 136 கவிஞர். தமிழ்ஒளி — | 1 சிலப்பதிகாரம் காவியமா? நாடகமா?–36<br>2 "இந்திரன் யார்?" (5) |
| 137 ,, தமிழோவியன் — | 1 சிலம்புத் திறன் —54 |
| 138 திருமதி. தரணி பாஸ்கர் — | 1 சிலம்பில் இருசுடர் (159) |
| 139 திரு. தனிநாயக அடிகள், எக்ஸ். எஸ். — | 1 *Epic of the Anklet–Cilappatikaaram & The Characters in the Epic of the Anklet* 12 |
| 140 திருமதி. தாமரைக் கண்ணியம்மையார் — | 1 "இளங்கோவடிகள் கைவண்ணம்" (32)<br>2 "சில அழகிய இலக்கியக் கடிதங்கள்" (111) |
| 141 திரு. தாமோதரன், கு. — | 1 "நெஞ்சையள்ளும் சிலம்பு" (203) |
| 142 வித்துவான். தியாகராசன், சு. — | 1 "திருக்குறளும் சிலப்பதிகாரமும்" (200) |
| 143 திரு. திருகூட சுந்தரம், பொ. — | 1 சிலப்பதிகாரம்—35 |
| 144 ,, திருஞானம், வெண்பாவூர், பொ. — | 1 "சிலப்பதிகாரம்"—(143) |

ஆசிரியர் — எழுதிய நூல் அல்லது கட்டுரை

145 ,, வித்துவான்.
திருநாவுக்கரசு, விசு. —1 சிலப்பதிகாரக் காட்சிகள்—24
2 "கண்ணகி" (53)
3 "சிலப்பதிகாரத்தில் நகைச் சுவை" (121)
4 "மாதவி உள்ளம்" (233)

146 திரு. திருமால்
இந்திரசிங், அ, —1 மாலை வர்ணனை — 78
2 "கண்ணகி வழக்குரைத் தது எப்போது?" (68)
3 "சென்ற கலன் எது?" (190)

147 புலவர். திருமுதுகுன்றம், —1 "கண்ணகி சிலம் பிந்த காரணம்" (59)

148 ,, திருமேனி, கு. —1 கோவலன்—19
2 தெந்தமிழ்ப் பாவை—72
3 நாடகச் சிலம்பு—73
4 பூம்புகார்ப் பொற்றொடி—76
5 "சலம்புணர்க்கொள்கைச் சலமதி மாதவியா?" (110)

149 டாக்டர் துரை
அரங்கசாமி, மொ. அ. —1 "காவியச் சோலையில் இளங்கோவின் இதயம்" (88)
2 "சிலம்பில் ஒருநாள் கூத்து" (161)
3 "சிலம்பு நெறி" (185)
4 "மாதவியைக் கோவலன்" (239)

150 திரு. துரைசாமிபிள்ளை,
ஞா. சா. —1 "சிலப்பதிகாரம்" (143)

151 ,, துரைசாமிபிள்ளை,
ஔவை. சு. —1 இளங்கோவடிகள் அருளிய சிலப்பதிகாரச் சுருக்கம்—4

| | ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|---|
| | | 2 முப்பெருங் காவியங்களில் ஒன்ருன சிலப்பதிகார ஆராய்ச்சி–*79* |
| | | *3* "இளங்கோ கண்ட இயற்கை (*19*) |
| *152* | ,, தேசிகன், ஆர். எஸ்.– | *1* "*From the Epic of the Anklet*" — *13* |
| *153* | ,, நடராச சர்மா, த. — | *1* இலக்கியச் சிலம்பு–2 |
| | | *2* "கோப்பெருந் தேவி" (*101*) |
| *154* | ,, நடராசன், சு. வே. — | *1* செஞ்சிலம்பு—*66* |
| | | *2* "கலை உள்ளம்" (*71*) |
| *155* | ,, நாச்சியப்பன், சி. என். — | *1* கோவலன் மாதவிபால் மனமிழந்ததேன்?–20 |
| *156* | செல்வி. நிர்மலா, த. — | *1* "சிலப்பதிகார மும்மைச் சிறப்பு" (*157*) |
| *157* | திருமதி. நிர்மலா ராமச்சந்திரன் — | *1* "*Classical Dance of the Ancient Tamils*—*11* |
| *158* | திரு. பகலவன் — | *1* சிலம்பின் ஆசிரியர் யார்?—*41* |
| *159* | செல்வி பகவதியம்மாள் — | *1* சிலப்பதிகாரப் பெண்பாத்திரப் படைப்பு மாண்பு—*33* |
| *160* | திரு. பஞ்சாப கேசவ ஐயர், எ. எஸ். — | *1* **Kovalan and Kannaki-5** |
| *161* | திரு. பரந்தாமனுர், அ. கி.— | *1* "கண்ணகி காப்பியம்" (*58*) |
| | | *2* "தண்டமிழ் இலக்கியத்தில் தென்மதுரை" (*194*) |
| *162* | ,, பரமசிவானந்தம், அ. மு.— | *1* "இளங்கோவின் ஏட்டில்" (*40*) |
| | | *2* "இளங்கோ பொய்சொல்ல வில்லை" (*22*) |

| ஆசிரியர் | | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|---|
| | | 3 "கடவுளர் போற்றும் தெய்வம்" (51) |
| | | 4 "கண்ணகி செய்தது தவறு?" (61) |
| | | 5 "காப்பியங்கள்" (83) |
| | | 6 "சிலப்பதிகார உரைநடை" (114) |
| | | 7 "மாதவி மாண்பு" (238) |
| 163 ,, பரிமணம், அ. மா. | — | 1 "சிலம்பில்காணும் வழிபாட்டுப் புதுமை (173) |
| 164 வித்துவான். பார்வதியம்மையார், சிவ | — | 1 "இலக்கியப் பெண்களின் இல்லற மாண்பு" — (13) |
| 165 திரு. பாரதிதாசன் | — | 1 கண்ணகி புரட்சிக் காப்பியம் 10—அ |
| 166 ,, பாரதியார், எஸ். எஸ். | — | 1 கண்ணகிமணம் மறையோர் மன்றலா? காதற்கற்பா?" (65) |
| 167 ,, பால்ராஜ் | — | 1 சிலம்பில் முப்பொருள் — 49 |
| 168 டாக்டர். பாலசுப்பிரமணியன், சி. | — | 1 "கானல்வரி" (93) |
| | | 2 "சங்கம் மருவிய காலம்-சிலப்பதிகாரம்" (108) |
| | | 3 "சிலப்பதிகாரத்தில் வரும் போர்க்களங்கள்" (123) |
| | | 4 "விதியின் விளையாட்டு" (249) |
| 169 திரு பாலுசாமி, ந. | — | 1 "சேரன் செங்குட்டுவன்" (193) |
| 170 செல்வி. பிளாரன்சுகேதரின், மு. | — | 1 "சிலம்பும் பரணியும்" (186) |

| ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|
| 171 திரு. புலியூர்க்கேசிகன் — | 1 சிலம்பும் வாழ்வும் — 59 |
| 172 ,, பெருமாள், ஏ. கே. — | 1 "அவலம் பொங்கும் இரண்டே அடிகள்" (3) |
| 173 டாக்டர். பெருமாள், ஏ. என். — | 1 "தமிழன் காத்த நீதி"(195) |
| | 2 "மாதவி சேற்றிலொரு செந்தாமரை" (235) |
| 174 திரு. பெருமாள், தே. ப. — | 1 "சிலப்பதிகாரமும் அவலச் சுவையும்" (154) |
| 175 ,, பெருமாள். வ. — | 1 "சிலம்புச் செல்வம்" (182) |
| | 2 "*Silappatikaram-From the cultural point of view* - (8) |
| 176 ,, பொன்னுசாமி, செ. — | 1 "நெடுஞ்செழியன்" (204) |
| 177 ,, மகாதேவன், கே. எஸ். — | 1 "சிலப்பதிகாரமும் வெள்ளிக்கிழமையும்" (158) |
| 178 ,, மணிகண்டராமன், சிவ. — | 1 "இளங்கோவின் குறை" (41) |
| 179 ,, மணிமொழியன், சுப. — | 1 "பொற்கொடியின் புரட்சி" (221) |
| 180 ,, மதுரை முதலியார், கு. — | 1 சிலப்பதிகாரக் கட்டுரைகள்—23 |
| | 2 "சிலப்பதிகாரம் (144) |
| 181 ,, மயிலை சீனிவேங்கடசாமி — | 1 சங்க காலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள்—21 |
| | 2 சேரன் செங்குட்டுவன்—70 |
| | 3 "இளங்கோவடிகளின் கவிதை நயம்" (36) |

| ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|
| | 4 "பத்தினிச் செய்யுளும் கண்ணகியும்" (207) |
| | 5 "மாதவி காவிரிப்பூம் பட்டினத்துக் கலைச்செல்வி (234) |
| 182 ,, மரிய அந்தோணி, வி. — | 1 "கண்ணகி சீற்றம்" (60) |
| 183 ,, மறைமலையடிகள் — | 1 "கண்ணகி கதை" (57) |
| 184 திருமதி. மாசிலாமணியம்மையார், மேரி. — | 1 "ஒரு பெருங்காவியம் தந்த இரு பெண்மணிகள்" (50) |
| | 2 "திங்களைப் போற்றுதும்" (197) |
| 185 டாக்டர். மாணிக்கம், வ. சுப. — | 1 "இளங்கோ" (17) |
| | 2 "எந்தச் சிலம்பு" (49) |
| | 3 "சிலப்பதிகாரத் திறன்" (128) |
| 186 திரு. மாணிக்கவாசகம், தி. — | 1 செந்தமிழ்ப் பாவை—63 |
| 187 ,, மாயாண்டி பாரதி — | 1 "இலக்கியவீதியில்— சிலப்பதிகார மானம் (14) |
| 188 ,, மார்க்க பந்து சர்மா, எஸ். ஆர். — | 1 சிலம்பின் கொடிகள்—43 |
| | 2 சிலம்பின் தருதி—45 |
| | 3 சிலம்பின் பாயிரம்—46 |
| | 4 சிலம்பின் பூக்கள்—47 |
| | 5 சிலம்பின் ரசனை—50 |
| | 6 சிலம்பும் மேகலையும்—58 |
| 189 புலவர். மாரிமுத்து, அ. — | 1 "கண்ணகி" (54) |
| 190 டாக்டர். மீனாட்சி சுந்தரனார், தெ. பொ. — | 1 கானல்வரி—16 |

| ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|
| | 2 குடிமக்கள் காப்பியம்—18 |
| | 3 "காப்பிய நோக்குகள்" (86) |
| | 4 "குடிமக்கள் காப்பியம்" (94) |
| | 5 "குறள்வழி இளங்கோ" (97) |
| | 6 "சங்கப் பாடலும் சிலப்பதி காரமும்" (106) |
| | 7 "சிலப்பதிகாரம்" (145) |
| | 8 "*Story of the Anklet*" (21) |
| 191 திரு. முதலியார், வி. எஸ் — | 1 "*Gleanings From the Silappatikaram*" (14) |
| 192 ,, முருகசாமி, தெ. — | 1 "கோவலனின் பாராட்டுரை" (104) |
| 193 ,, ரங்காச்சாரி, வெ. க. — | 1 "செங்குட்டுவன்" (189) |
| 194 செல்வி. ஃஸான், சா. — | 1 சிலப்பதிகாரத்தில் பொருளாதாரம்—29 |
| 195 திரு. வடிவேலு, த. — | 1 "பூங்குன்றனும் இளங்கோவும்" (216) |
| 196 ,, வரதராச ஐயர், இ. எஸ். — | 1 "சிலப்பதிகாரம்" (146) |
| 197 டாக்டர். வரதராசனர், மு. — | 1 இளங்கோவடிகள்—3 |
| | 2 கண்ணகி—10 |
| | 3 மாதவி—77 |
| | 4 **Ilango Adigal-4** |
| | 5 "புறக்கணிப்பு" (214) |
| 198 திரு வளவன்பாண்டியன் — | 1 "இளங்கோ ஒலிக்கும் சிலம்பு" (18) |

ஆசிரியர் — எழுதிய நூல் அல்லது கட்டுரை

199 ,, வானமாமலை, ந. —1 "The Folk Motif in Silappatikaram" (25)
2 "சிலப்பதிகாரம்பற்றி இளங்கோ" (152 அ.)

200 ,, விசுவநாதம், கி. ஆ. பெ. —1 "கற்பு" (80)

201 ,, விமலானந்தம், மது. ச. —1 சிலம்புப் புதையல்—57
2 "இரட்டைக் காப்பியங்கள் — சிலப்பதிகாரம்" (10)
3 "கவுந்தியடிகள்" (75)
4 "சிலம்பிலே செங்குட்டுவன்" (172)
5 "தென்னவன் தீதிலன்" (201)
6 "மாடல மறையோன்" (229)

202 டாக்டர். வீராசாமி, தா. வே. —1 "சிலம்பில் பெண்மை" (166)
2 "தலைமக்கள் கொலை" (196)
3 "புவியரசு துறந்த கவியரசு" (213)

203 திரு. வீரபத்திரன், ஆர். —1 "இளங்கோவடிகள்" (26)
2 "கண்ணகியின் வழக்குரை" (67)

204 ,, வேங்கட கிருஷ்ண ஐயங்கார், தி. —1 உரைநடைச் சிலம்பு—8

205 ,, வேங்கடசாமி, மு. —1 "சயந்தனும் தலைக்கோலும்" (109)

206 ,, வேங்கடசாமி நாட்டார், ந. மு. —1 கண்ணகி வரலாறும் கற்பு மாண்பும்—11
2 "இளங்கோவடிகளும் பொருள் இலக்கணமும்" (39)

| ஆசிரியர் | எழுதிய நூல் அல்லது கட்டுரை |
|---|---|
| | 3 "முடங்கல்" (341) |
| 207 ,, வேங்கடராமச் செட்டியார், செ. — | 1 "கம்பரின் சிலப்பதிகார நினைவுகள்" (70) |
| | 2 "சிலம்பில் முச்சுவை" (176) |
| 208 ,, வைத்திலிங்கன், செ. - | 1 "காப்பிய ஓட்டத்திலே இளங்கோவின் கற்பனை ஓட்பம்" (84) |
| | 2 "குல மகளும் நிலமகளும்" (96) |
| | 3 "சிலப்பதிகாரக் காப்பியக் கோயில் ஓர் எழில் ஓவியம்" (116) |
| 209 ,, வையாபுரிப்பிள்ளை, எஸ். — | 1 "சிலப்பதிகாரத்தில் கண்ட ஓர் இலக்கண வழக்கு" (119) |
| | 2. 3. "சிலப்பதிகாரம்" 147, 148. |
| | 4 "*Silappadikaram and Manimekalai*" (17-A) |
| 210 ,, ஜகந்நாதன், கி. வ. — | 1 (துறவரசர்) "இளங்கோ வடிகள்" (27) |
| | 2 "பத்தினித் தெய்வம்" (208) |
| 211 ,, ஜீவபந்து, ஸ்ரீபால், டி. எஸ். — | 1 இளங்கோவடிகள் சமயம் யாது — 4. அ |
| 212 பல்லோர் தொகுப்புக் கவிதை — | 1 புகாரில் ஒருநாள்—74 |
| 213 ஆசிரியர் பெயர் அறியப் படாதன — | 1 "ஆடரங்கம்" (4) |
| | 2 "இளங்கோவடிகள்" (28) |

## 1. அடியார்க்கு நல்லார் உரைத்திறன்

**இரா. கிருஷ்ணசாமி.**

1963. எம். ஏ. (தமிழ்) தேர்வு ஆய்வேடு,

கேரளப் பல்கலைக் கழகம்.

இவ்வாய்வு சிலம்பு காவிய உரைநூலார் அடியார்க்கு நல்லாரின் உரைத்திறன் பற்றியது. அன்னார் மேற்கோள் காட்டிய இலக்கியச் சான்றுகள், பொருள் செய்யுங் காலத்துச் சொற்களை இலக்கண அடிப்படையில் பகுத்து அதன் இலக்கணங் கூறிப் பொருள் செய்திறன், கட்டிடக்கலை, புராணக் கதை முதலான பல செய்திகள் காட்டும் பான்மை, அரும்பதவுரையார்-அடியார்க்கு நல்லார் கொண்டுள்ள பாடபேத வேறுபாடு, இருவர் உரைத்திறன் ஒப்பிட்டு மாறுபாடு சுட்டல், நாடக அரங்கக் கலை, இசை, நடனம் பற்றிய நுண்கலைப் புலமை-இவையென எடுத்துக்காட்டி, அன்னாரின் உரை சிலம்பு காவியத்திற்கு ஊட்டும் புது மெருகும், அவ்வழித் தமிழிசை, தமிழ்க்கலை பெற்ற நிலையுயர்வு சுட்டிக்காட்டும் முகத்தான் ஆய்வமைகின்றது.

## 2. "இலக்கியச் சிலம்பு"

**நடராச சர்மா**

மு. ப. 1972. வி. உ. செயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோவில்

விலை: ரு. 3·75

இலக்கியச் சிலம்பு, உரைசால் பத்தினி (கோப்பெருந்தேவி-பாண்டியன்), கூற்றத்தூதன் (பொற்கொல்லன்), நாவலந்தணன் (மாடலமறையோன்), மாதரி, பெருங்கற்பினள். (மாதவி), பாண்டியன் நெடுஞ்செழியன், கவுந்தி—யாகியார் பாத்திரப் படைப்பு பேசப்படுகின்றது. மாதவியின் ஊடலும், மாதேவியின் ஊடலும், முதற்காப்பியம், சிந்தனைச் சிற்பி (இளங்கோ) தலைப்புக்கள் — பொதுநிலையில் சிலம்பு பற்றிப் பேசும். 'சிலம்பில் ஒருநாள்'— கட்டுரை—கொலைக்களக் காதை முதல் அழற்படு காதை ஈறுகவுள்ள அனைத்து நிகழ்ச்சியும் ஒருநாள் நிகழ்ந்தனவௌக் குறிக்கும். 'உரைசால் பத்தினி' கட்டுரை தவிர ஏனையவை சிறப்புடை போக்கினவல்ல.

## 3. "இளங்கோவடிகள்" [சொர்ணம்மாள் சொற்பொழிவுகள்]

டாக்டர் மு. வரதராசனுர்.

1960. அண்ணுமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணுமலை நகர்.

தமிழர், கலைஞர், அறவோர் என்ற முத்தலைப்பில் நூலடங்கும். சிலம்பின் காலம் பற்றிய பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்களின் கருத்துக்கள் சில காரண காரியத்தொடு மறுக்கப்பட்டுச் சிலம்பின் காலம் சங்க கால இறுதி நிலை—கி. பி. 2–ம் நூற்றுண்டென நூல் மொழியும். அடுத்து காவிய மரபாகிய நால்வகை நில வண்ணனை புனைதல், விழா, தொழில் முதலானவற்றில் மன்னர் வாழ்த்தும் மரபு — இவை இளங்கோ காவிய வழிக் காட்டப்படுவன. இறுதி நிலையில், நாட்டுப் பாடல்கட்கு இலக்கிய வடிவம் தந்த இளங்கோ கைவண்ணம், துன்ப, இன்ப நிகழ்ச்சியை ஒப்புமை காட்டிச் செல்லுமவர் கலைத்திறன், கோவலன், கண்ணகி, மாதவியார் பண்பு நலன் மிக்கோங்குமிடம், சூழ்நிலைக்கேற்ப மாறுபாட்டானமையும் இளங்கோவின் நடை மாட்சிமை, இவை காட்டுக்களால் விளக்கப்பெறுவன. ஆசிரியர் முடிப்பாக 'நல்லவர்களிடை ஏற்படும் போராட்டம், சிக்கல் கொண்டு காவியம் இயற்றி வெற்றிபெற்றுள்ளார் இளங்கோ; அன்னரின் உயர்ந்த அறவுள்ளமே சிலம்பு காவியச் செம்மைக்கு ஏது' என அமையும்.

## 4. "இளங்கோவடிகள் அருளிய சிலப்பதிகாரத்தின் சுருக்கம்"

ஔவை சு. துரைசாமி பிள்ளை

மு. ப. 1942. கழக வெளியீடு, சென்னை-1.

சிலம்பின் முப்பது காதைகளின் சுருக்கம் எளிய உரைநடையில் இயல்கின்றது. நூலின் முன்னுரை சிலம்பு காவிய அறிமுகக் கட்டுரையன்ன வமைந்து, நூலார் (இளங்கோ) காலம், சமயம், நூல் வரலாறு, நூற்பொருள், நூற்பயன், நுவலுந்திறன், நூற்புணர்ப்பு, பாத்திரப் படைப்பு, நூல் நுவலும வரலாறு சில, இசை நாடகக் குறிப்புக்கள், சில வழக்க ஒழுக்கங்கள்—பற்றிப்

பேசும். 'இளங்கோ சமயம் சைவம். இவர்தம் நூல் படிப்போர்க்கு அறிவு நலமும், ஒழுக்க நலமும், அறவுணர்வும் பெருக விளங்கும் பேரிலக்கியம். சிலம்பில் 'காதை' என வழங்குவ 23 காதைகள். இவை வேற்றிசை விரவாச் செந்தூக்குத் தனிப் பாட்டாக இருத்தலின் ஒரு தனிப் பாட்டைக் காதை என்று வழங்கல் முறை எனத் தெரிகிறது. கோவலன், கண்ணகி மாதவியாரிடம் கொண்ட காதல் உயிர்க்காதலன்று. தொல்காப்பியனார் செப்பிய, சங்க நூலார் உறுத்திய களவு மணம் சிலம்பின் காலத்தில்லை.'—இவை இந்நூலார் துணிபு.

## 4. அ) "இளங்கோவடிகள் சமயம் யாது?"

ஜீவபந்து டி. எஸ். ஸ்ரீபால்

மு. ப. 1957. பாரி நிலையம், சென்னை-1

விலை: ரூ: 1·50

வைதீக சமயத்தைத் தாயாகக் கொண்ட சைவம், வைணவம், கபாலிகம், வாமம்—இவற்றிற்குரிய நான்மறை அருளறத்தின்பாற்பட்டதன்று; தொல்கூறும் நான்மறை அருளறத்தின் பாற்பட்டது. இதுவே சமண சமய நெறி. அந்தமில் இன்பம் (சிலம்பு: வரம்) சமணத்தின் மோட்சநிலை. 'கடவுளர்' என்பது சமணத்துறவியையே குறிக்கும்; "அடிகள்" என்ற சொல்லும் அஃதே. 'நாயனர்' — பெயரும் சமணத்திற்குரியது. 'ஸ்ரீ'— அடை முதற்கண் சமண கோயிற்கே அடையாகிற்று. 'திருக்குணவாயில்', 'கோட்டம்' என்பன சமண கோயிலையே குறிக்கும். 'தேவந்தி' 'காமக்கோட்டம்' ஆடுதும் என்றது வைதிக நெறியாகலின் அது மறுக்கின்றாள் கண்ணகி. சைவர்கள் பக்தியை வளர்த்தார்களன்றி ஒழுக்கத்தை வலியுறுத்தவில்லை. சமணம் ஒழுக்கம் வலியுறுத்துவது. சேக்கிழார் கறவை முறை செய்தோன் (பழமொழி–நானூறு) கதையை (சமண) யும், இப்ராஹீம் கதையையும் (சிறுத்தொண்டர் புராணம்) சைவக் கதையாக்கிவிட்டார். இளங்கோ பிற சமயங்களைப் போற்றினும் சமணக் கொள்கைகளையே விரிவாகவும் விளக்கமாகவும் கூறிச் செல்கின்றார். கோவலன் கண்ணகி–புகார் நீங்கிப் பல கடவுளரை வலஞ்செலக்காட்டிய அடிகள் சமணக் கடவுளை வணங்கிச் செல்வதைக் காட்டுகின்றார். இடைவழியில் பஞ்சநமஸ்காரம் – சமண

மந்திரம், (மொழிப் பொருள் தெய்வம்) தியானிக்கின்றனர். 'பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலாவது, அருபியாயுள்ள சித்தபரமேஷ்டியின் கோயில். 'வைதீகப் பார்ப்பர் மறக்களத் தந்தணர்; சமணப் பார்ப்பனர் அறக்களத்தந்தணர். மாடல மறையோன் அறக்களத்தந்தணனாய சமணன். எனவே பிற அந்தணரை வணங்காக் கோவலன் அவனை வணங்குகின்றான். அவன் அறங் கேட்டு அறக்கள வேள்வி செய்த செங்குட்டுவன் சமணன். 'செஞ்சடைவானவன்' – பகவான் விருஷப தேவரையே குறிக்கும். கவுந்தி படைப்பு, சாரணர் அறவுரை, இளங்கோ இறுதி அறவுரை, 'நற்காட்சி' 'தெய்வம் தெளிமின்' என்பது, இவை இளங்கோவைச் சமண சமயத்தர் எனக் காட்டும் சான்றுகள்.

## 5. "இளங்கோவின் இன்கவி"

**டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார்**

இ. ப. 1969. நாவலர் புத்தக நிலையம், மதுரை-1.

விலை: ரூ: 2·75

இளங்கோவின் இன்கவி, பத்தினிக் கடவுள், கண்ணகி மதிநலன், சிலம்பில் வென்ற சேயிழை, தென்னவன் மகள், மாதவியின் கானற்பாணி, கோவலன் கலையார்வலன், சிலப்பதிகாரமும் கலையும், சிலம்பிற் பரதவர், 'சிலப்பதிகாரம் முன்னும் பின்னும், என்னும் கட்டுரைத் தொகுப்பு நூல். இறுதிக் கட்டுரைகள் நான்கு சிலம்பு பற்றியமையாது பிறநூல் பற்றியமைகின்றன. 'உலக இயல் (மக்கள்) காட்ட உலக இருள் மறைத்து ஒளியூட்டிக் காட்டுகிறார். மாந்தருள் ஒருத்தியாய கண்ணகியே மாந்தர், தேவர், முனிவர்களால் போற்றுறும் பத்தினியாகிறாள். கணவனையன்றிக் காவலனையும் சிலம்பில் வென்ற சேயிழை கண்ணகி. சிலம்பு காவியப் பெருமைக்கு மாதவியின் கானற் பாணியே உயிர்நாடி. சிலம்பிற்கு முன்னுள்ள இலக்கியங்கள் சிலம்பிற்கு அடிவரைச்சட்டம் போலமைந்துள. பிற்பட்ட இலக்கியம் சிலம்பை அடியொற்றி எழுந்தனவோ வெனக் கருதுமாறு உள்ளன.' இவை இவவாசிரியர் முடிபு.

## 6. "இளங்கோவின் காதலி" (நாடகம்)

**ஜி. சி. இளங்கோவன்**

மு. ப. 1971. அன்ன பூர்ணு பதிப்பகம்,

திருப்பனந்தாள், தஞ்சை மாவட்டம்.

விலை: ரூ. 4-00

நற்சோணை, இமயவரம்பன், சேரன் செங்குட்டுவன், வேண்மாள், இளங்கோ, சாத்தனர், வில்லவன் கோதை, கனகவிசயர்கள், சஞ்சயன், நூற்றுவர் கன்னர் - ஆகிய படைப்புக்கள் சிலம்பை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்படுவன. இளங்கோவடிகள் பற்றிய கற்பனைக் கதையாக நாடகம் அமைகின்றது இளங்கோவிற்குக் காதலி இருப்பதாகவும், நிமித்திகன் உரை கேட்டுத் துறந்த இளங்கோவின் காதலி பலபட வருந்த, இளங்கோ ஆறுதல் கூறுவதாகவும் - இதுபோன்ற பல புதுமைகள் நாடகத்துள் இடம்பெறுகின்றன. உரை நடை நாடகம் இளங்கோவின் காதலி.

## 7. "இளங்கோவின் பாத்திரப் படைப்பு"

**எஸ். இராமகிருஷ்ணன்**

மு. ப 1964. மீனுட்சி புத்தக நிலையம், மதுரை — 1.

விலை: ரூ. 3-50

இளங்கோ செங்குட்டுவன் தம்பியல்ல. முற்பட்ட வரலாற்றை இளங்கோ பாடுகின்ருர். கண்ணகி கதை சங்க இலக்கியம் (நற்றிணை) கூறும் 'திருமாவுண்ணி' கதையின் வளர்ச்சி. கி. பி. 5-ம் நூற்ருண்டிற்கு முன் சிலம்பு தோன்றியிருக்க வேண்டும். இளங்கோவின் சமயம் சமணமாயினும், சமயப் பொது நோக்குடையவர். இவை தொடக்க நிலையிற் பேசப்பட்டு அடுத்துக் காவிய அமைப்பு பேசப்படுகின்றது. காப்பியத் தலைவன் கோவலன் மாதவி பாற்சென்றது தசையின் நசையால். பின் அவனின் மனவளர்ச்சி — திருந்திய நிலையில் சாவு வரல் பேசப்படும். துணைப் பாத்திரங்களாக மாதவி, செங்குட்டுவன், கவுந்தியடிகள் படைப்பு ஆய்வு பெறுகின்றன. இறுதிநிலையில் காப்பியத் தலைவி

கண்ணகியின் தனித்தன்மை, பதிபக்தியும் பரமன் பக்தியும், பெண்மையின் பெருமை, செம்மை சேர் சீற்றம், அறப்புரட்சி, மங்கை முன் மதுராபதி, பத்தினித் தெய்வம் – எனும் பொருள் சேர் தலைப்பு வழிக் கண்ணகியின் பாத்திரப் படைப்பு, பண்பு நலன் ஆய்வு பெறுகின்றது.

## 8. "உரைநடைச் சிலம்பு"

**தி. வேங்கட கிருஷ்ண ஐயங்கார்**

மு. ப. 1970. வானதி பதிப்பகம், தி. நகர். சென்னை 17.

விலை: ரூ 6-00

சிலம்பு காவியப் பதிகம் தொடங்கி இறுதிக் கட்டுரை வரையுள்ள எல்லாப் பகுதிகட்கும் முழு அளவில் பாடல் அடிகள். இடை விரவா வண்ணம் உரை வரையப்பட்டுள்ளது. இறுதி நிலையில் மனப்பாடம் செயத்தகும் சிறப்புடைப் பாடல் சில கொடுக்கப்பட்டுள்ளன. நூன் முகப்புரைக் கண், சிலம்பின் சிறப்பு, நூலார் வரலாறு, சமயம், காலம், உரைகள், உரையார் (அரும் பதவுரையார், அடியார்க்கு நல்லார்) வரலாறு சுருங்கிய அளவான் அமைந்துள. இளங்கோ சமயம் சைவம். காலம் கி. பி. 2–ம் நூற்றுண்டு. அடியார்க்கு நல்லார் உரை கானல் வரி, வழக்குரை காதை முதல் இறுதிவரையுள்ளிட்ட பகுதி – இவற்றிற்குக் கிடைத்திலது. 'நிரம் பையர் காவலர்' அடியார்க்கு நல்லாரின் மாற்றுப் பெயர். 'பொப் பண்ண காங்கெயர் கோன்' பொருட் கொடை நல்கி இவ்வுரை எழுதத் துணைக் காரணர் ஆயினர். இவை இந்நூல் முகப்பில் ஆசிரியர் தரும் செய்திகள்.

## 9 "கங்கைக் கரையில்"

**தே. ஆண்டியப்பன்,**

மு. ப. 1964. ரத்ன பதிப்பகம், ஸ்ரீவைகுண்டம்.

விலை: 65 பை.

சேரன் செங்குட்டுவன், குறவர் வந்தனர், கண்ணகி என்னும் கற்புத் தெய்வம், சிலையமைக்கும் திட்டம், படைதிரண்டது

பயணம் தொடர்ந்தது, நீலகிரியில் இளைப்பாறினன், சஞ்சயன் தூது வந்தான், காவலன் புரிந்த கடும்போர், இமயமலைக்கு வீரர், நீராட்டும் பாராட்டும், மாடலன் வந்தான், தமிழ் நாட்டின் நிலை, தன்னுடு திரும்பினன், பத்தினிக் கோட்டம், சாக்கையர் கூத்து, வேத்தியல் மண்டபம், அறிவுரை, தெய்வச் சிலை, இலக்கியக் கோயில், என்னும் தலைப்புக்களில் வஞ்சிக் காண்ட நிகழ்ச்சி அறிமுகக் கட்டுரையாக நூல் அமைகின்றது.

## 10. "கண்ணகி"

**டாக்டர். மு. வரதராசனர்**

மூன்றும் பதிப்பு: 1959,

விற்பனை உரிமை, பாரி நிலையம், சென்னை — 1.

விலை: ரூ 1-50.

வரலாறு, பண்பு நலன் என்ற இரண்டு தலைப்புக்களில் நூல் அடங்கும். வரலாற்றுப் பகுதியில் சிலம்பின் கதைச் சுருக்கம் இடம் பெறுகிறது 'ஊழ்வினையை வலியுறுத்தல் இளங்கோவின் ஒரு நோக்கம், கண்ணகி கோவலர் – ஒருவர் துன்பங் கண்டு மற்றையர் வருந்துகின்றனர். இது காதலரின் வாழ்வு. தொடக்க முதல் இறுதிவரை இவர்தம் வாழ்வு அன்பின் அமைந்த காதல் வாழ்வே. மாதவியிடங் கொண்டது விடுதலறியா விருப்பு; கண்ணகியிடங் கொண்டது தீராக் காதல் கண்ணகி உயர்பண்புடையள்; கோவலன் தாழ் பண்புடையன். இருவர் வாழ்வு உரிமை மணங் கமழ் வாழ்வே. அடிமை வாழ்வன்று. காந்தி போன்று பிறர் துன்பத்திற்கே போராடுகின்றுள் கண்ணகி. உண்மையும், தூய்மையுங் கொண்டு கணவனை வழிபடும் மனையாள் நெறியே கற்புநெறி. கற்புத் திண்மையுடைப் பெண் பெருமை பேசுவது சிலம்பு. ஒரு பக்கம் கண்ணகி. மறுபக்கம் அவள் பெருமை பேசிப் போற்றி வணங்குவார். இவர்களையே சிலம்பு காட்டும்' — இவை இந்நூல் தெரிக்கும் தெளிவு.

## (10-அ) "கண்ணகி புரட்சிக் காப்பியம்"

**பாரதி தாசன்,**

மு, ப. 1962: அன்பு நூலகம்,
137 ஆற்காடு ரோடு, சென்னை, 26.
விலை: ரூ. 2-50

கோவலன், கண்ணகி திருமணம் தமிழ் முறையன்றெனச் சேந்தனர் என்பார் மறுத்துப் பின், வெதம் ஓதும் சூரியனுக்கு 'நாயைப்போல் குரைக்க வேண்டாம்; நரியைப்போல் ஊளை வேண்டாம்' என எச்சரிக்கை செய்வர். துன்புற்ற கண்ணகிக்கு, தேவந்தி பொய்கை மூழ்கச் சொல்ல, ஆரியப் பண்பாடு பகர்ந்தனை; நீ தீயொழுக்கம் என் உளத்து நுழைக்கின்ருயா? எனக் கூறி மறுப்பள். கண்ணகி கனவு குறிக்கப்படவில்லை. கண்ணகியை அடைக்கலமாக மாதரியிடம் கோவலனே கொடுக்கின்ருன்: தேவி சிலம்பை 'வஞ்சி' திருடி 'கருங்கை'யனிடம் கொடுப்ப, அவன் கோவலன் சிலம்பு கண்டு 'தானே கொல்லன்' என்று கூறிக்கொண்டு செல்கிருன். சிலம்பு திருடியவன் 'கருங்கையன்' என்று மக்கள் கூற, கணவன் பிணத்தில் வீழ்ந்தரற்றும் கண்ணகிகேட்டு, வழக்குரைத்து மாண்ட அரசனைப் பலவாறு திட்டுகின்ருள். மன்னன் கோயிற்கு மக்களே தீயிடுகின்றனர்; மக்கள் ஆட்சி பிடிக்காது வஞ்சி சென்றனர்; கண்ணகி சிலை எடுக்கு முன் செங்குட்டுவன், 'இறந்தவற்குத் தேரும் மாலையும் எடுப்பதும், அவன் வேறிடத்தில் சிறந்திருக்கிருன் என்று எண்ணுவதும், அவன் சீரடைய பார்ப்பனருக்கு முறம் அரிசி முதல் செருப்பு ஈருக முடிவணங்கிக் கொடுப்பதும் மடமை' என்பன். பார்ப்பனர் எதிர்ப்புப் பிரச்சாரம் நூல்.

## 11. "கண்ணகி வரலாறும் கற்பு மாண்பும்"

**ந. மு. வேங்கடசாமி நாட்டார்,**

மு. ப. 1926 கழக வெளியீடு, சென்னை — 1.
விலை: 12 அணு

முதற்கண் கண்ணகி கதைச் சுருக்கம், அடுத்தவள் கற்பின் ஏற்றம் பேசப்படுகின்றது. "இளங்கோ காவியப் பண்பாய் முந்

நீதிகளைக் கொண்டார் எனினும், இடைநின்ற 'பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர்' என்பதிற் பெருநோக்குடையவர் இதனை அடியார்க்கு நல்லார் கூற்றை (கண்ணகியை முற்கூறினர். பத்தினியை ஏத்துதல் உட்கோளான்) சான்று கொள்வர். இக் காப்பியத்திற்குக் 'கண்ணகி கற்பு' எனக் கோடல் சாலும். கற்புடைமையாவது, கணவனன்றிப் பிரிது தெய்வம் தொழாமை. இவ்விலக்கணம் கண்ணகி வரலாற்றிலமைகிறது. இவை நூல் நுவல்வன.

## 12. "காப்பியச் சிந்தனைகள்"

**தி. அ. சொக்கலிங்கம்,**

மு. ப. 1961. மீனாட்சி புத்தக நிலையம், மதுரை—1.

விலை: ரூ. 1-75

மாதவியின் இரு கடிதங்கள். இரு கனவுகள் (கண்ணகி, சூலியஸ் சீசரில் கலிபூர்னியா கனவு), கவுந்தியடிகள், நாவல் அந்தணன், யார் குற்றம். தலைப்புக்களில் சிலம்பின் காப்பியச் சிந்தனை காட்டப்படுகின்றது. "உள்ள உறுதியற்ற கண்ணகி கோவலரை மதுரை சேர்க்கவும், அவண் அவர்களைப் பிரித்துக் கோவலனைக் கொலைக்களம் நோக்கி இழுத்துச் செல்லவும், கவுந்தி படைக்கப்படுகிறார். காப்பியத்தில் மாடலன் நான்கு இடங்களில் வந்து நான்கு படிக்கல் அமைக்கிறான் காப்பிய மாளிகைக்கு. பலவிடங்களில் இளங்கோவின் பிரதிநிதியாகத் திகழ்கின்றான். மாதவி. பாண்டியன்—இருவரும் தாங்களே குற்றவாளி என்பர். கண்ணகி, கோவலர் தங்கள் குற்றத்தை ஒப்புக் கொண்டதன்றித் 'தென்னவன் தீதிலன்', 'மாதவி தீதிலள்' என்று பிறர்க்குப் பரிந்து பேசுகின்றனர். எல்லாப் பாத்திரங் களுமே குறையும், நிறையும் கலந்தவர்களாகவே சிலம்பில் காணப்படுகின்றனர்" என்பவை ஆசிரியர் துணிபாக நூல் முடிக்கின்றது.

## 13. "காப்பியத்தில் சிலம்பு"

**சரஸ்வதி**

1971. எம். ஏ. (தமிழ்) தேர்வு ஆய்வேடு

மதுரைப் பல்கலைக் கழகம்.

காப்பியத்தின் பொது இலக்கணம், மற்றைத் தமிழ்க் காப்பியங்களும் சிலப்பதிகாரக் காப்பியமும், கதையமைப்பில் சிலம்பின்

தன்மை, தலைமைப் பண்பை விளக்கும் முறையில் சிலம்பு — இயற்கை வண்ணனையில் சிலம்பு, உவமையில் சிலம்பு — தொடக்கம், இடைநிலை, முடிவு — இவற்றில் மற்றைக் காப்பியங்களும் சிலம்பும் — பொதுமை நெறியில் சிலம்பு. சிலம்பின் தனிப் பண்பு, மற்றைக் காப்பியங்களினும் சிலம்பு ஏற்றம் மிக்கது — என்னும் தலைப்புக்கள் நன்கமைய, உள்ளமைப்பு பல்லோர் கருத்துக் கோவைகளாயமைகின்றது.

## 14. "காப்பியத்தில் முகம்"

அ. அன்ன செல்வம்.

1970. எம். ஏ. (தமிழ்) தேர்வு ஆய்வேடு.

கேரளப் பல்கலைக் கழகம், திருவனந்தபுரம்.

சிலம்பு, சிந்தாமணி, கம்பராமாயண காப்பிய மாந்தர் முக வண்ணனை தொகுக்கப்படுகின்றது. கண்ணகி, மாதவி, தேவந்தி, வசந்தமாலை முகவண்ணனை விளக்கம் பெறுகிறது. கோவலன் பிரிந்தபின் நாம் காணும் கண்ணகி மனையறம் படுத்த காதை காட்டும் கண்ணகியினின்று வேறுபட்ட முகச் செவ்வியுடையள். 'எழுதெழில் மலருண் கண்' (19:67) கண்ணகிக்கு மலர்தலும் குவிதலும் இல்லாத வாழ்வு கிடைக்க விருப்பதைக் குறிக்கும். கானல் வரி கோவலன் பாட்டு, கண்ணகி முகத்தை நினைவுறுத்துகிறது. 'மாமலர் நெடுங்கண் மாதவி' எனும் வண்ணனை காப்பிய இறுதி வரை காணப்படுகிறது. 'திரு' அடை (திருமுகத்தாயிழை) ஓரிடத்தே காணப்படுவது. ஆடவரில் கோவலன் முகவண்ணனை தெளிவாகக் காட்டப்பெறவில்லை. செங்குட்டுவன் திருமுகம், கண்கள்—இவையே வண்ணிக்கப்பெறுகின்றன. முக வண்ணனை பற்றிய தொகுப்பு (Chart) கொடுக்கப்பட்டுள்ளது.

## 15. "கானல் வரி"

கே. இராசகோபாலாச்சாரியார்,

மு. ப. 1960. இ. ப. 1964, ஸ்டார் பிரசுரம், சென்னை – 5.

விலை: ரூ 3-00.

நூல்தொடக்க முன்னுரை 'காவியம்' பற்றிய சிறுவிளக்கம் தந்து, இளங்கோவின் காவியச் சிறப்பும், அதில் கானல்வரி

பெறும் மேம்பாடும் சுட்டப்படுகின்றது இளங்கோவின் வரலாறு, கோவலன், கண்ணகி மாதவி படைப்பு, பண்பு நலன், கலை நலன் முதலான தோற்றுவாயாக அமைகின்றது. அடுத்து, கானல் வரிபாடிய கோவலன் பாடல், எதிர்வரி பாடிய மாதவி பாடல்கள் தனித்தனியே பகுக்கப்பட்டுப் பதினான்கு தலைப்புக்களில் விளக்கப்படுகின்றன. மாதவி பாடிய முதல் மூன்று பாடல்களுக்குப் புதுப்பொருள் காணுவர். பதினான்காவது தலைப்பில், 'சேரல் மடவன்னம்' பாடலின் 'சொன்மடவன்னம்' என்ற பாட பேதம் காட்டி, பொருள் ஒற்றுமை காட்டுகின்றார். சுவையின் சுவை சிருங்காரம் — சிருங்காரம் இன்பத்தின் உறைவிடம் — இன்பம் உணர்ச்சிக்கே உரிய தத்துவம். — சிருங்காரத்திற்குப் பொருளாய் அமைவது காமம் — இன்பத்தின் இயக்கம் அன்பு — அன்பில் வளர்வது அறம் என்று துணிவர் ஆசிரியர். இறுதி நிலையில் அகப்பொருள் வரலாறு சுட்டப்படுகிறது. நூல் கானல் வரிப் பாடல்களின் விரிவுரையாக அமைகின்றது.

## 16. "கானல் வரி"

**பேராசிரியர் தெ. போ. மீனாட்சிசுந்தரனார்,**

மு. ப. 1961; மு. ப 1965.

கலைக்கதிர் வெளியீடு, கோவை.

விலை: ரூ 5—50.

நூல் மூன்று பாகமாக அமைகின்றது. முதற்பாகம், முப்புரிச் சிக்கல், களவு, ஊடற் படலம், மன மாற்றம், திருப்புமையம் என ஐந்து தலைப்புக்களில் அடங்கும். இரண்டாம் பாகம், கோவலன் பாட்டு, மாதவிபாட்டு என இரு தலைப்புக்களிலடங்கும். இறுதிப் பகுதி, முழு நோக்கு, கலா நிலயம், யாப்பமைதி, பொருளமைதி, பொருளும் ஓசையும் என ஐந்து உட்டலைப்புக்களிலடங்கும். முதற்பாகத்து, கோவலன், கண்ணகி, மாதவி படைப்பு, அவர் தம் மனவளர்ச்சி, பண்புநலன், இவை ஆராயப்படுகின்றது. அடுத்த பாகம் மாதவி, கோவலன் பாடிய 'கானல்வரிப்' பாடலைத் தனித்தனியே ஆய்வு செய்கிறது. அப்பாடல்களில் அமைந்த யாப்பையும், ஓசை நயத்தையும், அவை பாடுவோர் உள்ள நிலையோடு ஒன்றுகின்ற தன்மையினையும் தெளிவிக்கிறது. இறுதிப் பகுதி இருவர் பாடிய பாடல்களை ஒப்பிட்டு நயம் சுட்டு

கிறது. நூல் சிலம்பின் முழு நிலை ஆய்வாக அமைந்து சிறப்படைகின்றது.

## 17. "குடமலைத் தெய்வம்"

**புலவர். அரசு.**

மு. ப. 1948; இ. ப. 1953. கழக வெளியீடு, சென்னை—1.
விலை: ரூ. 1—80.

சிலப்பதிகாரம் வஞ்சிக் காண்ட நிகழ்ச்சிகள் உரைநடை நாடகமாக இதன்கண் அமைக்கப்பட்டுச் சிறக்கின்றது. நாடகச் சுவை கருதிச் சில புதிய செய்திகள் இடம் பெறுகின்றன. வடவாரிய மன்னர் விருந்துண் காட்சி, ஆரியாங்கனை (வடவர் மகள்) குட்டுவன் காதற்காட்சி, தோற்ற ஆரியர் தமிழர் திறம் பேசுதல், இன்னபல நாடகச் சுவை பயக்கும் புதிய இணைப்புக்கள். நாடக அமைப்பும் போக்கும் 'மனோன்மணியத்தை' நினைவுறுத்துகின்றது.

## 18. "குடிமக்கள் காப்பியம்"

**பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்.**

மு. ப. 1961
தொல்காப்பியர் நூலகம், சென்னை-14.

சிலம்பு குடிமக்கள் காப்பியமென்பதும், கதை நம்ப முடியாத ஒன்றன்று என்பதும், சங்கப் பாடலுக்கும் சிலம்பிற்குமுள்ள தொடர்பு—சிலம்பின் யாப்பு வகை—கூற்று வகை பேசப்படுகின்றது அடுத்து நாடக காப்பியமாய சிலம்பின் புறநிலைப் போக்கு, நம்பிக்கை. வளர்ச்சி நிலை பற்றியும், நாடோடிப் பாடல்களின் வகைகளை இளங்கோ தம் காப்பியத்து இசைப்பாடலாக அமைத்துள்ளார். பொற்கொல்லன் பேச்சு, கானல்வரி—இவை நாடக அமைப்பில் அமைந்துள்ளன. இருவேறு கோவலரா, கோவலன் மனமாற்றம், கோவலன் ஊமையா—என்னும் தலைப்புக்களில் கோவலனின் பாத்திரப் படைப்பும், கவுந்தி, தேவந்தி, மாடலன்—சிலம்பில் வரும் படைப்புச் சூழலின் முக்கியத்துவம், குறள் வழி இளங்கோ பல கருத்துக்களை அமைத்துள்ளார் என்பதும் நூற்கண் விரிக்கப்பெறுகின்றது. நூல் நல்ல திறனாய்வுப் போக்குடன் அமைகின்றது.

## 19. "கோவலன்"

புலவர் கு. திருமேனி.

மு. ப. 1960.

பாரி நிலையம் சென்னை-1

விலை ரூ. 2·00

'மகளிர் காப்பியம்' முதல் தொடக்கம் பெற்று, தெய்வக் கோவலன் வரையுள்ள முப்பது உட்டலைப்புக்களில் நூல் அமைகின்றது. குடிமக்களைக் காப்பியத் தலைவர்களாய்க் கொண்டு பாடும் முறை மேலைநாட்டுக் காப்பியங்களிலுமுண்டு. ஆயின் பெண்ணைக் காப்பியத் தலைவியாகக் கொண்டு பாடியதாகத் தெரியவில்லை. கோவலன் இல்லறம் பேணலொடு, குலத்தொழிலாகிய கலத்தினும் காலினும் முதல் உய்த்துப் பொருளீட்டி வந்தான். கண்ணகி அறத்திற்குரியள். கோவலன் காமத்திற்குரியன். மாதவி ஆடரங்கம் கோவலன் சென்றிருந்தான். கோவலன் மாதவியோடு வாழ்ந்த ஒழுக்கம் மனை போற்று ஒழுக்கமன்றி அறம் போற்று ஒழுக்கமன்று. இளங்கோ கோவலனை முருகனுக்கி, இளஞாயிருக்கி, ஆடலறிஞனுக்கி, இசைப் புலவனுக்கி, செல்லாச் செல்வனுக்கி, கருணை மறவனுக்கி, நெறியின் நீங்கியோனுக்கி, உயர் பேர் ஒழுக்கனுக்கி, குன்றுக் கொள்கையனுக்கி, அரும் பெறற் கணவனுக்கி, ஞான விருத்தனுக்கி, மணிவண்ணனுக்கி, தொழுதகைய திருவடியனுக்கி, வானவனுக்கி, வானளித்த வள்ளலாக்கி, அவன் அகப் புறப் பண்புகளை அழகொழுகப் பாடுகின்றுர் – இளங்கோவடிகள் என்று நூல் எடுத்து மொழிகின்றது காப்பியத் தலைவன் கோவலனது பண்பு நலன்களை.

## 20. "கோவலன் மாதவிபால் மனமிழந்தது ஏன்?"

சி. என். நாச்சியப்பன்.

முதற் பதிப்பு: 1961.

பொன்னழகம்மை நூலகம், காரைக்குடி.

விலை: ரூ. 1·00

கோவலன் மாதவிபால் மனமிழந்தது ஏன், காப்பியத்தில் நாடக உச்சநிலை, சிலம்பின் தனிச் சிறப்பு, கண்ணகி ஆண்

தன்மை படைத்தவளா?, எனும் நான்கு தலைப்புக்களில் நூல் அடங்கும். கலையழகுடைய மாதவிபால் கலை நாட்டமுடைய கோவலன் சென்றான். கண்ணகி புகழ்பாடவே இக்காப்பியம் எழுந்தது. மாதவியைக் கோவலன் ஆடச்சொல்லி பாடச் சொல்லி மகிழ்ந்தான். குற்றமுடைய கோவலன் சமுதாயத்தை யும் குடும்பத்தையும் மறந்தான். சிலம்பு நாடக காப்பியம். கண்ணகியே காவிய உயர் பாத்திரம். அவள் படைப்பு ஒரே நிலையில் அமையவில்லை. கோவலன் இறப்பதற்கு முன் மனைவி யிடம் இன்பமாக உணவருந்துகின்றான். இது பின் வரும் அவலச் சுவை மிகுக்க நிற்பது. இது நாடகப் பாணியின் உச்சநிலை. கதை யின் உச்சநிலை அவலம். முடிவு அவலம் குறைந்து அமைதி யடைகின்றது. சிலம்பின் தனிச் சிறப்பு பெண் பெருமையும், கற்புச் சிறப்பும் பேசப்படுவதே. கண்ணகி ஆண் தன்மை படைத்தவளல்ல. இவை இந்நூற்கண் ஆசிரியர் காட்டுஞ் செய்திச்சுருக்கம்.

## 21. "சங்க காலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள்"

**மயிலை சீனி. வேங்கடசாமி**

1970. அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

அண்ணாமலை நகர்.

இந்நூற்கண் 'சங்க காலத்துக் காவரிபூம் பட்டினம்', 'சங்க கால மதுரை' - ஆகிய இரு நகரின் அமைப்பினைப் படத்துடன் அமைத்துக்காட்டி எவ்வெப் பகுதி எங்கெங்கிருந்தன என்பதைச் சிலம்பு, மணிமேகலை, பட்டினப்பாலை, மதுரைக்காஞ்சி கொண்டு எடுத்துக்காட்டுவர். கவிரிபூம்பட்டின அமைப்பு, மருவூர்ப்பாக் கம், பட்டினப்பாக்கம், நாளங்காடி இவை சிலம்பு வழி விளக்கப் பட்டு அவை இருந்த இடங்கள் படத்தில் குறிக்கப்படுகின்றன. சிலம்பு மதுரை நகரம் எரிந்தது என்று குறிப்பது மதுரை அரண் மனையை மட்டுமே.

## 22. "சிலப்பதிகாரக் கட்டுரைகள்"

கு. மதுரை முதலியார்.

மு. ப. 1950.

புத்தக நிலையம், தெப்பக்குளம், திருச்சி.

விலை: ரூ. 1·80

மங்கல வாழ்த்தும் மணவிழாவும், நலம் பாராட்டலும் நல்லறம் படுத்தலும், அரங்கம் ஏறலும் தலைக்கோல் எய்தலும், மாதவியின் இன்பமும் கண்ணகியின் துன்பமும், இந்திர விழா, மாதவியின் ஆடலும் அழகும், கானல்வரி, வேனிற்காதை, கனாத் திறம் உரைத்த காதை, நாடுகாண் கதை ஆகிய தலைப்புக்களில் புகார்க்காண்ட விமர்சனமாக நூல் அமைகின்றது.

## 23. "சிலப்பதிகாரக் கட்டுரைகள்"

மு. சண்முகம்

மு. ப. 1952, 2-ம் ப. 1955, 3-ம் ப. 1958

நேசனல் பப்ளிசிங் கம்பெனி, சென்னை-1

விலை: ரூ 2·00

புகார் நிகழ்ச்சிகள், மதுரை நிகழ்ச்சிகள், வஞ்சி நிகழ்ச்சிகள் தலைப்பில் மூன்று காண்டங்களின் கதைச் சுருக்கம், கண்ணகி, கோவலன், மாதவி, கவுந்தியடிகள் ஆகிய நால்வரின் பாத்திரப் படைப்பு பேசப்படுகின்றது. மக்கள் பண்பாடு, தமிழர் அரசியல் முறை – தலைப்புக்களில் – சிலம்பு கால பண்பாட்டு நிலை, வழக்க ஒழுக்கம், மன்னர்களின் அரசியல் சிறப்பு, நீதி தவறு நெறி, முதலான எடுத்துக்காட்டப்படுகின்றன. கண்ணகியின் படைப்பு நன்கு ஆராயப்படுகின்றது. மற்றவை நிகழ்ச்சித் தொகுப்புக்கள். இளங்கோ கண்ணகியைத் தெய்வமாகக் கருதியே நூல் எழுதினர். காவியக் கதை மாந்தர் குணம் பற்றி அரிஸ்டாட்டில் கூறும் மூன்று சிறப்புப் பண்பு சுட்டப்படுகின்றது. 1. உறுப்பினர் நல்லவராக இருத்தல். 2 பிறந்த குடிக்கேற்ப ஒழுக்கமுடையவராக இருத்தல். 3 மாறுபாடில்லாமல் இருத்தல். துன்பியல் கதைப் போக்கு மூவிதம். 1. தலைவனைக கொடியனாகப் படைத்தவன் வீழ்ச்சி படைத்தல். 2. நல்லவர்கள் கொடிய

தலைவனால் துன்புறுத்தப்பட்டு வீழல். 3. தலைவனை நல்லவனாகப் படைத்து அவனின் குணக் குறைபாட்டால் (ஓரிரு) அவனுக்கும் அவனைச் சூழ்ந்தார்க்கும் அழிவைக் காட்டல். இதில் சிலம்பு மூன்றும் வகையது. கண்ணகி இடித்துரைத்தலைச் செய்யவேண்டிய இடத்துச் செய்யவில்லை. கண்ணகி ஊடாமைக்குக் காரணம் அவளின் அடக்க குணம். இவை கட்டுரை தரும் சிறப்புச் செய்திகள்.

## 24. "சிலப்பதிகாரக் காட்சிகள்"

**வித்துவான் விசு. திருநாவுக்கரசு.**

மு. ப 1955. மு. ப. 1963

ஸ்டார் பிரசுரம், சென்னை-5

விலை ரூ. 2·50

அறிமுகம், மாதவி காதல், மாதவி மனமாற்றம், காதலற் பிரிவு, மாதவி காதற் கடிதம், காவலன் போலுங் கோவலன், மதுரை நோக்கி மூவர், மாசகற்றிய மறுகடிதம், வையைக்காட்சி, அடைக்கலம், ஆயர்பாடியில், விதி வகுத்த வழி, ஆயர் மகளிர் ஆடிய குரவை, கரைகாணுத் துன்பத்தில் கண்ணகி, அரசன் யார்? கள்வன் யார்?, சினத்தீ, குறவர் சண்ட காட்சி, பேராற்றங் கரையில் சேர வேந்தர், வஞ்சியிலிருந்து வடநாடு செல்லல், வேந்தர் முன் நிகழ்ந்த ஆடல், கங்கை நோக்கிப் பொங்கிய தமிழ்ப் படை, வஞ்சிபுக்கனர், வாழ்த்துக்கள் - ஆகிய தலைப்புக்களில் சிலப்பதிகாரக் கதைச் சுருக்கம் அமைகின்றது. சிலம்பு பற்றிய விமர்சன நூல் இஃதெனலாம்.

## 25. "சிலப்பதிகாரச் சிந்தனை"

**டாக்டர். ப. அருணாசலம்.**

மு. ப. 1971.

தமிழ்ப் புத்தகாலயம், சென்னை—1

விலை: ரூ. 7·50

சிலப்பதிகாரம் — காப்பிய இலக்கணம் தண்டியாசிரியர், இன்றைய திறனாய்வாளர்களின் காப்பியம் பற்றிய கருத்துக்

கள் — சிலப்பதிகாரப் பண்பாடு — சமுதாயம் — கலை – சமயம் – அரசியல் — இலக்கிய உத்தி — காப்பிய அமைப்பு – இளங்கோ வின் உள்ளம் ஆகிய தலைப்புக்களில் நூல் அடங்கும். சிலம்பு காட்டும் பண்பாடு ஓர் இந்தியப் பண்பாடு; பிரதிபலிக்கும் சமு தாயம் பல்லவர் காலச் சமுதாயம்; ஆசிரியரின் சமயம் சமணம். இவை இதன் கண் இவ்வாசிரியர் கொண்ட துணிபு. முடிவு சில ஏற்புடைத்தன்றாயினும் சிலப்பிற்கு முழு நிலையில் சிந்தனைத் திற னுடன் அமைந்த ஓர் திறனாய்வு.

## 26. "சிலப்பதிகாரச் செய்தி"

**ம. ரா. போ. குருசாமி.**

மு. ப. 1967. மறுபதிப்பு: 1968.

வி. உ. மெர்க்குரி புத்தக நிலையம், கோவை—1.

விலை: ரூ 2.50.

சிலம்பு வரலாற்றுப் புதினம். தமிழனுக்கு எச்சரிக்கைக் காப்பியம். மூன்று உண்மைகளும் சிலம்பு காரணமாக வலியுறுத் தப்படவில்லை. கோவலன் கொலைக்கும் காவலன் தோல்விக்குமே சிலம்பு காரணமாகிறது. சிலம்பின் உள்ளுறை மூன்றெனக் குறித் தது தவறு. மூன்று காண்டங்கட்கும் புனித உள்ளுறை பொருந்தா. அருந்திறல் அமைச்சர் முறைசெயின் அல்லது பெரும் பெரும்பெயர்ப் பெண்டிற்குக் கற்புச் சிறவாது என்பது புகார்க் காண்ட உள்ளுறை. செங்கோல் வளையின் உயிர் வாழாமை மதுரைக் காண்ட உள்ளுறை. வஞ்சினம் வாய்த்தபின் அல்லதை யாவதும் வெஞ்சினம் விளியார் வேந்தர் என்பது வஞ்சிக் காண்ட உள்ளுறை. இயற்கை இறந்த நிகழ்ச்சி கருத்துச் சுவைபடுவதற்காகக் கதையினில் இடம் பெறும் ஓர் உத்தி. இளங்கோ சமயம் சமணமாயினும் சமயப் பொதுமையுடையவர். சிலம்பு ஓர் ஒற்றுமைக் காப்பியம். இவை போன்ற பல சிந்தனைத் திறன் மிக்க செய்திகள் நூற்கண் உண்டு.

## 27. "சிலப்பதிகாரத் தமிழகம்"

**சாமி. சிதம்பரனர்.**

மு. ப. 1958, இ. ப. 1963

ஸ்டார் பிரசுரம், சென்னை — 5.

விலை: ரூ. 4·50.

சிலம்பின் கதை ஓர் சிறந்த சிறு கதை. அறம் கூறும் நூல். சிலம்பின் அரசியல் பின்னணி, பத்தினித் தெய்வ வழிபாடு, ஊழ் வினை மறுபிறப்பு, புகார் மதுரை அமைப்பு, மூவேந்தர் பெருமை, தெய்வ நிகழ்ச்சிகள், சிறுகதைகள் (கிளைக்கதைகள்) தமிழர் போற்றிய வடமொழி நூல்கள், தெய்வங்களும் கோயில்களும், வேதமும் வேள்வியும்' திருமண முறை, பொது மகளிர், சாதி வேற்றுமை, மத ஒற்றுமை, மன்னருக்கும் மக்களுக்கும் உள்ள உறவு, பாரத நாட்டுப் பண்பாடு, ஆரியர் தமிழர் என்ற பாகு பாடற்ற நிலை, சமுதாய நிலை, அறவுரைகள், சிலம்பில் குறள் கருத்து, சிலம்பின் புரட்சி, நம்பிக்கைகளும் பழக்க வழக்கங் களும், ஆகிய தலைப்புக்களில் நூல் அமைகின்றது. சிலம்பு வர லாறறுப் பின்னணிக் காப்பியம்; தொல்காப்பியர் கூறும் தொன்மை வகையது; சைனக் கொள்கையினை அடிப்படையாகக் கொண்டது; பதிகம் பிற்சேர்க்கை; வஞ்சிக் காண்டம் இளங்கோ பாடியதல்ல; சிலம்பு சங்க நூலன்று. இவை ஆசிரியர் தெரிக்கும் முடிபு.

## 28. "சிலப்பதிகாரத்தில் ஊழின் வலிமை"

**பி. எஸ். ஜி. ஜி. கோவிந்தசாமி.**

மு. ப. 1966.

மெர்க்குரி புத்தக நிலையம், கோவை — 1.

விலை: ரூ. 1·25.

ஊழ்வினை உருத்து வந்தூட்டும் என்பதை வலியுறுத்தவே இம்மாக்கதையை இயற்றினர் இளங்கோ. ஊழ்வினையே காவி யம் முழுவதும ஒரு சூழ்ச்சிக் காரனக (வில்லனக) அமைகிறது. கி. பி. 2-ம் நூற்றுண்டில் தமிழர் சமுதாயத்தில் பலவகை வழக் காறுகள் இருந்தன. இளமை மணம் வழக்கில் இருந்தது. இத்

தீமைதான் கோவலன் கண்ணகியின் வாழ்க்கையை கெடுப்பதற்கு முதற்காரணம். சிலம்பு ஓர் பெருங்காப்பியம் என்பது சுட்டப்பட்டு, புகார், மதுரை வஞ்சிக் காண்டச் சுருக்கம் தரப்படுகின்றது, இடையில் 'பூம்புகார்' பட விமர்சனமும் செய்யப்படுகின்றது. நூல் தலைப்பு நோக்கி விரியாது, சிலம்புச் சுருக்கம் பேசுகிறது.

## 29. "சிலப்பதிகாரத்தில் பொருளாதாரம்"

சா. ஜோசான்.

1972. எம். ஏ. (தமிழ்) தேர்வு ஆய்வேடு.

கேரளப் பல்கலைக் கழகம்.

ஆய்வு 'பொருளாதாரம்', உற்பத்தி, நுகர்வு, மாற்று, பொதுச் செல்வாதாரம், வாழ்க்கைத் தரம் என்னும் தலைப்புக்களில் அமைகின்றது. 'பொருளாதாரம்' தலைப்பு பொருளாதாரம் என்ற சொல்லாய்வு, அறிஞர்கள் கூற்று, வரலாற்றுக் காலங்களில் பொருளாதார நிலைபற்றி யமைகிறது. 'உற்பத்தி'யில் உற்பத்தி என்பதின் பொருள், பயன், தற்கால முற்கால வேற்றுமை, சிலம்பில் பலநில உற்பத்திப் பொருள், நிலவாழ் மக்கள், கைத்தொழில் உற்பத்தி முதலான எடுத்துக் காட்டப்படுகின்றது. எவை எவை நுகர்ச்சி என்பதும், நுகரும் விதமும், நுகர்ச்சிப் பொருள்களும் (சிலம்பில் காணப்படுவன) 'நுகர்வு' தலைப்பின் கண் காட்டப்படுவன. சிலம்பு கால மக்கள் தாம் விரும்பிய பொருள் அனைத்தையும் தடையின்றி நுகர்ந்தனர். நுகர்வே பொருளாதாரத்தின் ஆரம்பமும் முடிவும். 'மாற்றின்' கண் — சிலம்பில் காணப்படும் உள்நாட்டு வெளிநாட்டு வணிகம், பண்டமாற்று முறை, காப்பியத் தலைவனின் வணிகப் பாங்கு, மாற்றுக்குத் துணைக் கருவிகளாய போக்குவரத்து, துறைமுகம், கலங்கரை விளக்கம் முதலான இடம் பெறுகின்றன. 'பொதுச் செல்வாதார'த்து அரசாங்க வருவாய் பற்றிச் சிலம்பு கூறும் பலவும் எடுத்துக்காட்டப்படுகின்றது. அரசாங்கச் செலவு (ஆட்சி, படை முதலானவற்றிற்கு), தற்காலப் பொதுச் செல்வாதாரத்திற்கும், சிலப்பதிகாரத்திற்குமுள்ள வேறுபாடு எடுத்துக் காட்டப்படுகின்றது. 'வாழ்க்கைத் தரம் நுகர்வை மட்டும் சார்ந்ததல்ல, செல்வம், சூழ்நிலை, நாட்டுத்தன்மை' சமயம், காலம், நாகரிகம்,

கலைப்பயிற்சி, பண்பாடு, சமூக வாழ்க்கை இவற்றைச் சார்ந்திருக்கிறதென்பது சுட்டி, அவ்வடிப்படையில் சிலம்பு மக்களின் வாழ்க்கைத் தரம் பேசப்படுகின்றது.

## 30. "சிலப்பதிகாரத்து இசை நுணுக்க விளக்கம்"

**வீணை. எஸ். இராமநாதன்.**

மு. ப. 1956, கலைமகள் இசைக் கல்லூரி.

திருவல்லிக்கேணி, சென்னை — 5.

விலை: ரூ. 1·50

அரங்கேற்று காதை, வேனிற்காதை, ஆய்ச்சியர் குரவை, நடுகற் காதைகளில் வருகின்ற இசைக் குறிப்புக்களை இந்நூல் எடுத்து விளக்கும். ஆய்ச்சியர் குரவையின் வட்டப்பாலையுள், பாலையாழ், பாலையின் ஏழிசை, நாற்பெரும் பண்புகள், இராசி வட்டத்தில் நரம்பு நிற்கும் வேறுமுறை இவை பேசப்படும். அரங்கேற்று காதையில் வம்புறு மரபிற் செம்பாலை, தற்கிழமை திரிந்த பாலை பற்றியும், வேனிற் காதையின் வட்டப் பாலையின் இடமுறைத் திரிபு பற்றியும் நூல் விளக்குகிறது. தற்கிழமை திரிந்த வலமுறைத் திரிபு, ஆய்ச்சியர் குரவை கூத்துட்படுதல், முல்லைப் பண், வட்டப் பாலையிற் காணவேண்டிய நுணுக்கங்கள், இசைத் தமிழ் நூல்களின் இருபத்தியிரண்டு சுருதி, நூற்று மூன்று பண்கள், அநுபந்த வகைகள் ஆகியனபற்றியும் இந்நூற்கண் விளக்கம் தரப்படுகின்றது. இந்நூற் செம்மையினை இசைப் புலமை மிக்கார் நன்குணர முடியும்.

## 31. "சிலப்பதிகார நாடகம்"

**அரங்க வேங்கடாசலம்பிள்ளை,**

மு. ப. 1949. ம. ப. 1965,

கழக வெளியீடு, சென்னை — 1.

விலை ரூ. 2·75

சிலம்பு காவியம் உரை நடை நாடகமாக்கப்பட்டுள்ளது. ஒலிக்காட்சிக் குரியனவாக 1, 3, 5, 6 எண்ணுள்ள காதைகளைக்

கொள்வர். ஒளிக்காட்சி அமையும் முறையும் விளக்கப்படுகிறது. எஞ்சியுள்ள 26 காதைகள் 26 காட்சிகளாக அமைந்து சிலம்பு காவியக் கதை முரணது நாடகம் அமைவுறுகின்றது இடையிடை நயமிகு பாடல்களை அமைத்து — நாடக இசைத்தமிழ்ச் சுவை மிளிரச் செய்கின்றார் ஆசிரியர். மேடையில் நடிக்கத்தக்க முறையில் காட்சியமைப்பு, உரையாடல் முதலான அமைகின்றன. நடிக்க வேண்டி எழுதப்பட்ட நாடகமாதலின் சில நிகழ்ச்சிகட்குப் புது மெருகு ஊட்டப்படுகின்றது. கோவலன் மாதவி நடன அரங்கேற்றம் செல்லக் கண்ணகியை அழைத்தல், அவள் மறுத்தல், மரகதம், மாணிக்கம், குறத்தி (கனாத்திறக்காட்சி) படைப்பு, கானல் வரிப்பிரிவில் மாதவியிடம் (இன்பமாக விடைபெறுவது போல்) சொல்லி விட்டே பிரிந்துபோதல், முதலான நாடகச் சுவைக்காகச் சேர்க்கப்படுவன. நல்ல நாடக அமைப்புடன் நூல் அமைகின்றது.

## 32. "சிலப்பதிகார நூல்நயம்"

**டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை,**

மு. ப. 1961, ஒற்றுமை ஆபீஸ், சென்னை.

விலை: ரூ: 2·40

ஆசிரியர் பெருமை, அரச நீதியும் அரசியலும், ஆரிய அரசரும் தமிழ் அரசரும், கண்ணகியின் கற்பின் திறம், வினைப் பயன், பண்டைத் தமிழ் மக்கள், நாகரிகம், சிலம்பின் நூல்நயம் — ஆய உட்டலைப்புக்களுடன் நூல் இயலுகின்றது. ஆசிரியரது சமயம் சமணம். மதுரைத் தென்றலொடு புலவர்களை இணைத்துப் பேசுதல்–மதுரை இருந்த தமிழ்ச் சங்கத்தை இளங்கோ நினைவிற் கொண்டமையான். சிலம்பின் காலத்து நீதி வழுவாச் செங்கோல் மன்னர் பற்றிய கன்ன பரம்பரைக் கதை வழக்கிலிருந்தது. கண்ணகிக்கு ஆறுதல் கூறமுடியாத நிலையடைந்த கோப்பெருந்தேவி யவள் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்கிறாள். இக்கதை வழி தீவினையகற்றி நல்வினையாற்ற மக்கட்கு அறிவுரை பகர்கின்றார் அடிகள். இவை முதலான 'சிலப்பதிகார நூல்நயம்' இந்நூலால் விளக்கம் பெறுவன.

## 33. "சிலப்பதிகாரப் பெண் பாத்திரப் படைப்பு மாண்பு"

**பகவதியம்மாள்**

**1969 எம். ஏ. தேர்வு (தமிழ்) ஆய்வேடு.**

**மதுரைப் பல்கலைக் கழகம்.**

பெண்களை இளங்கோ குறை, நிறையுடையவர்களாகவே படைக்கின்றார். ஒவ்வொரு பெண்ணிற்கும் ஒரு பொறுப்பைக் கொடுக்கின்றார். அப்பெண்களே கதையை நடத்திச் செல்கின்றனர் என்று சொல்லும் அளவிற்குச் சிலம்பின் கதைப் போக்கும் பாத்திரப் படைப்பும் அமைந்துள்ளன. சிலம்பின் தலைமைப் படைப்பு கண்ணகி. அன்பு மனம், குறையும் நிறையும், உயர் நிலைப் பண்பு, மூவகைப் பாத்திரங்கள், கற்பு மனம், இன்பமும் துன்பமும், இலட்சியப் பெண்மை, வண்ணனைச் சிறப்பு, மகளிர் மனம், ஊழ்வினையும் ஆள்வினையும் திண்மையே பெண்மை, என்னும் தலைப்புக்களில் பெண்பாத்திரப் படைப்பு மாண்பு விளக்கம் பெறுகின்றது. சிலம்பின் தலைமை மகளிர் கண்ணகியும் மாதவியும், துணை மகளிர் பலர். இவர்தம் பட்டியல் தரப்படுகின்றது.

## 34. "சிலப்பதிகாரம்"

**டாக்டர். அ. சிதம்பரநாதன் செட்டியார்.**

**டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளிவிழா**

நினைவுச் சொற்பொழிவுகள் 1963—1964

**1964.** சென்னைப் பல்கலைக் கழகம்.

விலை: ரூ. 1·25.

சிலப்பதிகாரக் காவிய மாந்தர்க்கும், 'கோவிலன் கதை' மாந்தர்கட்கும் உள்ள வேறுபாடு எடுத்துக்காட்டப்படுகிறது. இளங்கோவின் செய்யுட் போக்கு, சிலம்பிற்கு முற்பட்ட இலக்கியம் சிலம்பு காவிய அமைப்புக்கு அடிவரைச் சட்டமாக அமையுந்திறன், சிலம்பு, பிற்பட்ட இலக்கியங்களில் பெறுகின்ற இடம் முதலான சுட்டப்படுகின்றன. 1939-ல் வி. ஆர். இராமச்சந்திர தீட்சிதர் சிலம்பின் காலம் கி. பி. 171—4, என நிறுவியுள்ளார். இ. மு. சுப்பிரமணியபிள்ளை கி. பி. 144 என்று நிறுவியுள்ளார்' எனப் பிறநூலார் கருத்து எடுத்துக்காட்டப் பட்டுச் சிலம்பின்

காலம் கி. பி. 2–ம் நூற்றாண்டெனப்ர். சிலம்பு காவியம் வீடு பேற்றைப்பற்றிப் பேசுகின்றது சிலம்பு 'கதை' (கோவிலன் கதை முதலான) எழுதினர்க்கு மதுரையிடத்து வஞ்சம் உண்டென்பது உறுதியாகின்றது. இளங்கோ சொல்லுக்குத் தனியாட்சி தருகின்றார்; மதிநுட்பமாகச் செய்யுள் செய்யவல்லார்; இளங்கோ தனித்திறம், இயற்கை ஈடுபாடு, கவின் கலைக் கவர்ச்சி, இவை இலக்கிய வழி எடுத்துக்காட்டி விளக்கப்படுகின்றன.

## 35. "சிலப்பதிகாரம்"

(சொர்ணம்மாள் சொற்பொழிவுகள்)

பொ. திருகூடசுந்தரம்.

1967. அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு.

கண்ணகி கற்பு, இரண்டு தலைநகரங்கள், ஊழ்வினை எனும் முத்தலைப்புக்களில் நூல் அடங்கும். 'கண்ணகி கற்பில்' ஆண் கற்பு கொடுப்பக் கொள்வது; பெண் கற்பு கொண்டானைத் தொழுவது என்பன போன்ற வள்ளுவர், இளங்கோ கருத்துத் தவறுடைமை சுட்டப்படுகின்றது. கண்ணகிபொறை தவமாகாது; 'கணவன் செய்யும் ஒழுக்கத் தவறிற்கு மனைவி துணைசெய்யலாகா' என்னுங் காந்தியடிகளின் கொள்கையொடு கண்ணகி செயல் ஒப்பு நோக்கப்பட்டுக் கண்ணகியின் ஆறிய கற்பு ஏற்புடையதன்று என வலியுறுத்தப்படுகிறது. 'இரண்டு தலை நகரங்கள்' தலைப்பின் கண் 'காம உணர்ச்சியை அடக்குதலே நாகரிகம்' எனும் உளவியல் அளவுகோல் கொண்டு, இளங்கோ காட்டும் புகார் நகர இந்திர விழா, கோவலன் கண்ட மதுரை வீதி வண்ணனை, இவற்றிற் சுட்டப்படும் தமிழர் நாகரிக வாழ்வு (பரத்தையர் வாழ்வு, பரத்தையரை நடுவீதியிற்றழுவுதல், பரத்தையர் வகை முதலான) தமிழனுக்கு இழிவு தருவது என்பது வலியுறுத்தப்படுகின்றது. 'ஊழ்வினை'க் கண், ஊழ்வினை என அச்சுறுத்துவதால் ஒழுக்கம் உண்டாகா. ஊழை வெல்லலாம் என்றால் ஒழுக்கம் உண்டாகும் என்றும், இதனை இளங்கோ கூறவில்லை என்பதும், கோவலன், பாண்டியன் இறந்தது ஊழ்வினையாலல்ல; காமத்தால் என்று நிறுவுகின்றார். காப்பியக் கவிஞனிடம் குறை கூறுதல் ஆய்வாகாது என்று கருதுகின்ற ஆய்வுப்போக்கை

மாற்றிக் குறை காண்பதும் சிறந்த ஆய்வுமுறை என்பதை இதன் வழி நிறுவுகின்றார் ஆசிரியர்.

## 36. "சிலப்பதிகாரம் காவியமா? நாடகமா?"

கவிஞர். தமிழ் ஒளி.

மு. ப. 1959. இளங்கோ பதிப்பகம், சென்னை-17.

விலை: ரூ: 1.75.

காவியத்திற்குக் குணச் சித்திரங்களும், சந்தங்கும் தேவை. கூத்தும் இசையும் தேவையில்லை. உரைப்பாட்டு, கட்டுரைப் பாட்டு, இசைப்பாட்டு, செய்யுள், குரவை, வரிப்பா—கலந்தது சிலம்பு. தொடர்நிலை, பாட்டுடைச் செய்யுள், நாடகம் — வெவ் வேறு வடிவின. தொடர்நிலை கதையமைப்பு (form) குறிப்பதன் றிக் கதையைக் குறிக்க வந்ததன்று; தொடர்ந்து ஒரே தன்மை பெற்ற செய்யுளால் கதையைக் கூறிச் செல்வது தொடர்நிலை — மணிமேகலை தொடர்நிலை; சிந்தாமணி காப்பியம், மனோன்மணி யம் நாடகம். சிலம்பு கூத்திலக்கியமாகவும், கூத்திலக்கணமாக வும் அமைகின்றது. கதகளி, சாக்கையர் கூத்து. ஓட்டந்துள்ளல்—சிலம்பை அடியொற்றி எழுந்தன. 'உரைபெரு கட்டுரை' — மதுரைக் காண்டத்திற்குப் பின் நிகழ்ந்த நிகழ்வு உரைப்பது. சிலம்பு கதை பாடுவோனல் அரங்கில் பாடப்பெறவும், ஆடுவோ னல் கூத்துக்கள் ஆடப்பெறவும், அமைந்த இசை நாடகம். அரங் கில் ஆடலும் பாடலும் நிகழக் கூத்தும் கொள்கையும் விளங்கக் குயிலுவக் கருவிகள் சேரப் பாடப்பெறும் கதை — இசைநாடகம். "Opera" — போன்றது. கட்டுரை, உரைப்பாட்டு மடை இசை நாடகக் கலையில் பயிலும் உறுப்புக்கள். உரைப்பாட்டு மடை — உரையைப் பாட்டாக மடுத்தல். கண்ணகி விழா தோன்றிய பின் இந்திரவிழா சோணாட்டில் மறைவதாயிற்று. 'கண்ணகி வழிபாடு' பற்றி இன்று காணக்கிடக்கும் பல சான்றுகள் நூலின் இறுதி நிலையில் தொகுத்துக் கூறப்படுகின்றன. இந்நூல் வழி ஆசிரியர் சிலம்பு 'காவியம்' அன்று; நாடகக் காப்பியமன்று; 'இசைக் கூத்து நாடகம்' என்பர்.

## 37. "சிலப்பதிகாரமும் தமிழரும்"

**ம. பொ. சிவஞானம்.**

மு. ப. 1947. 5-ம் ப. 1956.

இன்ப நிலையம், மயிலாப்பூர், சென்னை—4.

இயற்கை வாழ்த்தில் (முதற்காதை), பள்ளியறையில் (மனையறம் படுத்தகாதை), கானல்வரியில் அரச வாழ்த்து ஒளிர்கிறது. பகலவன் பேசுதற்கும் பத்தினிப் பண்பிற்கும் தொடர்பில்லை. இறந்த பிணம் (கோவலன்) எழுந்து பேசுவது கற்பின் திறமல்ல; கற்பனையே. கண்ணகி விண்ணகம் நண்ணலும் கற்பனையே. இக்கற்பனை கண்ணகி அவலங்காணும் நமக்கு ஆறுதல் அளிக்கவே. கதையும் கற்பனையும் கலந்ததே காவியம். இளங்கோ அநீதியை எதிர்த்து நிற்கும் ஆண்மையை, அரசியல் நெறியை, புரட்சி வழியைப் போதிப்பதற்குத்தான் சிலப்பதிகாரம் செய்திருப்பர். ஊழின் வலிமை யுணர்த்தவோ, செத்தவரை எழுப்பும் கற்பின் பெருமை பேசவோ சிலம்பு செய்திருக்கமாட்டார். வள்ளுவர் அல்லற்பட்டு (மக்கள்) அழுதால் கொடுங்கோல் அழியும் என்கிறார். இளங்கோ அழுதால் அழியாது; அழித்தாலே அழியும் என்கிறார். மதுரையில் கண்ணகி புரட்சி அடுத்து பேசப்படுகின்றது. நூல் ஆங்கில எதிர்ப்பு அரசியல் பிரச்சாரமாக அமைகின்றது.

## 38. "சிலப்பதிகார வசனம்"

**புலவர். அரசு.**

மு. ப. 1961. கழக வெளியீடு, சென்னை — 1.

விலை: ரூ. 5·00.

பதிகம் தொடங்கி இறுதிவரையுள்ள சிலம்பு காவிய முழுமைக்கும் உரைவடிவில் அமைந்த உரைநடைச் சிலம்பாக அமைகின்றது நூல். ஒவ்வொரு காதையும், நிகழ்ச்சியமைப்பிற்கு ஏற்பப் பல உட்டலைப்புக்களாகப் பகுக்கப்பட்டு காவிய அமைப்பு எளிதின் விளங்குமாறு இவ்வசன நூல் அமைகின்றது.

## 39. "சிலப்பதிகார விருந்து"

டாக்டர் ந சஞ்சீவி.

மு. ப. 1956. இ. ப. 1964.

வி. உ. பாரிநிலையம், சென்னை — 1.

விலை: ரூ. 3·50.

திருமண வாழ்த்து, இந்திர விழாவில், மாதவி நெஞ்சம், வேதியன் வாழ்த்தும் வேட்டுவர் வாழ்க்கையும், பாண்டியன் புகழும் ஆய்ச்சியர் வாழ்த்தும், வேந்தனை எதிர்த்து வீரப்புரட்சி, முதற் கட்டம் (கண்ணகி செய்த அரசியற் புரட்சி) முடிந்தது — தேச பக்திக்குச் சோதனை, பத்தினியின் சபதம், பரம்பரைப் பண்பு, கொங்கைப் பூசல் கொடிதோ? அன்று, தெய்வத்தின் தேசபக்தி, குறவர் உள்ளம், முரசு முழங்கியது, மன்னவன் வஞ்சினமும் மக்கள் வாழ்த்தும், வடநாட்டில் தமிழர் படை, இளங்கோ இதயம் — ஆகிய தலைப்புக்களில் சிலம்பு காவிய நிகழ்ச்சி (அரசியல் பின்னணியில் அமைந்த) பேசப்படுகின்றது. 'நாட்டுப் பற்றும் நல்லமிழ்தை இளங்கோவடிகள் தம் இலக்கிய இதயமாம் கடலினின்று கடைந்தெடுத்துச் சிலப்பதிகாரம் என்ற பெயரால் நாளும் நமக்கு வாரி வழங்கிய வண்ணம் அருள் புரிந்து கொண்டிருக்கிறார்' என்னும் இந்நூலார் கொண்ட கொள்கையை விளக்குவனவாக நூலின் போக்கும், உட்டலைப்புக்களின் அமைப்பும், அமைந்து சிறக்கின்றது.

## 40. "சிலப்பதிகார விளக்கம்"

டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை

மு. ப. 1945 7-ம் ப. 1956

ஒற்றுமை ஆபீஸ், தி. நகர், சென்னை-17

விலை: ரூ. 3-00

சிலப்பதிகாரக் கதை, சிலப்பதிகார நூல் நயம், என்ற இரண்டு பகுதிகளாக நூல் அமைகின்றது. 'சிலப்பதிகார நூல் நயம்' - தனி நூலாக வந்துளது. அது கூறுவன முன்னர் தரப் பட்டுள்ளது. 'சிலப்பதிகாரக் கதை' பகுதி பல சிறு சிறு உட்டலைப்புக்கள் அமைத்துக்கொண்டு சிலம்பின் கதையைக் கூறிச் செல்கின்றது.

## 41. "சிலம்பின் ஆசிரியர் யார்?"

**பகலவன்.**

**1968.** இரா. பாஸ்கரன் வெளியீடு,
பிடாரி கோயில் தெரு, திருவாடானை.

'மணிமேகலை மேல் உலரைபொருள் முற்றிய சிலப்பதிகாரம் முற்றும்', எனும் நூற் கட்டுரைத் தொடருக்கு, 'உரைக்க வந்த நூற் பொருள் இந்நூற்கண் (சிலம்பில்) முற்றுப்பெறவில்லை. வேறு ஒரு நூலான மணிமேகலையில் கூற வந்த உரைபொருள் முற்றும்' என உரை கொண்டு, திரைப்படப் பாடல் புத்தகம் கதைச் சுருக்கம் சொல்லி, 'மீதியை எமது வெள்ளித்திரையில் காண்க' என அமைவதுபோல், 'நான் இயற்றிய சிலம்பைப் படித்துவிட்டீர்கள்; அதில் நான் (சாத்தனர்) கூற விழைந்த உரை பொருள் மணிமேகலையில் முற்றும்' என்பதாகப் பொருள் கொண்டு சிலம்பு சாத்தனர் இயற்றியதென்பர். அன்றியும், சிலம்பில் அடிகள் தன்னை வியத்தல் (பதிகத்தில்), இன்றியமை யாவிடத்தும் மணிமேகலை பற்றிக் கூருதது, சிலம்பின் புகார் வண்ணனையும், மணிமேகலை வஞ்சி வண்ணனையும் ஒப்புடையனவாயிருத்தல், சிலம்பில் புகார், மதுரை வண்ணனை மட்டும் சிறக்க (வஞ்சி வண்ணனை சிறப்பின்மை பெற), மணிமேகலையில் வஞ்சி வண்ணனை மட்டும் சிறக்க அமைதல், ஆகியன காட்டி இரு நூலும் ஒருவர் பாடியதென முடிப்பர். சிலம்பில் சமண, சைவ, வைணவ கொள்கை, மதம் பற்றிப் பொதுப்பட மொழிந்து, மணிமேகலையில் பௌத்தத்தின் சிறப்பையும் தத்துவங்களையும் தர்க்க ரீதியாக ஆய்ந்து, பிற சமயங்களின் குறைகளை எடுத்தியம்பி பௌத்தப் பெருமை பராவுகின்ருர். சிலம்பு—மணி—ஒப்புமையடிகள், கருத்துக்கள் சில தொகுத்துக் கொடுக்கப்பட்டு, அவ்வழியும் இருநூல் பாடியவர் ஒருவரே; அவர் சாத்தனரே என்பர். இதன் மதிப்புரையில் சாமி சிதம்பரனர் இரு நூற்களுக்குமுள்ள அடிப்படை வேறுபாடுகளான கவித்திறன், யாப்பமைப்பு, சமயப் பொதுமை, பண்பாடு முதலான சுட்டி இரண்டு நூலும் ஒருவரால் எழுதப்பட்டதன்றென மறுப்பர்.

## 42. "சிலம்பின் காப்பியப் பண்புகள்"

**செயகுமார்.**

1969 எம். ஏ. (தமிழ்) தேர்வு ஆய்வேடு.

மதுரைப் பல்கலைக் கழகம்.

சங்க காலத்தில் காப்பியம் தோன்றாமைக்குக் காரணங்கள், தமிழ்க் காப்பியங்களில் சிலம்பின் இடம், சிலம்பின் காப்பியப் பண்பு, சிலம்பு காவியக் கதைப் போக்கு, கிளைக்கதைகள், சிலம்பின் நாடக முரணமைப்பு, காப்பிய உவமை, கனவு, அறக் கருத்துக்கள், இயற்கை இறந்த கற்பனைகள், காப்பிய வண்ணனை (இயற்கை வண்ணனை, சமுதாய வண்ணனை, உணர்ச்சி வண்ணனை, கலை வண்ணனை) சிலம்பின் பாத்திரப் படைப்பு (முதல் நிலைப் பாத்திரங்கள், துணை நிலைப் பாத்திரங்கள், குழுப் பாத்திரங்கள்) ஆகியவை பற்றி ஆய்வு அமைகின்றது. சிறப்பான புதிய செய்திகள் இல்லையாகினும் செய்திகள் தலைப்பிற்கேற்ப வகைபெற வகுக்கப்படுகின்றன.

## 43. "சிலம்பின் கொடிகள்"

**எஸ். ஆர். மார்க்க பந்து சர்மா,**

மு. ப. 1963. தொல்காப்பியர் நூலகம், சிதம்பரம்.

விலை: ரூ. 2-00

'பொன்னே கொடியே புனைபூங் கோதாய்' என்பதில் அடிகள் பொன்னை ஆன்மாவாகவும், கொடியை உடலாகவும், பூவை மனமாகவும் காட்டியுள்ளார். ஆன்மா, மனம், உயிர் என்பவை ஒரு பொருள் குறித்தன. ஆன்மாவின் ஆற்றலை மனம் பிரதிபலிக்கின்றது. மனத்தின் இயல்பு காட்டவே அடிகள் பொற்கொடியைக் காட்டியுள்ளார். 'செம்பொற்கொடியன்னாய்' எனக் கண்ணகி செந்நிறம் பேசப்படுவது கோவலன் கொலையுண்ட பின்னரே. கண்ணகி கொடியோவியம் 12. சாங்கிய தத்துவம் செயல்படுவதும் 12. கண்ணகிபூ ஓவியம் 24. சாங்கிய தத்துவம் 24. இச்சாங்கிய தத்துவங் கொண்டு கண்ணகியின் 'கொடி' ஓவியம் விளக்கப்படுகின்றது. திங்கள் மனம், ஞாயிறு அறிவு, ஆன்மா. ஆணவத்தின் அழிவே மெய்யுணர்வாகலின் அடிகள் அழிந்த புகார் போற்றியுள்ளார். மனத்தைத் துறந்த

லாவது, அது தோற்றுவிக்கும் அவாவினைத் துறத்தலாகும். சிலம்பு மகளிர் காப்பியம். சிலம்பில் கண்ணகி படைப்பை சாங்கிய தத்துவத்தோடு இணைத்து அத்தத்துவ விளக்கமாகக் காணுகின்றார் ஆசிரியர்.

## 44. "சிலம்பின் சிறுநகை" (கவிதை நூல்)

**டாக்டர் சாலை இளந்திரையன்**

மு. ப. 1965. வி. உ. பாரி நிலையம், சென்னை-1

விலை: ரூ. 1-50

தவறு செய்த பொற்கொல்லன் நெஞ்சக் குமுறல்களாக இக் கவிதை நூல் காணப்படினும், தவறு செய்கின்ற ஒவ்வொரு மனித உள்ளமும் என்ன நினைக்கும் என்பதே ஈண்டு சிறந் துரைக்கப்படுகிறது. கவிதை நூற்கு ஆசிரியரே அளிக்கின்ற முன்னுரை சிறப்புற அமைகின்றது. 'கண்டகாவியம்' என்ற இந்தி மொழிக்கண்ணுள்ள புது இலக்கிய வகையை ஆசிரியர் சுட்டிக்காட்டி அப்புது இலக்கிய வகையில் தம் நூலையும் படைத்துள்ளார். 'ஓடுகின்றான் பொற்கொல்லன், ஓடுகின்றான் உயிர் சுமந்தே' எனப் பொற்கொல்லன் நிலை சுட்டலும், 'எந்த நிலைக்கும் இரட்டிப்பாய் வாழ்வதுதான், இந்த வுலகத்து மாந்தர் இயல்பன்றோ' வென மாந்தரியல்பு சுட்டலும், 'மாளிகைத் தங்கம் மடியில் குடிபுகுந்தால், கோழியுங் கொஞ்சங் குரலெடுத்துக் கூவுந்தான்' எனப் பொற்கொல்லன் இயல்பு காட்டலும், 'பொய் யில் தொடங்குவோர் பொய்யில் முடங்குவார்' என்ற தத்துவம் மொழிதலும், 'பாழும் உயிரச்சம் கொண்டுவிட்ட மானுடன், வாழும் அறம் எதையும் வாழவிடுவானோ?' என்ற அறம் பிறழ் மனித இயல்பு எடுத்தியம்பலுமாய சிறப்புக்கள் பலவுண்டு நூற்கண்.

## [44—அ] "சிலம்பின் சில பரல்கள்"

**டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்,**

மு. ப. டிசம்பர் 1972, (வி. உ.) செயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோயில், விலை: ரூ. 3-00

நூல் முனிவர் வளர்த்த தமிழ், ஈரடியும் முத்தமிழும், சிலம் பின் கால உணர்வு ஒரு குறிப்பு, கானல் வரி ஒரு திருப்பு மையம, சிலம்பின் வஞ்சின மாலை, சிலம்பின் மண்ணக மடந்தை, சிலம்

பில் கனவுகள், சிலம்பில் குன்றக் குரவை, ஆருயிர் மருந்தே, சிலம்பில் பாத்திர அறிமுகம், சிலம்பு கூறும் சமயம், இளங்கோ பெண்ணைக் கண்ட காட்சி என்னும் பன்னிரு கட்டுரைகளை உள்ளடக்கியுள்ளது. முதற் கட்டுரை நூற்கு முன்னுரையாக அமைகின்றது. 'ஆருயிர் மருந்தே' கட்டுரை கோவலன் கண்ணகியைப் போற்றுகின்ற போற்றல் மொழிகளில் உள்ள 'ஆருயிர்' (மணி; 75) கோவலன் உயிரென்றும், அது நல்லுயிர் என்றும், கண்ணகி வைத்திய நாயகி ஆகின்றாள் என்றும், அவ்வழி சமணத்தை நீக்கி இந்து சமய வளர்ச்சிக்குத் தூண்டுகோலாய் அமைந்தவர் இளங்கோ என்றும் விளக்குகிறது. சிலம்பில் குன்றக் குரவை கட்டுரை, இளங்கோ குன்றக் குரவையில் சிற்றின்பத்தைப் பாடிய தன் நோக்கம் பேரின்பத்தை விளக்கவே எனக் காட்டி 'எற்றென்றும் காணேன்' எனத் தொடங்கும் மூன்று பாடல்களுக்கும் உள்ளுறை பொருள் கொண்டு பேரின்பத்தை விளக்குகின்றது. 'சிலம்பில் பாத்திர அறிமுகம்', முதலில் தோன்றி இறுதிவரையமைவன—முதலில் தோன்றி இடையில் மறைவன—இடையில் தோன்றி இடையில் மறைவன—இடையில் தோன்றி இறுதிவரையமைவன—ஒரே காதையில் தோன்றி மறைவன எனப் பாத்திரங்களை வகைப்படுத்தி அவை தோன்றுமிடம், மறையுமிடம் சுட்டுகின்றது. கண்ணகி, தேவந்தி, மாங்காட்டு மறையவன், கவுந்தி, பொற்கொல்லன் ஆகிய பாத்திர அறிமுகத்தின் சிறப்பும் அமைப்பும் பற்றிக் கட்டுரை விளக்குகின்றது. 'சிலம்பு கூறும் சமயம்', இளங்கோவின் சமயப் பொதுமையை எடுத்துக்காட்டுகின்றது. 'இளங்கோ பெண்ணைக் கண்ட காட்சி'யில், அடிகள் நிலம், யாறு, மதி, கொடி, யாழ், கூற்றுவன், அணங்கு, மலர் முதலானவற்றைப் பெண்ணாகக் காணுகின்ற சிறப்பு எடுத்துக்காட்டப்படுகின்றது. ஏனைக் கட்டுரைகள் பற்றி அவ்வத்தலைப்புக்களில் தனித்தனியாகக் காணப்பட்டுள்ளன.

## 45. "சிலம்பின் தகுதி"

**எஸ். ஆர். மார்க்க பந்து சர்மா,**

மு. ப. 1962. தொல்காப்பியர் நூலகம், சென்னை-14

விலை: ரூ. 2-00

கலைக் காப்பியங்கள் தோன்றச் சமுதாய வீழ்ச்சியே காரணம். 'அவாக்கொள்ளலைவிட அதனைத் துறத்தலே பய

னுடையது' என்பதை விளக்கவே செங்குட்டுவனைப் படைத்தார். கலையும் வாழ்க்கையும் இணைந்ததே சிலம்பு தோன்றக் காரணம். 'வாழ்க்கையே கலை' என்பதே சிலம்பின் அடிப்படைக் கொள்கை. சிலம்பு இலக்கிய வரலாற்றில் புதிய மரபைத் தோற்றுவித்துள்ளது. பிற்றை உலா, பரணி, கோவை நூற்கள் தோன்றச் சிலம்பு வாயிலாக அமைவது. காதலைப் போற்றும் சங்க அகப் பாடல் மரபை இளங்கோ புறக்கணித்திருக்கின்றார். மகிழ்ச்சி தருவது போல் தோன்றி, (காதல்) துன்பத்தையே தரும், என்பதை மூன்று பாத்திரங்களின் வாழ்க்கையிலும் காட்டுகிறார். அடிகள் காலத்துப் பெண் உரிமை இல்லாதவள் ஆகிவிட்டாள். சிலம்பு வஞ்சிக்காண்டத்தாலேயே 'காப்பியம்' என்ற தகுதி பெறுகின்றது சேக்ஸ்சுபியர்-ஹாம்லத் வாழ்க்கை துய்ப்பதற்கன்று என்று கருதியதுபோன்று கண்ணகியும் கருதியதால் தான் தேவருலகு செல்கிறாள். சிலப்பதிகாரமும் துறக்க நீக்கமும் (Paradise Lost) செல்லும் தேஎம், எது என்பதற்கு வழிகாட்டுகின்றன. மக்கள் பரிணாம ஆக்கத்தின் முடிவை (The end of human evolution) கண்ணகி இறைநிலை எய்தினாள் என்பதன் வாயிலாகக் கண்டு கூறியுள்ளார். இவை ஆசிரியர் கருத்துக்களாக நூற்கண் இடம்பெறுகின்றன. சிறந்த சிந்தனைத் திறன் மிக்க ஆய்வாக நூல் மிளிர்கின்றது.

## 46. "சிலம்பின் பாயிரம்"

எஸ். ஆர். மார்க்கபந்து சர்மா.

மு. ப. 1961. தொல்காப்பியர் நூலகம், சென்னை — 14.

விலை: ரூ 2·00

சிலம்பின் மங்கல வாழ்த்துப் பாடல் பாயிரமாக அமைகின்றது. இளங்கோ முதற் பாடலிலேயே தம்முடைய காப்பியக் கதையின் போக்கு, முடிவு, பயன் இவையனைத்தையும் குறிப்பிட்டு விடுகின்றார். கண்ணகி பற்றிய 'தவக்கொழுந்து' 'ஒரு மாமணி', 'திருமாமணி', 'ஈகைவான் கொடியன்னாள்', 'குலக்கொம்பர்', 'குணக்குன்று', 'போதிலார் திருவினாள்', 'தீதிலா வடமீன்', 'பெயர் மன்னும்' முதலான சொல்லடைவுச் செம்மை விளக்கம் பெறுகின்றன. கோவலன் பற்றிய 'செவ்வேள்', மண் தேய்த்த புகழினான், முதலான சொல்லடைவு விளக்கப்படுகின்

றன. காப்பியம் கண்ணகி கதைகூறத் தோன்றிய தாகலின் கோவலன் பெருமை பேசும் பொறுப்பதற்கில்லை இக்காப்பியம் ஓர் பேரிழவின் சித்திரம். அடிகள் முதற்பாடல் வழியே இவ்வுலகார் எவ்வளவு முயன்றாலும் உலக நெறியை, ஊழின் விளைவை, இயற்கையின் போக்கை மாற்றியமைக்க முடியாதென்பதைக் காட்டுகிறார். 'கடவுள் நெறியே அறநெறியாகும்' என்றுணர்த்த ஆசிரியர் இக்காப்பியம் அருளினர். இவை இந்நூலார் இதன் கண் தெரிக்கும் கருத்து விளக்கங்கள்.

## 47. "சிலம்பின் பூக்கள்"

**எஸ். ஆர். மார்க்க பந்து சர்மா.**

மு. ப. 1962. தொல்காப்பியர் நூலகம், சிதம்பரம்.

விலை: ரூ. 3-00.

சிலம்பில் வரும் கண்ணகிபற்றிய 'பூ' ஓவியம் (பூவண்ணனை) 24-ஐ எடுத்துக்காட்டி அதனோடு சாங்கிய தத்துவம் 24-ஐயும் இணைத்துக் காட்டித் தத்துவ ரீதியில் கண்ணகி படைப்பை ஆய்கின்றார். மலர்கள் மணம் பரப்பிப் பின் தம் இயல்பு மாறி வருவதனைப் போலவே உலக வாழ்க்கையில் மகிழ்ச்சி தோன்றிப் பின் துன்பமாக மாறும். மலர்களின் வாழ்க்கை உலக வாழ்க்கையினை ஒத்திருப்பதால் அடிகள் அவற்றை ஓவியங்களாகப் படைத்துக் கதைத் தலைவியின் வாழ்க்கையை விளக்கியிருக்கின்றார். 'போதிலார் திருவினள்', கயமலர்க்கண்ணி, தாரும் மாலையும், நறுமலர்க் கோதை, தயங்கிணர்க் கோதை, நாறைங் கூந்தல், ஆகிய அடைமொழிகளில் கண்ணகியின் மனவளர்ச்சி, வளர்ந்து இறை நிலை எய்துதல் இவற்றை விளக்குவர். தேவந்தி வருகை கண்ணகியை மயங்க வைக்க வந்த தாமத குணத்தின் முயற்சியே. கண்ணகி மனவளர்ச்சி நிலை — இறை நிலை இரண்டனையும் அவளுக்கு அடிகள் கொடுத்துள்ள 'பூ' ஓவிய வண்ணனையில் எடுத்துக் காட்டி விளக்கும் தத்துவ நயம் சிறக்கின்றது.

## 48. "சிலம்பின் மணிகள்"

புலவர். சா சுந்தரனுர்.

மு. ப. 1964. விசாலாட்சி பதிப்பகம், சென்னை — 14.

விலை: ரூ. 3

தேவந்தி, கவுந்தியடிகள், மாதரி, மாதவி, மாடல மறையவன், தக்கிணு மூர்த்தி, பொற்கைப் பாண்டியன், பரதன், மாங்காட்டு மறையவன், — இவர்தம் பாத்திரப் படைப்பும் அவர் இடம் பெறும் கதை நிகழ்ச்சியும் பேசப்படுகின்றது. பண்பு ஆராயப்படவில்லை. 'அன்பு வழி' தலைப்பில் வஞ்சிக் காண்ட நிகழ்ச்சியை நாடக (உரை) அமைப்பில் தருகின்றூர். கண்ணகிபோற்றிய கற்பினர் எழுவர், இளங்கோவடிகள் (வரலாறு), புல்மை நலன் — இவை பின் மூன்று தலைப்பிலடங்கும் — புதியன இல்லை.

## 49. "சிலம்பின் முப்பொருள்"

பால்ராஜ்

1971. எம். ஏ. (தமிழ்த்) தேர்வு ஆய்வேடு

மதுரைப் பல்கலைக்கழகம்.

மூன்று உண்மைகள், மூன்று தமிழ், முப்பாகுபாடு (மூன்று காண்டம், மூன்று நகரம், மூன்று வேந்தன்) ஆய முத்தலைப்புக்களில் ஆய்வடங்கும். மூன்று உண்மைகள் தலைப்புக்கண், இளங்கோவின் அரசியல், உரைசால் பத்தினியர் மூவர், ஊழ் வினைச் செயல் பற்றிய சற்று விரிந்த செய்திகள் தொகுக்கப்பட்டுள்ளன. புதிய செய்திகளோ, போக்கோ ஆய்வின்கணில்லை.

## 50. "சிலம்பின் ரசனை"

எஸ். ஆர். மார்க்கபந்து சர்மா

மு. ப. 1948 இ. ப. 1961

தொல்காப்பியர் நூலகம், சென்னை-14

விலை: ரூ. 3-75

'அறிமுகம்' பகுதி சிலம்பு காவிய நோக்கம், பயன், காவியப் பெயர்ப் பொருத்தம் பற்றி விளக்கும். 'அமைப்பு' பகுதி கதை,

போராட்டம், கோவலன் பிரிய வினையின் விளைவு காரணமா? என்பன விளக்கம் பெறுவன. 'நாடகம்' பகுதி ஐவகை நாடக உறுப்பு, நாடகப் பண்பு, நாடகப் பாத்திர இயல்பு, பேசுகின்றது; சிலம்பு ஓர் அவல நாடகம். 'காப்பியம்' என்பதன்கண் சிலம்பும் காப்பிய இலக்கணமும், ஐவகைக் காப்பிய இசைவு, அடிகள் காட்டும் தத்துவம், முதலான இடம்பெறுகின்றன. தேவி துஞ்சியது, கண்ணகி வயது, மணிமேகலை துறவு - இவை 'சிக்கல்' தலைப்பின்கண் பேசப்படுவன. ஊர்சூழ் வரி நிகழ்ச்சி, கண்ணகி முறுவல், மனமாற்றம் (இறுதி நிலையில்) இவை விளக்கம் பகுதியினும்; கோவலன் புறப்பாடு, மதுரை எரிந்த நிகழ்ச்சி 'அமைதி'ப் பகுதிக் கண்ணும்; இளங்கோ சமயம் (சமணம்), திறம், அவா முதலான 'அடிகள்' தலைப்பினும், 'தகுதி' தலைப்பின்கண் சிலம்பு சங்க காலக் காவியமன்று; தமிழ்க் காப்பியத்துத் தலையாயது; உலக காப்பியங்களின் சிறந்தனவற்றுள் ஒன்று சிலம்பு; என்பதும் ஆசிரியரால் நன்கு விளக்கப்படுகின்றன. சிலம்பு காவியம் பற்றிய நல்ல திறனாய்வு நூல்.

## 51. "சிலம்புச் செல்வம்"

**யோகி. சுத்தானந்த பாரதியார்**

மு. ப. 1939 2-ம் ப. 1944

அன்பு நிலையம், இராமச்சந்திரபுரம், திருச்சி மாவட்டம்

விலை: ரூ. 3-00

இளங்கோ வழங்கிய செல்வம், கோட்டமில் கட்டுரை தலைப்புக்களில் இளங்கோ காவியச் சிறப்பு, பதிக விளக்கம் பேசப்படுகின்றன. புகார்க்காண்ட நிகழ்ச்சி, 'மங்கல வாழ்த்து, கரிகால் வளவன், பூம்புகார், கண்ணகி திருமணம், மங்கல மனையறம், மாதவி, ஆடலாசிரியன், இசைக்கலை, முழவோன். குழலோன், யாழோன், அரங்க அமைப்பு, மாதவி நடனம், அந்திமாலைச் சிறப்பு, இந்திர விழா, கடல் விளையாட்டு காணல், கானல் வரி, மாதவி தூது, கண்ணகி கனவு, கோவலன் வரவு, கவுந்தியடிகள், வழிக்காட்சிகள், சாரணர் அறவுரை, கவுந்தி சாபம், ஆகிய தலைப்புக்களிலும், மதுரைக்காண்ட நிகழ்ச்சிகள், அந்தணன் சொன்ன வழி, மயக்குந் தெய்வம், கொற்றவை வழிபாடு, நிலாப் பயணம், மாதவி செய்தி, அம்பணவர் மதுரை

சேர்தல், கவுந்திசொல், மதுரைக் காட்சி, மாடலன், மாதரி பணிவு, அன்புப் பணி, பொற்கொல்லன் வஞ்சம், கொலை! படுகொலை, தீக்குறி, குரவை, கண்ணகி துன்பம், கண்ணகி முறையீடு, யானோ அரசன்? யானே கள்வன், கண்ணகியின் கற்புக் கனல், சூழுதே தீ, மதுராபதியின் கட்டுரையாகிய தலைப்புக்களிலும்; வஞ்சிக்காண்ட நிகழ்ச்சிகள், கண்ணகி விண் செல்லல், குன்றக் குரவை, சேரன் விருப்பம், புறப்பாடு, நீலகிரி யில், வீரத் தமிழர் போர்வினை, மன்னவனுக்கு மாடலன் உரைத் தது, வருகையும் உவகையும், மாடலன் அறிவுரை, வேள்விப் பிரதிஷ்டை, வாழ்த்துரைகள், தேவந்தியின் ஆவேசம், இளங்கோ கேட்டவை—யாய தலைப்புக்களிலும், சிலப்பதிகாரக் கதை நிகழ்ச்சி, உரை நடையில் விளக்கப்படுகின்றது.

## 52. "சிலம்புச் செல்வன்"

சு. தங்கமணி

1969 எம். ஏ. (தமிழ்) தேர்வு ஆய்வேடு

மதுரைப் பல்கலைக் கழகம்

காப்பியத் தலைவனுக்குரிய பண்பு நலன் பற்றிய திறனாய் வாளர் கருத்துப் பல தொகுக்கப்பட்டுப் பின் கோவலன் பண்பு நலன், பாத்திரப் படைப்பு, நற்குல நம்பி, பாராட்டும் பண்புகள், இல்லற இடையீடு, இருவகைக் காதல், கலையும் நிலையும், பிறி தொரு வாழ்வு, கோவலனும் திருமுகமும், ஏற்பட்ட சூழல், திருந் திய உள்ளத்தான், குன்றாத கொள்கையான், படைப்பால் உயர்ந்தோன், அமரர் குழாத்தான், தலைவன் தவறின, இளங்கோ ஈந்த சீர்திருத்தச் செய்திகள், ஆகிய தலைப்புக்களில் பேசப்படு கின்றன. காப்பியம் கண்ணகிக்கு முக்கியத்துவம் கொடுப்பதை விடக் கோவலனுக்கே முக்கியத்துவம் கொடுத்திருக்கிறது. கோவலன் மாதவியை நாடியது குறையன்று. கண்ணகியை மறந்ததே குறை. நிலையான காதலுக்குப் புற அழகன்றிப் பண்பே காரணம் என்பதும், கொண்ட கொள்கையில் மாற்றம் இல்லாதிருத்தல் ஆடவர்க் கழகு என்பதும் இளங்கோ கொண்ட கொள்கை. ஒரு பெண் கணவனிடம் தாயாக அன்பு காட்டினும், வேலைக்காரியாகப் பணிவு காட்டினும், அமைச்சராய் அறிவு கூறித் தாசிபோல் இன்பந் தரல் வேண்டும் என்ற சிறந்த

பெண்மை இலக்கணமும் சிலம்பில் நிலைநாட்டப்படுகிறது. இவை ஆய்வாளர் கொள்ளும் முடிவு.

## 53. "சிலம்புச் செல்வி கண்ணகி"

**அ. சாம்ராஜ்**

1969. எம். ஏ. (தமிழ்) தேர்வு ஆய்வேடு

மதுரைப் பல்கலைக்கழகம்

கண்ணகியின் இல்லறவாழ்க்கை, கொண்டவனைப் பேணிய குலக்கொடி, கண்ணகியின் மென்மை, கண்ணகியின் அரசியல் புரட்சி, இலட்சியத் தலைவி கண்ணகி, காப்பியத் தலைவி கண்ணகி என்னும் தலைப்புக்களில் கண்ணகியின் படைப்பு பேசப்படுகின்றது. ஆய்வு சிறப்புடன் அமையவில்லை.

## 54. "சிலம்புத் திறன்"

**கவிஞர் தமிழோவியன்**

மு. ப. 1964 வி. உ. பாரி நிலையம், சென்னை-1

விலை: ரூ 1-00

சிலம்பின் கதை, இளங்கோவின் கைவண்ணம், இலட்சியக் குரல், கண்ணகி கண்ட கனு, கலைஞரின் போட்டி, மதுரை எரியலாமா?, கோவலன் கள்வனே!, மூவர் சென்ற பாதை, குரலவிந்த குயில், ஊர் சூழ்ந்த துன்பம், கர்னல் வரி-யென்னுந் தலைப்புக்களில் நூல் அடங்கும். சிலம்பு கதையில் இசை, ஆடல் இணைந்து செயல்படுகின்றன. பழமையும் புதுமையும் காட்டுதல், நகைச்சுவை, சமயப் பொதுமை நிற்றல் இவை இளங்கோவின் கைவண்ணத் திறன். அறத்தின் போராட்டமே இளங்கோவின் இலட்சியக் குரல். காவியத்திற்காகப் படைக்கப்பட்ட கண்ணகி கனு அவனை ஓர் இலட்சியப் படைப்பாகக் காட்டுகிறது. கலைஞர் (கோவலன், மாதவி) கலைப்போட்டி வாழ்வின் தோல்வியாக முடிகிறது. அறவீழ்ச்சி ஏற்படின் மதுரை என்ன? உலகமே எரியட்டும் என்று துணியும் உள்ளம் இளங்கோவினது. கள்வனை (வாழ்க்கையில்) வாழ்ந்த கோவலன் கள்வன் என்ற பழியோடு மடிகின்றான். மூவர் (கண்ணகி, கோவலன், மாதவி)

சென்ற இறுதி நிலை அறவழி. குரலவிந்த குயிலாக மாதவியமை கின்றாள். கண்ணகி துன்பம் ஊர்சூழ் துன்பமாகிறது. கானல் வரி இன்றேல் சிலம்பு இல்லை. அதுவே காப்பியத் திருப்பு மையம். இவை இந்நூலார் தெரிக்கும் கருத்துக்கள்.

## 55. "சிலம்புத் தேன்"

டாக்டர் ந. சஞ்சீவி

மு. ப. 1959 வி. உ. பாரி நிலையம், சென்னை–1

விலை: ரூ. 1-00

சிலம்பின் சிறப்பு, சிலம்பின் குறிக்கோள், சிலம்பின் புகழ் எனும் முத்தலைப்பில் நூலமைகிறது. முத்தமிழ் முதற்காப்பியம், இளங்கோவின் இதயம், காவியக் கருப்பொருள் — இவை சிலம்புச் சிறப்பில் இடம்பெறுவன. 'சிலம்பின் குறிக்கோளில், காவியம் எழ முந்நீதி காரணமா? அரசியல் காரணமா? அற நோக்கு காரணமா? என வினா எழுப்பி இல்லற தவத்தின் எல்லையில் ஆற்றலை, கற்பின் திறத்தைக் காட்டவே காவியம் படைத்தார் என முடிப்பர். சிலம்பிற்கு உரை வகுத்தார், பதிப்பித்தார், சிலம்பைப் பரவச் செய்தார், ஆய்வு நூல் கட்டுரை வெளியிட்டார் சிலர் பெயர் சுட்டப்பட்டு அவ்வழிச் சிலம்பின் ஏற்றம் பேசப்படுகின்றது.

## 56. "சிலம்பு துன்பியல் நாடகம்"

ஜரின் ராதாபாய்

1969. எம். ஏ. (தமிழ்) தேர்வு ஆய்வேடு

மதுரைப் பல்கலைக் கழகம்

துன்பியல் வகை நான்கு. 1. தலைவனுக்கும் விதிக்கும் இடையில் நடத்தப்படும் போராட்டம் (Classical Tragedy) 2. தலைவனுக்கும் நீதிக்கும் இடையில் நடத்தப்படும் போராட்டம் (Romantic Tragedy) 3 மனித உள்ளத்து நன்மைத் தீமைக்கிடையில் நடத்தப்படும் போராட்டம் (Psychological Tragedy) 4 அவல வீரனுக்கும் அவன் வாழும் சமூகத்திற்கும் போராட்டம் (Social Tragedy). துன்பியல் புரிந்துகொள்ள

முடியாத இந்த உலகத்தின் தலைவிதியையும், மனித அறிவுக்கு எட்டாத மறைபொருளையுமே விளக்கிக்காட்டுகிறது. துன்பியல் நோக்கம் கடவுள் வழியை மக்கட்குக் காட்டுவது. துன்பியல் உள்ளத்தைத் தூய்மைப்படுத்தவேண்டும். துன்பியற் படைப்புக்களான கண்ணகி, கோவலன், மாதவி, பாண்டியன் படைப்பு பேசப்படுகின்றது. கண்ணகியின் உயர்ந்த பண்பு அழிவைக் கொண்டுவரும் சக்தியாக அமைகிறது. அவள் துன்புறுதற்கு அவளின் குணக் குறைபாடே காரணம். கோவலன் துன்பத்திற்கு, அவனைச் சூழ்ந்தார் துன்பம் அடைதற்கு அவனின் தீய உணர்ச்சியாரவாரமே காரணம். 'துன்பியல் நாடகம் வாழ்க்கையின் வெறுப்பையும், துறவு மனப்பான்மையையும் ஊட்டுவனவாக அமையவேண்டும்', என்ற செர்மன் அறிஞர் 'சோன்பன்கர்' கருத்து மாதவி வாழ்வில் அமைகின்றது. பாண்டியன் தனது தீர்ப்பின் மேல் அதிக நம்பிக்கை வைத்தான். அதனால் அழிந்தான். இளங்கோ பல பாத்திரங்களின் சிறு தவறுகளாலேயே துன்பியல் அமைவதைக் காட்டுகிறார். சிலம்புசிறக்கத் துன்பியலே காரணம். 'நமது மதியைக் கொண்டு நாம் செய்யும் நல்வினை, தீவினைகளால் உண்டாகின்ற புண்ணிய பாவத்திற்கேற்பக் கருணையுடைய இறைவன் அதற்கு இன்ன துன்பம், இன்ன இன்பம் அனுபவிக்க வேண்டும் என்று தீர்ப்பு அளிக்கும் அத்தீர்ப்பே விதியாம். விதியின் முன் மனித முயற்சி செயல்படாது. இப் பண்பு அவல நாடகச் சுவையை மிகுவிக்கும். கோவலன், கண்ணகி விதியோடு போராடித் தோல்விகாணுகின்றனர். கண்ணகி, பாண்டியன் தேவி, சிலம்பு அவல நாடகத்தை நடத்துகின்றன. நல்ல முறையில் திறனாய்வுப் போக்கு அமைகின்றது.

## 57. "சிலம்புப் புதையல்"

**மது. ச. விமலானந்தம்**

மு ப. 1962. இளங்கோ பதிப்பகம், புதுச்சேரி-1

விலை: ரூ. 2-50

சிலம்பின் சிறப்பு, காற்சிலம்பு தந்த நூற்சிலம்பு, முத்தமிழ்க் காப்பியத்தின் முதற்காதையின் நாடகப் போக்கு, நம்மை மறந்தாரை நாம் மறக்கமாட்டேமால், கானற் பாணியும் கனக விசயரும், மூவர் பெற்ற பைங்கொடியர் (சீதை, தமயந்தி, கண்ணகி)

பொற்கொல்லன் சூழ்ச்சியும் கோவலன் வீழ்ச்சியும், தென்னவன் தீதிலன், அடிகள் திறம் (கண்ணகி, மாதவி, குட்டுவன் மூவர் கதையை இணைத்தல், ஆடல் பாடல் அழகு இவற்றால் மாதவி யைக் கோவலனெடு பிணைத்துப் பின் அதனாலே பிரித்தல்) ஆசிரியர் கைவண்ணம், ஒருமை காணும் உள்ளம், வஞ்சிக் காண்டமாகிய தலைப்புக்களில் நூல் அமைகின்றது. சிலம்பு கதை கூற மட்டும் எழுந்ததன்று, மூவேந்தர் சீர்மை துலக்க, பத்தினியை உயர்ந்தோர் ஏத்த, காப்பியம் இன்பியலால் முடிபுற, வீரச்சுவை விளங்க, மூவேந்தர் ஒருமைப்பாடு காண, கண்ணகி மாதரால் தொழுதேத்தப்பட, பாத்திரப் படைப்பு நிறைவுற, தென்னவன் தீதிலனாக, கண்ணகி தூயவளாக, குடமலையாட்டியாக, கொங்கச் செவிலியாக, ஒருமாமணியாய் உலகிற்கோங்கிய திருமாமணியாக, கதையும் காப்பியமும் இணைய, நிலைக்களன் வஞ்சிக்காண்டம். எனவே அதனை இளங்கோவே இயற்றினர்; பிற்சேர்க்கை அன்றென்பர்.

## 58. "சிலம்பும் மேகலையும்"

**எஸ். ஆர். மார்க்கபந்து சர்மா**

மு. ப. 1961 தொல்காப்பியர் நூலகம், சென்னை-14

விலை ரூ. 1-50

இளங்கோவும் சாத்தனரும் காப்பிய கால இரட்டையர். இருவரும் ஒரு காலத்தவர். ஒரு நோக்குடையவர். மணிமேகலை யின் துறவை எதிர்பார்த்திருக்கவே அடிகள் கோவலன் கனவில் மணிமேகலை துறவைப் புகுத்தியுள்ளார். ஒரு சிறந்த காப்பி யத்தை இயற்றக் கண்ணகியின் கதையைவிட மணிமேகலையின் கதையே தகுதியுடையது. சிலம்பு கதைபோலவே மணிமேகலை யிலும் காதலன் கொலைப்பட்டமையே கதைத் தலைவியின் ஒருமையையும் தகுதியையும் வெளிப்படச் செய்திருக்கின்றது. சிலம்பை அடியொற்றியே மணிமேகலை செல்கிறது. இளங்கோ தாம் சென்ற நெறியினையும் அடைந்த பயனையும் கண்ணகியின் மேல் ஏற்றி அவள் சரிதையை ஒரு காப்பியமாகப் புனைந்தார். உண்மையில் இந்நூல் (சிலம்பு) முழுவதும் இளங்கோவின் சுய சரிதையைக் குறிப்பிடும் ஒரு பெரிய ஓவியமே' — என்பன ஆசிரியர் விளக்கங்களாக நூற்கண் அமைகின்றது.

## 59. "சிலம்பும் வாழ்வும்"

**புலியூர்க் கேசிகன்**

மு. ப. 1958 தேனருவிப் பதிப்பகம், தி. நகர், சென்னை-17
விலை: ரூ. 2-00

போக வாழ்வின் உச்சநிலை, அதன் விளைவு, விபரீதங்கள் சிலம்பில் அறியப்படும் வாழ்வியல் உண்மை. 'சக்தி' வணக்கம் முதன்மை பெறினும், சாத்தன் வணக்கமும் பெருமளவில் பேசப் படுகின்றது. செங்குட்டுவன், இளங்கோ உறவுமுறை தெளிவு பட அமையவில்லை. அறமும், விதியும், அருளும் கருதாக் கட்ட விழ்ந்த வாழ்க்கையே சிலம்பு சித்தரிப்பது. செல்வத்தின் ஆட்சி காலம் புகாரில் நிலவியது. அதனால் எதனையும் செல்வத்தால் பெற்றுவிடலாம் எனும் நிலை அமைந்திருந்தது. ஒருவனுக்கு ஒருத்தி என வாழும் தமிழ் மரபு சிலம்பில் காணப்படவில்லை. கணிகையர் எண்ணம் அக்காலத்துப் பெருகியிருந்தது. கலைப் பெண்ணைப் பொதுப் போக நுகர் பெண்ணாக்கி அவள் உடலின்ப விலையைப் புகாரின் நடுத்தெருவில் நின்று விலைகூறி விற்கும் அளவு சமுதாயம் சீர்கெட்டிருந்தது. கோவலன் தந்தை மகன் போக்கு பிடிக்காது பணம் கொடுத்தலை நிறுத்தினன். கண்ணகி தோற்றம், குணம்—இவை கோவலனுக்கு அவள்பால் மதிப்பை ஏற்படுத்தியதன்றிக் காதலை வளர்க்கவில்லை. பெண்ணுக்குச் சம உரிமை கொடா உழுத்துப்போன சமுதாய நிலையே கண்ணகி. பொற்கொல்லனிடம் கோவலன் உரையாடாதது, போன்ற பல சிறு சிறு குறைபாடுகள் சிலம்பில் காணப்படுகின்ற தென்பர். கோவலன் கொலை தவறு என்றுணர்ந்த எழுந்த அறச்செல்வியிடம், மதுராபதி 'எல்லாம்' ஊழ்வினை என்கின் றது. கொலைக்குக் காரணமான பொற்கொல்லனை அப்படியே விட்டுவிட்டார் இளங்கோ. ஒருபுறம் எல்லாம் ஊழ்; மறுபுறம் எல்லாம் தெய்வ விளையாடல்; இன்னனமாகக் கண்ணகியின் முழுமையான உருவைக் காண முடியவில்லை' என்பர்.

## 60. "சிலம்பு மக்கள் காப்பியம்"

**குமுதினி**

**1971** எம். ஏ. (தமிழ்) தேர்வு ஆய்வேடு.

மதுரைப் பல்கலைக் கழகம்

பாட்டுவகை, காவியப் பண்பு, உயர்ந்த பாட்டிலக்கியம், கதையும் காவியமும், அரசரும் அமரரும், கற்பு மகளிரும் வீர மாந்தரும், காப்பியக் கருக்களாம் தமிழ்க் கதைகள் (ஆதிமந்தி, வேள்பாரி கதை) ஆள்வோர் — ஆளப்படுவோர், வேந்தர் குடி மக்களைப் பாடினர், புதுமை இலக்கியம் – மக்கள் காப்பியம் என்னும் தலைப்புக்களில் ஆய்வடங்கும். சிலம்பின் பல்வகைப் பாட்டு, நாட்டுப் பாடலின் செல்வாக்கு, காப்பிய இலக்கணம், கிளைக் கதை, ஊழ்வினை, நாடகப் பண்பு, காப்பிய உவமை, உட்பொருள் இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் இவை காவியப் பண்பில் பேசப் படுவன. சிலம்பின் அகப் பாடலமைப்பு, வெண்பா, நாடக அமைப்பு, இவை உயர்ந்த பாட்டிலக்கியத்தின் கண் பேசப்படுவன. இளங்கோ அரசியலுக்கு முக்கியத்துவம் கொடுத்துக் காப்பியக் கதையை நடத்திச் செல்கின்றார். ஆதி மனிதன் அடிப் படை உணர்ச்சிகளாகிய காதல், வீரம், சினம் என்பவையும், அவற்றின் வெளிப்பாடுகளாய மனம், போர், சூழ்ச்சி முதலிய செயல் பாடுகளுமே காப்பியங்களில் இடம் பெறுவன. தலைப்புக் கள் நன்கமைக்கப் பட்டிருப்பினும் ஆய்வு நுணுக்கம் சிறப்புற வில்லை.

## 61. "சிலம்பு மணிகள்"

**வித்துவான். ஆ. சிவலிங்கனர்**

இ. ப. 1969. பாரிநிலையம், சென்னை — 1.

விலை: ரூ. 2·50

மாதவி, தேவந்தி, கவுந்தி, வசந்தமாலை, மாடலன், மறைய வன், மாதரி, மதுராபதி, கண்ணகி பெயர்க் காரணம், பத்தினிச் செய்யுள், இளங்கோவடிகள் சமயம், ஆகிய செந்தமிழ்ச் செல்வி யில் வந்துள்ள கட்டுரைகளும், கோசிக மணி (கழக 1008–வது வெளியீட்டு விழாக் கட்டுரை) ஆகிய பன்னிரு கட்டுரைகளும், ஊர் அரவம் கேட்ட ஒருத்தி, பழியொடு படராப் பஞ்சவன்,

சாத்தனுர், மூவேந்தர் வாழ்த்து, தனி வெண்பாக்கள் ஆகிய (பிற ஏடுகளில் வந்துள்ள) ஐந்து கட்டுரைகளும் ஆக 17 கட்டுரை களின் தொகுப்பு நூல் இது. முதற் பன்னிரு கட்டுரைகள் தனியே கட்டுரைப் பகுதியிற் சேர்க்கப்பட்டுள்ள. எஞ்சியவற் றில் பேசப்படுவன வருமாறு: 'ஊர் அரவங் கேட்ட ஒருத்தி' மாதரியோ ஐயையோ அன்று; வேறு ஒரு பெண்ணே விளை விளைகால மாதலின் 'கொல்லச் சிலம்பு கொணர்க' எனச் சொல் லக் கருதிய பாண்டியன் கொன்றச் சிலம்பு கொணர்க என்ருன். பலர் வாயிலாக இளங்கோ பாண்டியனைப் 'பழியொடு படராப் பஞ்சவ'னுகவே காட்டுகின்ருர். விழா, கூத்து, மண மிவற்றில் அரச வாழ்த்துப் பாடல் மரபு. இவ்வடிப்படையில் சிலம்பில் மூவேந்தர் வாழ்த்தும் அமைந்துள்ளன. 'சிலம்பின் தனி வெண் பாக்கள்' இளங்கோபடியதல்ல. இவை பேசப்படுவன.

## 62. "சிலம்பு வழங்கும் செல்வம்"

**க. அப்பாத்துரை**

மு. ப. 1958. அருணேதயம் சென்னை — 14.

விலை: ரூ. 2·00

சிலம்பு 'என்', 'என' -என்று ஒவ்வொரு காதையிலும் முடிவு கொள்வது, சேக்ஸ்பியர் நாடக மாற்றத்திற்கு நாடக மாந்தர் பேச்சில் கையாளும் 'போய் வருகிறேன்' போன்ற உத்தியாம். கிரேக்க நாடகங்களில் வரும் 'கோரஸ்' (Chorus) போன்றது. சிலம்பில் வரும் கானல், வேட்டுவ வரி, முதலானவை. இன்றைய கதைக் கச்சேரி போன்றது அன்றைய கிரேக்க நாடகம்; இவ் வமைப்புடையது சிலம்பு. 'உரை' கதை நிரப்பும் பகுதிக்கும், 'உரைச் செய்யுள்' கதைக்கும், நடிகர் உணர்ச்சிக்கும் பயன்படுத் தப் படுகின்றது சிலம்பில். உணர்ச்சிப் பகுதிகளில் வரிப்பாடல் களும் இடம்பெறும். சிலம்பு குறவர்க்குரிய கூத்து இலக்கியம். உலக இலக்கியங்களில் நாடக, இசை இலக்கியம் சிலம்பு ஒன்றே. சிலம்பு — சாக்கையர் கூத்து நாடகம், தமிழகம் கலை தேய (சாக்கையர் கூத்து) கதையைத் (சிலம்பை) தருகின்றது. மலையாளம் கதை தேய — கலையைக் கொண்டுள்ளது. 'கதகளி' — சிலம்பின் அமைப்புடையது. சாக்கையர் கூத்து — தமிழகத் தின் மிகப் பழைய துன்பியல் நாடகம். மாதவி கற்பு — இயல் பான பெண்மையின் உச்சநிலைக் கற்பு; தேவி கற்பு கணவன் அற

நெறியுடன் நின்ற கற்பு; கண்ணகி கற்பு கணவன் வாழ்வில் குறுக்கிடாத துன்ப மேற்றகற்பு. ஊடல் அறியும் திறன், கூடல் திறன் அறியாதான் கோவலன். கலைப் பெண்மை யுணரா ஆண்மை கொலைப் படலை இளங்கோ காட்டுகின்ருர். திரு. S. V. P., V. R. M., R. K. S., வே. சு. சுப்பிரமணிய ஆச்சாரியார், பெரியார் — ஆகியவர்கள் சிலம்பு பற்றிய திற ஞய்வு நோக்கமும் ஆசிரியரால் நூற்கண் எடுத்துக் காட்டப் படுகின்றது.

## 63. "சிலம்பு வழிச் சிந்தனை"

**ம. ரா. போ. குருசாமி**

மு. ப. 1970. வி. உ. மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோவை — 1. விலை ரூ. 3-25

சிலம்பும் குறளும் ஒப்புமை, சிலம்பில் அவலம், சிலம்பில் நாடகக் கூறுகள், கண்ணகி — காந்தியடிகள் ஒப்புமை, முத லான நூலின் கண் அடங்குன. ஊடல் இன்மையால் கண்ணகி கோவலனை இழக்கிருள்; அது மிகுந்ததால் மாதவி அவனை இழக் கின்ருள். சிலம்பில் தெய்வம் மானுடரை ஆட்டிப் படைக்க வர வில்லை. மானுடம் தெய்வத்துக்கே வரங் கொடுத்தலைச் சிலம்பில் காண்கிரும். தவறுணர் காண்டம், எரியிடு காண்டம், தெய் வதக் காண்டம் எனப் பெயரிடாது, புகார், மதுரை, வஞ்சி என்று பெயரிட்டது மூவேந்தர் ஒற்றுமைத் திறன் வலியுறுத்தவே இவை ஆசிரியரின் துணிபுகளாக நூற்கண் இடம் பெறுவன.

## 64. "சிலம்பொலி"

**மு. சி. கேசவன்.**

மூ. ப. 1961. மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோவை — 1 விலை: ரூ. 2·25

மூன்று உண்மைகன் — அறங்கூற்ருகிறது — உயர்ந்தோர் போற்றுகிருர்கள் — ஊழ்வினை ஊட்டுகிறது — காப்பியப் பண்பு — அரசியலும் சமயமும் — சமுதாய வாழ்வு — சிலம்பொலி — மாதவி — கற்பின் தத்துவம் — கோவலன் — ஊழ்வினையின் அடிப்படை — என்னும் தலைப்புக்களில் நூல் அமையும். பாண் டியன் அரசியல் பிழைத்தமைக்குக் காரணம் ஊழ். எனவே

'அரசியல் பிழைத்தோர்க்கு அறங் கூற்றமாகும்' உண்மை 'ஊழ் வினை உறுத்து வந்தூட்டும்' உண்மையொடு அடிப்படைத் தொடர் புடையது. மனையாளுக்கு இழைத்த அநீதியே கோவலனை அழிக் கிறது. சமயப் பூசலுக்கும் கதையின் அடிப்படைக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. அரசியலிலும் குறையொன்றுமில்லை. சமு தாய அமைப்பில் பரத்தையர் குலம் ஒரு குறை. அவரைப் பழித் தலோ, அவமதித்தலோ அடிகள் நோக்கமன்று. மாதவியைக் கொண்டு சமுதாயத்தில் பெரிய புரட்சியைத் தோற்றுவிக்கிறார். கலைகளைக் காமத்தினின்று விடுவித்துக் கலைகள் மக்கள் முன் னேற்றத்திற்குப் பயன்படவும், கணிகையர் வாழ்வுக்கு முடிவு கட்டிக் கற்பு வாழ்வுக்கு வளமூட்டவும், வழி காண்பதே இளங் கோவின் அடிப்படை நோக்கம். சமுதாய அமைப்பு அரசியல் திட்டம், சமயக் கொள்கை, கலைகளின் வளர்ச்சி, இவை அனைத் தும் ஒருவனும் ஒருத்தியும் நடத்தும் இல்லற வாழ்வின் வெற்றி யையே தம் வெற்றியாகக் கொண்டு இயங்குவன. ஆதலின் ஆசிரியர் வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவத்தையே — உண் மைத் தன்மையையே ஆராய்ந்திருக்கின்றார் என்பது நூலார் முடிபு.

## 65. "சிலம்பொலி"

**டாக்டர். துரை சிங்கார வேலன்**

மு. ப. 1961. உஸ்மானியாப் பல்கலைக் கழகம்.

விலை: ரூ. 1·00

சிலம்பின் மூன்று ஒலிகளில், (நீதி) 'அரசியல் பிழைத் தோர்க்கு அறங் கூற்றாதல்' ஒலி இவண் ஆய்வு பெறுகின்றது. இதன் பொருள், 'அரசியல் உடையோர் பிழைப்பின் அவரைப் பழி நெருங்கி அழிக்க வருங்காலை, அவரால் வளர்க்கப்பட்ட மக னும் அறம், அவரை உடலினின்றும் பிரித்துப் பழிநெருங்காதபடி அவரது புகழைக் காக்கும்' என்பதன்றி 'அறம் யமனாகித் தண் டிக்கும்' என்பது பொருளன்று. மக்கட்கு உறுதி தருவது அறமே. எந்நிலையிலும் காப்பது அறமே. அறத்தை வளர்த்து புகழுடை தலே மக்கள் கடமை என்பதை மக்கட்குணர்த்த வேண்டி 'அர சியல் பிழைத்தோர்க்கு அறங் கூற்றாவது என்னும் உண்மையைத் தமது காவிய முதல் உண்மையாகக் கொண்டார்' இளங்கோ.

கோவலன் கொலைக்குக் காவலாளரோ, பாண்டியனோ காரணமன்று. அவனே காரணம். என்னெனில் சிலம்பின் தன்மையை விற்போனாகிய கோவலன் கூறாதது மட்டுமல்ல; பிறர் அதுபற்றிப் பேசும் பொழுதும் வாளா இருந்த பிழையே யாகும். அரசன் ஆராயது கட்டளை யிட்டானல்லன். 'யாவதுந் தேருனாகி' என்பதால் பாண்டியன் பிழைத்தான் என்றல் பொருந்தா காரணம் திருட்டுக் குற்றத்தை அரசன் நேரில் ஆராய முடியாது. ஆராய்ந்ததாகப் பண்டை இலக்கியத்தும் சான்றில்லை. அதற்கான தண்டனை கொலை. அது செயவே கட்டளையிட்டான். ஊடல் தீர்க்கச் சிலம்பைக் (கொன்று கொணர்க எனக் கூறி) கொண்டான் என்பது தமிழ் மரபிற்கே பொருந்தா. கையுறை கொடுத்து ஊடல் தீர்த்த மரபு தமிழ் இலக்கியம் காணாத ஒன்று. 'தென்புலங் காவல் என்முதற் பிழைத்தது' என்பதால் தான் பிழை செய்ய வில்லை என உறுதியாக்குகின்றான். 'கோவலன் சிலம்பு' உடைமையான் ஒப்புதலின்றித் தன் மனை இருத்தலால், 'தானே கள்வன்' எனக்கூறி அந்நிலையிலும் அரசியல் பிழையாது கள்வனுக்குத் தரும் தண்டனையைத் தனக்குச் செய்து கொள்கிறான். 'அரசியல்' என்பதன் பொருள் 'தான் மேற்கொள்ளும் பணிகளின் தலைமைத் தன்மையாம்'. அரசியல் வேறு; அரசாட்சி வேறு. எனவே 'அரசியல் பிழைத்தோர்' எனப் பன்மை கூறினமையின் ஈண்டு அரசியல் பிழைத்தோர் கவுந்தியும், மாதரியுமே. கோவலனால் வழங்கப்பட்ட கற்புத் தெய்வத்தைப் பாதுகாக்கும் பொறுப்பேற்ற கவுந்தி தன் கடமையினின்று பிழைத்து விட்டார். மாங்காட்டு மறையவன் மொழிப்படி பொய்கை புகவிடாது தடுத்தது, தக்காரிடம் அடைக்கலம் சேர்க்காதது — இவை கவுந்தியின் அரசியல் பிழை. அடைக்கலம் பெற்ற மாதிரி கோவலன் புறப்பாட்டில் 'ஆனேறு ஒன்று அவனை எதிர்த்துப் பாய வந்த தீநிமித்தங் கண்டு அவனைத் தடுக்காது — கொலைப்படச் செய்தது அடைக்கலம் இழந்த அரசியல் பிழை எனவே அரசியல் பிழைப்பு தென்னன் செய்யவில்லை என்பது ஆசிரியர் முடிபு.

## 66. "செஞ் சிலம்பு"

**புலவர். கூ. நடராசனார்**

மு. ப. 1970. தமிழ் நிலையம், புதுக்கோட்டை. விலை: ரு. 2

நூல் இரு பகுதியாக அமைகின்றது. முதற்பகுதி சிலம்பிற்கு இளங்கோ தருகின்ற அடைமொழிகளான, 'அணிந்த

சிலம்பு', சீறடிச் சிலம்பு, சித்திரச் சிலம்பு, கோயிற் சிலம்பு, செய்வினைச் சிலம்பு, நின்றச் சிலம்பு, செம்பொற் சிலம்பு, இணையரிச் சிலம்பு, சிலம்பின் வென்றி, தீவினைச் சிலம்பு, செஞ்சிலம்பு, என்பன வற்றால் விளக்கம் பெறும் தீவினை, நல்வினைகள் எடுத்துக் காட்டப்படுகின்றன. அடுத்த பகுதி சிலம்பின் பதிகம்பற்றிய ஆய்வாக அமைகின்றது. பதிகம் — பதியம் — 'பது' என்பதன் அடியாகப் பிறந்திருக்க வேண்டும். 10–பாடல்கள் ஆண்டவன் மேற்பாடுவது 'பதிகம்' எனப் 15-ம் நூற்றாண்டில் வழங்கியது. 'பதிகம்' கி. மு. 5 மு. - கி. பி. 9–ம் நூற்றாண்டு இலக்கண நூற் கருத்தன்று. கி. பி. 10–ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பதிகம் சிலம்பிற்குப் புகுத்தப்பட்டிருக்க வேண்டும். பதிக ஆசிரியர் இளங்கோவும், சாத்தனாரும் சமகாலத்தவர் எனக் கொண்டு பதிகம் அமைத்துள்ளார். எனவே பதிகம் பல குறை பாடுடையது என்பது ஆசிரியர் கருத்தாக அமைகின்றது.

## 67. "செந்தமிழ்ச் செல்வம்"

**வே. கபிலன்**

மு. ப. 1963. மனோன்மணி புத்தகநிலையம், சென்னை — 1.

விலை: ரூ. 1·75

நூல் 'காவியத்தின் தலை வாயில்', 'தமிழ்ச் செல்வம்' என இரு பகுதியாக அமையும். முதற் பகுதி ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறு காப்பியம் இவையெனச் சுட்டியப் பகுப்பு முறை சிறக்க வில்லையெனக் காட்டும். அடுத்த பகுதி, புகாரும் பூம்புகாரும், காவிய விளக்கம், காவிய அமைப்பு, கடவுளும் காவியமும் (முதல் வாழ்த்து) இதோ காவியச் செல்வி (அறிமுகம், திருமணம்), இதோ காவியத் தலைவன் (அறிமுகம், திருமணம்), அழகும் அறமும் (கோவலன் புகழ்மொழி), அகத்தியரும் ஆடற் கலையழகியும், (அரங்கேற்று காதை), அரங்கின் அமைதி, தலைக்கோல் அமைதி, அரங்கில் புகுந்தாடும் இயல்பு, அந்தியெனும் அழகி வந்தாள் (அந்தி மாலைச் சிறப்புச் செய்காதை), விழாக் கோலத்தின் வெற்றித் திருநகர் (இந்திர விழா ஊரெடுத்த காதை), தொடங்குகிறது. துன்பமாலை (கடலாடு காதை), கதையின் திருப்பம் (கானல் வரி), வேனில் வந்தது (வேனிற் காதை), கனாக்கண்டேன் தோழிநான் (கனாத் திறக்காதை), முடிகிறது பூம்புகார் (நாடுகாண் காதை) ஆகிய தலைப்புக்களில் புகார்க் காண்ட விமர்சனமாக அமைகின்றது.

## 68. "செந்தமிழ்ப் பாவை"

**தி. மாணிக்கவாசகம்.**

மு. ப. 1959. 2-ம் ப 1965. வி. உ. மீனாட்சி புத்தக,
நிலையம், மதுரை — 1.
விலை. ரூ. 2.50

பிற காப்பியங்கள் போன்று சிலம்பின் இயற்கை இறந்த நிகழ்ச்சி கதையோடு நெருங்கிய தொடர்பு பெறவில்லை. அவற்றை நீக்கினும் கதை நடக்கும். காளிதாசர், சேக்ஸ்பியர் இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளைக் கொண்டு நாடக முடிவை உருவாக்குவர். இளங்கோ அவ்வாறன்றி—அவற்றைப் பின்னணியாகவே கொள்வர். தமிழ் முதல் நூல், குறிக்கோள், மங்கல வாழ்த்து, கண்ணகி திருமணம், மனையறம், மாதவி அரங்கேறல், அந்திமாலைச் சிறப்பு, இந்திரவிழா, கடலாட்டு, கானல்வரி, கனவுக்காட்சி, காவிரிநாடு. மதுரைப் பெருவழி, வேட்டுவவரி, புறஞ்சேரி இறுத்தல், அடைக்கலக்காதை, கொலைக்களநிகழ்ச்சி, ஆய்ச்சியர் குரவை, வழக்குரைத்தல், சேரமான் செங்குட்டுவன், கண்ணகித் தெய்வம், ஆய தலைப்புக்களில் சிலம்பு காப்பிய நிகழ்ச்சி விளக்கப்பெறுகின்றது. நூலின் முதற்கண் 'கோவிலன் கதை' சருக்கமும் குறிக்கப்படுகிறது.

## 69. "சேரன் செங்குட்டுவன்"

**மு. இராகவையங்கார்.**

மு. ப. 1915. 5-ம் ப 1964
வள்ளுவர் பண்ணை, பிராட்வே, சென்னை-1. விலை ரூ 4-00

சிலம்பில் வருகின்ற சேரன் செங்குட்டுவன் பற்றி வரலாற்று அடிப்படையில் எழுதப்பட்ட நூல் 'சேரன் செங்குட்டுவன்'. செங்குட்டுவன் சமயநிலை, செங்குட்டுவன் சமகாலச் சோழ, பாண்டிய மன்னர்கள், அவன் காலப் பெரும் புலவர் இருவர், (பரணர், சாத்தனர்), செங்குட்டுவன் அரசியல், அவன் குணதிசயங்கள், செங்குட்டுவன் நாடும் தலைநகரமும்—ஆகியவற்றைப் பற்றி நூல் அமைகின்றது. செங்குட்டுவன் நாடு இன்றைய மலையாள நாடும், தலைநகர் திருவஞ்சிக்குளம், எனப்படும் பகுதியுமன்று. கொங்குநாடே செங்குட்டுவன் நாடு. திருச்சி மாவட்டக்

கருவூரே செங்குட்டுவன் தலைநகரான வஞ்சியாகும். செங்குட்டுவன் காலம் கி. பி. 5-ம் நூற்றாண்டு. இவை ஆசிரியர் துணிபுகள்.

## 70. "சேரன் செங்குட்டுவன்"

**மயிலை சீனி. வேங்கடசாமி.**

Reprinted from the Annals of Oriental Research of the University of Madras. 1966. vol: xxi. Part: 1. **விலை: ரூ: 1-00**

வரலாற்று அடிப்படையில் ஆய்ந்து சிலம்புச் செங்குட்டுவனின் காலத்தை இந்திய வரலாற்றுடன் இணைத்து முடிவுசெய்கின்றார். இமயவரம்பன் காலத்து முதற் கடற்போர் செய்தவன் இச் செங்குட்டுவனே. இமயவரம்பன் கி. பி. 72–130 வரையிலும், அவன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் கி. பி. 82—107 வரையிலும், மூத்த மகன் (இமயவரம்பனின்) நார்முடிச்சேரல் கி. பி. 120—145 வரையிலும் மற்றொரு மகனான செங்குட்டுவன் (சிலம்பு) கி. பி. 130—185 வரையிலும் ஆடுகோட்பாட்டுச்சேரலாதன் கி. பி. 140—178 வரையிலும் ஆண்டனர். இமயவரம்பன், வானவரம்பன் என்பது, இமயவர் + அன்பன்; வானவர் + அன்பன் என்பதன் திரிந்த வடிவமே. அசோகருடன் கேண்மை கொண்டிருந்தமையான் சேரர்கள் அவன்போல் 'தேவனாம்பிரியன்' எனக் கூறிக்கொள்ள விரும்பி அதனைத் தமிழ்ப்படுத்தி, இமயவரம்பன், வானவரம்பன் (தேவனாம்பிரியன்) என வைத்துக் கொண்டார்கள். அடுத்து இச் செங்குட்டுவன் காலத்துத் தோன்றிய சிலம்பு, மணிமேகலை காப்பியச் சுருக்கம், கருத்துக்கள் எடுத்துக்காட்டப்படுகின்றன. வரலாற்று அடிப்படையில் ஆய்வு நன்கு அமைகின்றது.

## 71. "சேரன் வஞ்சி" (வஞ்சி சேரர் தலைநகர்)

**டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார்.**

மு. ப. 1946. இ. ப. 1956

எடுகேசனல் பப்ளிசிங் கம்பெனி, சென்னை. விலை ரூ. 2-80

சேரநாடும் அதன் தலைநகருமான 'வஞ்சி' பற்றியும் வரலாற்று அடிப்படையில் அமைந்த ஓர் சிறந்த ஆய்வாக இந்நூல் அமைகின்றது. சிலம்பு, மணிமேகலை, சங்க இலக்கியங்கள்

இவற்றில் 'வஞ்சி' பற்றிக் குறிக்கின்ற செய்திகளையும், டாலமி, பிளெய்னி, மெகஸ்தனிஸ் குறிப்புக்களில் 'வஞ்சி' நகர் பற்றிய செய்திகளையும் ஒப்பிட்டாய்ந்து 'வஞ்சி' நகர் இருந்த இடம் யாதாக இருக்கவேண்டுமென்பது நிறுவப்படுகின்றது. அடுத்து சேரநாடு எப்பகுதியை உள்ளடக்கியது என்பதும் நிறுவப்படுகின்றது. 'வஞ்சி', கரூர் இரண்டும் ஓரூர் குறிக்கும் இருவேறு பெயர்களே. இது சேரநாட்டின் மேலைக்கடற்கரைப் பகுதியில் இருந்திருத்தல் வேண்டும். திருச்சி மாவட்டக் கரூர் பழைய 'வஞ்சி'யன்று. இதனைக் கண்ணகி மேற்றிசைப் பயணங்கொண்டு விளக்குகின்றார். சேரநாடு இன்றைய மலையாள நாட்டை உள்ளடக்கிய பகுதியே என்பதையும் நூல் நிறுவுகின்றது.

## 72. "தென்றமிழ்ப் பாவை" (கண்ணகி)

**புலவர் கு. திருமேனி.**

மு. ப. **1964**. இலக்கிய நிலையம், திருச்சி-**7**. விலை ரூ. **2-25**

'தென்றமிழ்ப் பாவை' முதல் 'கண்ணகியருள்' வரையுள்ள 34 உட்டலைப்புக்களில் கண்ணகியின் பாத்திரப்படைப்பு விளக்கப்படுகின்றது. இதிகாசம் ஆண்பாற்பட்டது; காப்பியம் பெண்பாற்பட்டது. கண்ணகிக்கு ஊடல் பிறக்கக் கோவலன்பால் காரணமில்லை. கண்ணகி கோவலனுக்கு ஒத்த பண்புடையவளேயன்றி இன்பப் பொருத்தம் அற்றவளல்லள். 'கண்ணகி நோன்புடைப் புகார்ப் பெருமக்கட்குத் திருமகளோடு அருந்ததியுமாகி, இடைச்சுரத்துச் சாலினி மீதிவர்ந்த கொற்றவைத் தெய்வத்திற்கு ஒருமாமணியாகி, மாடலமறையோர்க்கு மணிக்கொழுந்தாகி, கவுந்திக்குப் பொற்புடைத் தெய்வமாகி, ஆயர்கட்கு (மாதரி) நப்பின்னையாகி, கோவலனுக்குக் கற்பின் கொழுந்தாகி, மதுரைப் பெருமக்கட்கு வம்பப் பெருந்தெய்வமாகி, பாண்டியன் வாயிற்காவலனுக்குக் காளியிற்காளியாகி, குன்றக் குறவர்க்கு வள்ளியாகி, வேங்கைமர நீழலில் வானவர்க்கும் வழிபடும் தெய்வமாகி, செங்குட்டுவனுக்கு மின்னுக்கொடியாகி பிறநாட்டு மன்னர்க்கு எங்கணும் புலப்படும் தெய்வமாகி, பாண்டியனுக்கு மகளாகி, இளங்கோவிற்கு இமையோர் இளங்கொடியாகி, மண்ணக மாந்தர்க்கு அணியாகி, விண்ணக மாந்தர்க்கு விருந்தாகி, வஞ்சியார் குன்றில் விளையாடு மகளாகிக் கண்ணகி அமைகின்

ருள்' என்று கண்ணகியின் படைப்பின் சிறப்பினை எடுத்துக் காட்டுவர்.

## 73. "நாடகச் சிலம்பு" (நாடகம்)

புலவர் கு. திருமேனி

மு. ப. 1959; 4-ம் ப. 1966. இலக்கிய நிலையம், திருச்சி-2

விலை: ரூ. 3-25

சிலம்பு கதை நிகழ்ச்சியை மையமாகக் கொண்டு உரை நடை நாடகமாக எழுதப்பட்டுள்ள நூல். மாடலனை முதற் காட்சியுட் புகுத்தியும், மனையறம் படுத்த காதையில் கண்ணகியைப் பேசவைத்தும், சேரன் இமயப்போர் பற்றிய கண்டோர் உரையாடல் நிகழ்ச்சியும், வட ஆரிய மன்னர்கள் தமிழ் மன்னர் திறம் இகழும் இகழுரையாடல் நிகழ்ச்சி போன்ற புதிய நிகழ்ச்சிகள் நாடகச் சுவைக்காகச் சேர்க்கப்படுகின்றன.

## 74. "புகாரில் ஒருநாள்" [பரிசுக் கவிதைகள்]

1968. உலகத் தமிழ் மாநாடு, சென்னை. விலை ரூ. 1-00

புகாரில் ஒருநாள், 'கண்டதெல்லாம் கனவு, முன்னிற்கச் செய்வோம் முனைந்து, இன்பபுரி, பூரித்த நகரம் புகார், பகற் கனவாய்ப் போனதுவோ, புகாரில் கழிந்த நாள்; நன்கு வடித்திடு கண்ணீர், புகாரைக் கண்டு வாழ்வோம், தொல்பதியைத் தேடுகின்றேன், தேன் துளிகள்', ஆகிய தலைப்புக்களில் பல கவிதைகள் இடம்பெற்றுள. கண்ணகியும், அவள் பிறந்த புகார் நகரையும் அடிப்படையாகக் கொண்டு இக்கவிதைகள் வரையப்பட்டுள்ளன. பல கவிஞர்கள் இடம்பெற்றுள்ளனர்.

## 75. "புலவர் போற்றும் பூம்புகார்ப் பொற்றொடி" (மாதவி)

சி. இலட்சுமணன்

1971. எம். ஏ. (தமிழ்) தேர்வு ஆய்வேடு

மதுரைப் பல்கலைக் கழகம்

புலவர் போற்றும் பூம்புகார்ப் பொற்றொடியாக மாதவியைக் கொண்டு, மாதவி யார்?, மாதவியுங் கோவலனும், மாதவி

கோவலன் தொடர்பு, மாதவியைக் கோவலன் விரும்பியதும், கண்ணகியை வெறுத்ததும், மாதவியுங் கோவலனும் கண்ட மனை வாழ்க்கை, மாதவி கோவலனொடு வாழ்ந்ததால் பெற்ற பயன், மாதவியின் கடன் கோவலன் உள்ளமறிந்து ஒழுகுவதே!, ஊடலால் வந்தவினை, சந்தேகத்தின் விளைவு, காதலனைப் பிரிந்த காரிகையின் நிலை, மாதவி நிறையும் கண்ணகி பொறையும், மாதவி குற்றவாளியா?, மாதேவி, கானல் வரி, மாதவியின் இயற்கையழகை மிகைப்படுத்திய அணிகலன்கள் ஆய தலைப்புக் களில் மாதவியின் படைப்பு பேசப்படுகின்றது. கோவலன் மாதவி மாலை வாங்கி அவள் இல்லம் புக்கு, அவளுடன் உடலுறவு கொண்டு அவளின் நிறையளித்துவிட்டான். எனவே நிறை யைக் காத்துக்கொள்ள வேண்டிக் கோவலனை மணமானவன் எனத் தெரிந்தும், விலக்க முடியாத நிலையில் இருந்தாள். குணத் தால் உயர்ந்த மாதவியை மாதேவி என்றல் பொருந்தும், என் பது ஆய்வாளர் முடிபு.

## 76. "பூம்புகார்ப் பொற்றொடி" (மாதவி)

**புலவர் கு. திருமேனி**

மு. ப. 1962. இலக்கிய நிலையம், உறையூர், திருச்சி-3

விலை: ரு. 2-00

மாதவியின் படைப்பு மாண்பு, அரங்கேற்று காதை, கானல் வரி—யாகிய இரு காதைகளின் விரிவுரை நூற்கண் அடங்குவன. மாதவி கணிகை மகளன்றி இழிந்தவளல்ல. மாதவி நாட்டிய அரங்கேற்றம் காணக் கோவலன் வந்திருந்தான். மாதவி ஆட்டங்கண்டு அவள் வயமாகிய கோவலன் காதற்குறிப் புடைமை கண்டு, மாதவி தானும் அக் குறிப்புணர்த்தியாடுகின் றாள். கானல் வரியில் ஆற்றுவரிபாடிய கோவலன் மாதர் கற்பு பற்றிக் குறிப்பது, தன் புற ஒழுக்கம் கண்டு மாதவி பொறுமை யோடிருக்கவேண்டும் என்பதற்காகவே. போட்டிக்கு மாதவி தான் ஓர் ஆடவன் நினைவிற்பாடவில்லை மாதவி. ஆடவற்கு நிறையுடைமை கற்பிக்கவே பாடுகின்றாள் 'கானல்வரி யான் பாடத்தான் ஒன்றின் மேல் மனம் வைத்து' என்பதற்கு, 'என்னை ஒளித்த பிரிதொரு பொருள் என்பது தவறான உரை. 'யான் நிறையழிதல் ஆடவர் இலக்கணமென்று பாட, அவள் அதுவன்று

எனத் திரித்து இலக்கணம் புதுவது படைத்தலைக் கொள்ள லாம்' என்று புதுவுரையைக் காட்டுகின்றார். 'சலம்புணர்க் கொள்கைச் சலதி' மாதவியல்லலள் என்பதும் நூலின்கண் இடம் பெறுகின்றது.

## 77. "மாதவி"

டாக்டர் மு. வரதராசனார்.

மூ. ப. 1960. வி. உ. பாரி நிலையம், சென்னை-1

விலை: ரூ. 1-25

மாதவியின் வரலாறு, மாதவியின் பண்பு நலன் என்ற இரு தலைப்புக்களில் நூல் அமைகின்றது. மாதவி வரலாறு குறு நாவலனைய மாதவி கதையைப்பற்றியமைகின்றது. மாதவி பண்பு நலன் திறனாய்வுப் பார்வையுடையது. பண்பு நலன் குறை, நிறை இரண்டும் காணுவதே என்பது சுட்டப்பட்டு அவ் வழி மாதவி பண்பை ஆய்கின்றார். கலையின் பிணிப்பே கோவ லனை மாதவிபால் ஈர்த்தது. அவள் ஆடலரங்கம் கோவலன் சென்றான். மாதவி ஊடலுரிமையோடு கூடிய காதல் வாழ்வு வாழ்ந்தாள். கோவலன் செல்வம் தொலைந்தது மாதவியாலல்ல. அவளின் இரண்டாவது கடிதம் அவளைப் பண்புடையளாக உயர்த்துகின்றது. குல மரபினின்று மிக உயர்ந்து, கற்புக்கரசி யாய், துறவின் மணியாய் வாழ்கிறாள். கண்ணகிக்கு நிகரான கற்புடையள்; உயர்ந்த பண்புடையள். மாதவியின் குறை, தற்கொண்டான் வளத்தக்காளாக வாழாததும், அதற்குக் காரணம் அவள் பிறந்த சமுதாயச் சூழல் என்பதும் சுட்டப்படு கின்றது. அடுத்தவள் பிறள்க்குரியனைக் காதலனைக் கொண் டது. இத்தவறைப் பின்னர் உணர்கின்றாள். அடுத்து, உள்ளத் துக் 'கரவு' மறைத்துக் கானல் வரி பாடியது. இவ்வாறு மாதவி யின் குறையும் நிறையும் நூலில் எடுத்துக்காட்டப்படுகின்றது.

## 78. "மாலை வண்ணனை" (இளங்கோவும் கம்பனும்)

அ. திருமால் இந்திரசிங்

1972. எம். ஏ. (தமிழ்) ஆய்வேடு, கேரளப் பல்கலைக்கழகம்

சங்கப் புலவர்கள் மாலையை யாங்ஙனம் வண்ணிக்கின் றனர் என்பது காட்டி அதனையடியொற்றி இளங்கோ, கம்பன்

காட்டும் மாலை வண்ணனையைத் தனித் தனியே எடுத்துக் காட்டி, இறுதிப் பகுதியில் இளங்கோ — கம்பன் இருவரின் வண்ணனைத் திறன் ஒப்பு நோக்கப்படுகிறது. இளங்கோவடிகள் மாலை வண்ணனைப் பற்றி எழுதினாலும், அவர் அவற்றை முறையாக அமைக்க வில்லை. கால உணர்வுக்கு அவர் அமைத்த மாலை வண்ணனைகள் தடையாக இருக்கின்றன. ஆனால் கம்பர் அவ்வாறின்றிக் கால உணர்விற்கு எந்தக் குறையுமின்றி மாலைக் கால வண்ணனையை விரித்துச் செல்கின்றார், என்பது ஆய்வாளர் துணிபு. முதன் மூன்று பகுதி செய்தித் தொகுப்பு, இறுதிப் பகுதியாகிய 'ஒப்பியலாய்வு' ஒப்பிடப்பட்டு ஆய்வு செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. முடிவு மட்டும் தனக்குத் தோன்றிய அடிப்படை எண்ணங்கொண்டு சுட்டிக்காட்டப்படுகிறது.

## 79. "முப்பெருங் காவியங்களில் ஒன்றான சிலப்பதிகார ஆராய்ச்சி"

**ஔவை சு. துரைசாமி பிள்ளை.**

மு. ப. **1942.** 3-ம் ப. **1957**, கழக வெளியீடு, சென்னை — **1.**

'இளங்கோவடிகள் அருளிய சிலப்பதிகாரத்தின் சுருக்கம்' என்ற நூற்கண் முன்னுரையில் (12 தலைப்புக்களில்) இவ்வாசிரியர் எழுதிய பகுதிகளோடு, சில தலைப்புக்களில் சில செய்திகளைக் கூடுதலாகச் சேர்த்துத் தனி நூலாக இதனை வெளியிட்டுள்ளார். முன்னை நூற்கண்ணுள்ள, 'வரலாறுகள்' பகுதி இவண் சிற்றூர், பேரூர்களின் நலங்கள், புகார், மதுரை, உறையூர், சீரங்கம், வஞ்சி என விரிக்கப்பட்டும்; 'குண மாண்பு' பகுதியில் 'கண்ணகி மாண்பு' சற்று விரிவாகவும், இசை நாடகக் குறிப்பு,' 'சில வழக்காறுகள்,' பகுதியும் முன்னை நூலைவிடச் சற்று விரிவடைகின்றது. 'தமிழ் வேந்தரின் அரசியல் மாண்பு, இளங்கோவடிகளின் குணமாண்பு புலமை நலம், உரை நலம்— ஆகிய முத்தலைப்புக்கள், புதிய இணைப்பு.

## 80. " வீரக் கண்ணகி "

ம. பொ. சிவஞானம்

மு. ப. 1958, இ. ப. 1961. இன்ப நிலையம், சென்னை — 4.

விலை: ரூ: 2.50.

இளங்கோவின் உள்ளம், சிலம்பு கதைச் சுருக்கம், காப்பியக் கருப்பொருள், வீரக் கண்ணகி, கண்ணகி வழிபாடு, இல்ங்கையிற் கண்ணகி வழிபாடு, சிலம்பு காட்டும் செந்நெறி, குறளும் சிலம்பும், மேகலையும் சிலம்பும், இராமாயணமும் சிலம்பும், இளங்கோவும் பாரதியும், நீதி மன்னன் நெடுஞ் செழியன், சிலப்பதிகாரச் சோழமன்னன், மாதவி கடிதம், கோவலன் பிரிவுக்குக் கண்ணகி காரணமாகாள், இளங்கோவின் கடவுட் கொள்கை, அறத்திற்காக அரச பதவி துறந்தவர் இளங்கோ, காவிரிபூம்பட்டினம், முலைதிருகி எரித்தது, விண்ணகம் நண்ணியது, காப்பிய உயர்வு நவிற்சிபற்றி நூல் பேசுகின்றது. 'அநீதி அரசோச்சின் அதனையழிப்பது மகளிரின் தலையாய கடன் என்பதே, சிலம்பின் அரசியற் செந்நெறி; கொடுங் கோலாட்சியின் எதிர்ப்புப் புரட்சியே (கண்ணகி நிகழ்த்திய அரசியல் புரட்சி) சிலம்பு காவியக் கரு; சிலம்பு புகட்டும் செந்நெறி துறவன்று; நூலிறுதி அறவுரை, திருக்குறளின் சாரம்' — இவை முதலான ஆசிரியர் துணிபுகள்.

# 4. கட்டுரைகள்

1) 'அடிகள் கண்ட கவுந்தி அடிகள்'—செயகுமார பிள்ளை, 1965. "தெ. தி. இந்துக் கல்லூரி ஆண்டு மலர்" — தொகுதி: 12. பக்: 92. நாகர்கோயில்.

கட்டுரை கவுந்தியடிகளின் கடவுட் பற்று, மதப் பற்று, தவ வலிமை, உறுதி மொழிகள், இல்லறம் பற்றிய கொள்கை, பெண்மை போற்றும் தகைமை—ஆகிய சிறப்பைப் பேசுகின்றது. ஐயை, புண்ணிய முதல்வி, மூதறிவாட்டி, 'செய்தவத்தீர்,' 'ஆசுஇல் கொள்கை அறவி' என்று இவரை அடிகள் சிறப்படை யிட்டு அழைப்பதுடன், தம்மைப் போன்றதொரு அடிகளாகவும் படைக்கின்றார், கவுந்தியை ஐந்து இடங்களில் (காதைகளில்) படைக்கின்றார். கவுந்தியடிகள் இளங்கோவைக் காட்டும் ஓர் ஆடி.

2) 'அடிகளும் அணி நயமும்'—டாக்டர் சுப்பிரமணியன், ச. வே. "இலக்கிய நினைவுகள்" — பக்: 1–13. முதற் பதிப்பு: 1964 விற்பனை உரிமை: பாரி நிலையம், சென்னை - 1. விலை: 1·50.

சிலம்பின் அமைப்பும் வனப்பும் இன்பத்தேன் போன்றது. நிலமடந்தையைப் பெண்ணாக உருவகம் செய்து—நிலம், சூரியன், சந்திரன் இவற்றிற்குக் குடும்ப உறவை உண்டாக்குகின்றார் இளங்கோ. கண்ணகி கண்ட கோவலன் உள்ளம் பொருளையும் —பரத்தையர் உள்ளம் இன்ப அழகையும் — மாதவியுள்ளம் நப்பின்னையையும் — வாயிலோன் உள்ளம் கொற்றவையையும் —குறவர் உள்ளம் வள்ளியையும்—உவமையாகக் காண்கின்றன. இவ்வுவமையின் வளர்ச்சியில் கண்ணகியின் தெய்வீக வளர்ச்சி யைக் காண்கிறோம். கோவலன் — தென்றல் — உவமை யவன் வாழ்க்கை நாட்டத்தை விளக்குகிறது — இளங்கோ அரச மரபி னராகலின் வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் அரசியல் உவ மையை ஆளுகின்றார். உள்ளுறை நயம் — கானல் வரி முழுமை யும் அமைகிறது. காவியத்தோடு காவியமாய் — கதையோடு கதையாய்—கவிதையின் பொருளோடு பொருளாய் அணிகளைப் பின்னிப் பிணைத்துத் தருகின்றார் இளங்கோ, திறனாய்வுப் பார்வை ஆங்காங்கு மிளிர்கிறது கட்டுரையில்.

3) 'அவலம் பொங்கும் இரண்டே அடிகள்' ஏ. கே. பெருமாள். "செந்தமிழ்ச் செல்வி". சிலம்பு: 39. பரல்; 6. பக்: 269.

'கீழ்த் திசை வாயில் கணவனொடு புகுந்தேன்; மேற்றிசை வாயில் வறியேன் பெயர்கு'—இவ்விருவடியும் அவலம் மிகப் பொங்குவன. கீழ்த்திசை புக்க கண்ணகி நிலை—மேற்றிசை சென்ற கண்ணகி நிலை விளக்கம் பெறுகின்றது. கீழ்த்திசை புக்க கண்ணகியின் நம்பிக்கை ஒளி—மேற்றிசைப் போந்தக்கால் மறைந்துவிடுகின்றது.

4) 'ஆடரங்கம்' "இலக்கியப் பொழில்" — பக்: 28. Printed at Sri Bharathi Press, Choolai, Madras-7. [ஆசிரியர் பெயரும், பதிப்பகப் பெயரும் கிடைக்கவில்லை.]

சிலம்பில் அரங்கேற்றுக் காதையில் வரும் 'ஆடரங்கம்' பற்றிக் கட்டுரை பேசுகின்றது. அத்துடன் 'ஆடரங்கம்' பற்றிப் பிற இலக்கியக் கருத்துச் சில சுட்டிக் கட்டுரை அமைகின்றது.

5) 'இந்திரன் யார்?' கவிஞர் தமிழ் ஒளி. "தமிழர் சமுதாயம்"- பக்: 41—50 முதற்பதிப்பு: 1962 இரண்டாம் பதிப்பு: 1969 புதுமைப் பிரசுரம், சென்னை-5 விலை: ரு. 4·00

ஐம்பூதங்களின் சேர்க்கையாலேயே உலகம் தோன்றியுள்ளது என்ற பொருண் முதன்மைக் கருத்தை (Meterialism) தொல்: கொண்டுள்ளது. முழுமுதற் கடவுளால் உலகம் படைக்கப்பட்டது என்பது வேதக் கொள்கை; சமய வாதமுமாம். தொல்காப்பியம் குறள் குறிப்பிடும் இந்திரன் தீம்புனல் உலகைச் சார்ந்த கப்பத்திந்திரன் என்றும், அவனைப் பரிமேலழகர் வேத கால இந்திரனோடு இணைத்துக் குழம்பினர் என்றும் உரைக்கப் படுகிறது. தமிழகத்து இந்திரன் பொருண் முதல் வாதி. சிலம்பில் விண்ணவர் கோமான் விழுநூல் எய்துவீர் என்ற மறையவனுக்குக் கவுந்தி, 'எங்கள் கப்பத்திந்திரன் காட்டிய நூலில் அறிவாம்' என்றது மறையோன் காட்டிய விண்ணவர் கோமான் வேறு; கப்பத்திந்திரன் வேறு என உணர்த்தும். மெய்ப்பாட்டியற்கை (சிலம்: 11: 155) என்பதற்கு 'அருகன் அருளிய பரம ஆகமம்' என்றவுரை மறுக்கப்பட்டு 'பிறப்பின் இயற்கை' என்றுரைக்கப்படுகின்றது. அறிவு, ஒழுக்கம், தவம், தொண்டு ஆகியவற்றிற்கு மதிப்பளிப்பது கப்பத்திந்திரன் கொள்கை.

கப்பத்திந்திரன் காட்டிய நூல் ஐந்திரம். விண்ணவர் கோமான் விழுநூல்—வேதப் பொருளாம் மோட்சம். இக் கட்டுரை இரு இந்திர வேறுபாட்டைத் தெளிவாக்குகின்றது

6, 'இந்திர விழா' புலவர் குழந்தை. "பூவா முல்லை"—பக்: 71-82. முதற் பதிப்பு: 1961. இளங்கோ புத்தக சாலை, ஈரோடு. விலை: ரூ. 3·50

இந்திர விழா புகார் மக்களால் கொண்டாடப்பட்டது. இவ் விழாவே ஐம்பெருங் காப்பியங்கள் இரண்டனைத் தோற்றுவிக்கின்றது ஆரியப் படைகடந்த பாண்டியன் நெடுஞ்செழியனின் செங்கோற்றிறம் — செங்குட்டுவன் வீரத்திறம் — இளங்கோ நாவன்மை—அறிய முதற்காரணமாகின்றது. சங்க நாகரிக வாழ்வறிய—இவ்விழா காரணமாகிறது. இந்திர விழாவின் சிறப்பு சிறப்பிக்கப்படுகிறது இக்கட்டுரையில்.

7) 'இரட்டைக் காப்பியங்கள் — ஓர் ஒப்பு நோக்கு'. இராச மாணிக்கம், கை. சி. "அகில இந்தியப் பல்கலைக்கழகத் தமிழா சிரியர் மன்றம் முதற் கருத்தரங்கு மலர்." பக்: 195

சிலம்பு முதற் காப்பியம்—மணிமேகலை முதற் சமயக் காப்பியம்—சிலம்பு, மணி: பதிகம் பிற்சேர்க்கை. சிலமபு கதை முழுவதும் குறிப்பாக மணிமேகலையிற் சுட்டப்படுதலின் சிலம்பிற்குப் பின் தோன்றியிருக்க வேண்டும். சிலம்பு காட்டும் புகாரைக் கடல் கொண்டது மணிமேகலையால் அறிய முடிகின்றது சிலம்பு-கோவலன் தெய்வநிலை குறிக்கவில்லை. மணிமேகலை குறிக்கின்றது. கண்ணகி மதுரையை எரித்ததை மணிமேகலை வரவேற்பதாகத் தெரியவில்லை. மணிமேகலை—வடமொழிக்கலப்பு மிகுதியுடையது. இதனைச் சங்கச் சாத்தன் இயற்றி இருக்க முடியாது. இளங்கோ கேட்கச் சாத்தன் பாடினன் என்பதும், சாத்தன் கேட்க இளங்கோ பாடினர் என்பதுமான பதிகக் கருத்து ஓர் பொய்யுரை. மணிமேகலை ஒப்புமை—வேற்றுமை சுட்டுவதாக இக்கட்டுரை அமைகின்றது.

8) 'இரட்டைக் காப்பியங்கள்'-'சிலப்பதிகாரம்'. இளவரசு, சோம. "இருபது நூற்றாண்டுகளில் தமிழ்" — பக்: 59. மு. ப. 1970. மணிவாசகர் நூலகம், சிதம்பரம். விலை ரூ, 3-00

சிலம்பு கதையில் இல்லறம் ஏற்றம் பெறுகிறது: மணிமேகலையில் துறவறம் புகழடைகின்றது. கருவாலும், கூறும்

பொருளாலும், அமைப்பாலும் இவ்விரண்டும் ஒத்திருத்தல் பற்றி இரட்டைக் காப்பியங்கள் என்பர். இளங்கோ வரலாறு, சிலம்புக் கரு (கதை) மும்மைக் காப்பியம், மூன்றும் தொடர்பு — சிலம்பின் சிறப்பு இவை சில வரிகளில் பேசப்படுகின்றன. முதற் காப்பியம் — குடிமக்கள் காப்பியம்—பெண் பெருமை — வரலாற்றுப் பின்னணி — முன்னுடிணைப்புத் தேசீயக் காப்பியம், முத்தமிழ்ச் சிறப்பு – உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்–கவிதை நலன்—இவை காப்பியச் சிறப்பாகக் காட்டப்படுகிறது.

9) 'இரட்டைக் காப்பியங்கள் — சிலப்பதிகாரம்'. புலவர் சோம. இளவரசு. "வெற்றி இலக்கிய வரலாறு" — பக். 60. மு. ப. 1970. மணிவாசகர் நூலகம், சிதம்பரம். விலை: ரூ. 2-50

சிலப்பதிகாரம், சிலம்புக் கரு (கதைச்சுருக்கம்), மும்மைக் காப்பியம், சிலம்பின் சிறப்பு—ஆகிய உட்சிறு தலைப்புக்களில் கட்டுரை அமைகின்றது. இளங்கோ செங்குட்டுவன் தம்பி; சமணச் சார்புடையவர். சிலம்பின் மும்மைச் சிறப்பு எட்டும், சிலம்பின் சிறப்பு எட்டும் எடுத்துக்காட்டிக் கட்டுரை முடியும்.

10) 'இரட்டைக் காப்பியங்கள் — சிலப்பதிகாரம்'. விமலானந்தம், ச. "தமிழ் இலக்கிய வரலாறு" பக். 112. மு. ப. ஜூன் 1967 மறு பதிப்பு ஆகஸ்ட் 1967. C. நாகையா செட்டி & கம்பெனி, திருவல்லிக்கேணி, சென்னை-5. விலை: ரூ. 3–50

கதை ஒன்று; காப்பியம் இரண்டு. ஒரு குடும்பக்கதை. சிலம்பின் தொடர்ச்சி மணிமேகலை—சிலம்பு, மணிமேகலை ஒப்புமை வேற்றுமை பல காட்டப்படுகின்றது. சிலப்பதிகாரம் அமைப்பும் அமைதியும் பேசப்படுகிறது. வைசிய புராணம் 32-ம் சருக்கம் கண்ணகி கதையைக் கூறுகிறது. சிலம்புச் சிறப்புக்களாக 51 கருத்துக்கள் தரப்படுகின்றன. நாடகங்கள் இன்பியல் துன்பியல், வரலாற்றியல் என முத்திறத்தன. இம்முத்திறச் சிறப்பும் சிலம்பில் உண்டு. ஆசிரியர் சமயம் சமணம்.

11) 'இரட்டைக் காவியங்கள்' — 'சிலப்பதிகாரம்' சீனிவாசன், ரா. ''தமிழ் இலக்கிய வரலாற்றுக் கட்டுரைகள்'' — பக்: 57, மு. ப. 1964. வி. உ. பாரிநிலையம், சென்னை — 1. விலை: ரூ. 2-00.

தனிநிலைச் செய்யுட்களாக இருந்தவை தொடர்நிலைச் செய்யுட்களாக மாறின. தனித்துறைச் செய்திகளாக அமைந்த

பாடல்கள் தொடர் நிகழ்ச்சிச் செய்திகளைக் கூறும் காவியமாக மாறின. வெளிநாட்டுக் கதைகளைத் தமிழில் அமைக்காமல் நாட்டு வரலாற்று நிகழ்ச்சிகளைக் காவியக் கதைகளாக அமைத்த பெருமை இந்நூல்களுக்கு உண்டு. அவலத்தின் சுமையால் காவியம் பிறக்கும். சிலம்பு ஒரு நாட்டுக் காப்பியம். சிலம்பு காப்பியச் சுருக்கம் பேசப்படுகின்றது. சிலம்பு நாடக அமைப்புடையது. முத்தமிழ் உடையது. சமயப் பொதுமை — நாட்டு ஒற்றுமை — பாடுவது; அடிகள் சமயம் சமணம். காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு. இவை பேசப்படுகின்றன இக்கட்டுரையில்.

**12) 'இரண்டு காட்சிகள்' சீனிவாசன், ரா. "அணியும் மணியும்'' — பக்: 23 — 34, முதற் பதிப்பு: 1959. விற்பனை உரிமை: பாரி நிலையம், சென்னை — 1. விலை: ரூ. 2-00.**

சிலப்பில் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் இரண்டு காட்சிகளாக அமைத்துக் காட்டும் அழகு பலவிடங்களில் காணப்படுகின்றன. உவகையில் அவலத்தையும், கொடுமையில் செம்மையையும், காதலில் கலக்கத்தையும் பொருத்திக் காட்டுகிறார். கோலங் கொண்ட மாதவி நிலையில் கண்ணகியின் துன்பியல் நிலையையும் காட்டுதல் — மாதவி கோலம் கண்ணகி கோலத்தினை மறைப்பதால் கண்ணகி நெஞ்சைக் கோவலன் காணமுடியவில்லை என்பதனை நினைவுறுத்துகின்றார் இளங்கோ. கோவலன் கண்ணகியை இரண்டிடத்துப் பாராட்டுதல் சுட்டப்பட்டு — 'பிற்பாராட்டு' பண்பு சிறக்கிறது. இதற்கு அனுபவ வினையே காரணம். வழக்குரை காதையில் கோல் கோடிய பாண்டியற்குச் சோழர் செங்கோல் திறம் காட்டுதல் கொடுங்கோன்மையை மிகுதிப்படுத்தவே. அவலச் சுவை காட்ட உடன் இன்பச் சுவையையும் காட்டி அவலத்தை மிகுவிக்கின்றார். சேரநாடு வழியே புகும் கண்ணகி, பாண்டி நாடு துணையொடு புக்க இன்பநிலையை எண்ணுகின்றாள். அவள் அவலம் மிகுகிறது. இளங்கோ ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியை இரண்டு காட்சிகளால் ஆங்காங்கு காட்டிக் காவியத்தின் சுவையையும், அழகையும் உயர்வுபடுத்திக் கற்பார் நெஞ்சில் அக்காட்சிகள் கொள்ளும் வண்ணம் செய்து அதனை நெஞ்சையள்ளும் காவியமாக அமைத்துவிட்டார் இளங்கோ என்பது கட்டுரை காட்டுவது. கட்டுரைப் போக்கு நன்கமைகிறது.

13) 'இலக்கியப் பெண்களின் இல்லற மாண்பு' வித்துவான். பார்வதியம்மையார், சிவ. "செந்தமிழ்ச் செல்வி". சிலம்பு: 21. பரல்: 3, பக்: 107.

இல்லவள் மாண்பினைக் குறள்வழிக் காட்டிச் சங்ககால மகளிர், கண்ணகி, காரைக்காலம்மையார், சீதை, யாகியவர் களின் இல்லற மாண்பு பற்றிக் கட்டுரை சிறிதே விளக்கிச் செல் கின்றது. இவண் சிலம்பில் கண்ணகி, மாதரி வீட்டில் 'அமுதம் உண்க அடிகள்' என்று கணவனை அமுதூட்டி மகிழ்வித்தலும், அதுகண்ட ஆயர் மகளிர் கண்ணனையும் நப்பின்னையையும் நினைவு கூர்தலும் — பின் கோவலன் கண்ணகியின் கற்பொழுக் கம் பற்றிப் பாராட்டுதலும் சிறிய அளவில் கண்ணகியின் இல்லற மாண்புகளாகச் சுட்டப்படுகின்றன.

14) 'இலக்கிய வித்தில் — சிலப்பதிகார மானம்' மாயாண்டி பாரதி. "சிந்தனைக் களஞ்சியம்" — பக்: 18 — 20, முதற் பதிப்பு: 1957. 2-ம் பதிப்பு: 1960. பழனியப்பா பிரதர்ஸ், சென்னை — 5. விலை: 1-50.

மானப் பண்பின் உச்சநிலையைச் சிலம்பின் இரண்டிடங் களில் இளங்கோ வைக்கின்றார்.

1. பாண்டியன் நீதி தவறியதறிந்து மானங்காக்க உயிர் விடல். இம்மானப் பண்பே 'இலக்கிய வித்து' என இளங்கோ கருதியிருக்க வேண்டும்.

2. வஞ்சிக் காண்டத்தில் செங்குட்டுவன் — தமிழரை இகழ்ந்த வடவரை வென்று மானங் காக்கிறான். மானம் காத்தல் இக்கட்டுரையில் சுட்டிக்காட்டப்படுகின்றது.

15) 'இலம்பாடு நாணுத் தரும்' சிங்காரவேலன், துரை. "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 35. பரல்: 10. பக்: 457

குலந்தரு வான் பொருள்—முன்னோர் அரிதிற் தேடிய வான் பொருள் (கலன்) குறிக்கும். 'தொலைந்த' — என்றலால் கோவ லன் தொலைக்கவில்லை. மனைவியாக மாதவி வாழ்தலின் கண் ணகி அவளுக்கு இக்குலந்தரு வான்பொருளைத் தானுகவே அனுப்பியிருக்கவேண்டும். கோவலன் மாதவி நட்பு கலையில் தொடங்கி, கலையால் வளர்ந்தது. பொருளால் வளர்ந்ததன்று. கண்ணகி மேம்பாடு கலையால் உயர்ந்ததன்று. கற்பால், தெய் வக் காதலால் உயர்ந்த மேம்பாடு. கோவலனுக்கு விருப்ப

முள்ள கலைவளத்தைக் கண்ணகி அழகில்—நுதலில், புருவத் தமைப்பில் கோவலன் காண இயலவில்லை. இவை திருவின் தோற்றத்தையும், தெய்வ ஒளியையும் காட்டினவேயன்றிக் கோவலன் விரும்பும் கலைவளத்தைக் காட்டவில்லை. 'மாற்று வுள்ள வாழ்க்கையேன்'—என்பதற்குக் கோவலன் இன்பத்தை, அவன் ஒழுக்கத்தை மாற்றுத வாழ்க்கை, மாற்ற நினையாத வாழ்க்கையுடையவள்' என்று பொருள் கொள்கின்றார்.

16) 'இளங்கோ' கோதண்டராமன், ப. "உலகப் பெருங் கவிஞர்கள்" — பக்: 52. மு. ப. 1967. மணிவாசகர் நூலகம், சிதம்பரம். விலை: ரூ. 3 50

முதற்கண் பொதுவான காப்பிய இலக்கணம் பேசப்பட்டு அவ்வடிப்படையில் அமைந்த சிலம்பு காவியம் 'முக்காலத் தமிழ்ச் சங்க வழக்குகட்கும், பிற்காலத் தமிழ்க் காப்பிய வழக்குகட்கும் இடையே நின்று இருமருங்கிலும் ஒளிவீசிப் பிற்கால நிறை காப்பியத்திற்கு வழி திறந்துவிட்டது' என்பர். இளங்கோ தம் காலத்து முடிமன்னர் தம்முட் சண்டையிட்டு நாட்டின் ஒருமைப் பாட்டைச் சிதைத்தது கண்டு—தமிழ் நாட்டின் ஒருமைப்பாடு குடிமக்களின் வழியாகவே ஓங்கி வளரக்கண்டு அதை இக் காப்பியத்தில் பாடுகின்றார். கண்ணகி கடவுட்டன்மை பெற்ற தனை எடுத்துக்காட்டுவதே இளங்கோவின் நோக்கம். பாத்தி ரங்கள், கண்ணகி, கோவலன், மாதவி, செங்குட்டுவன் படைப்பு சிறிது சுட்டப்படுகின்றது. அடுத்துச் சில காவியச் சிறப்பும், இளங்கோ கலைத் திறனும் பேசப்படுகிறது. சிலம்பின் காலம் கி. பி. 8-ம் நூற்றாண்டு. சிலம்பு உலகப் பெருங் காப்பியங்களில் ஒன்று.

17) 'இளங்கோ' டாக்டர் மாணிக்கம், வ. சுப. "எந்தச் சிலம்பு"—பக்: 132-140. முதற் பதிப்பு: 1964. விற்பனை உரிமை: பாரி நிலையம், சென்னை-1. விலை: ரூ. 2:50

சிலம்பின் கதைத் தொடக்கம் அரசியல் உருவுடையது. நாட்ட நினைத்த முந்நீதியுள் ஒன்று அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றமாம் என்பது. கதைப்படி இரண்டாவது வரும் நீதி பதிகத்து முதற்கண் வருவது அவர்தம் அரசியல் பார்வையும், அதுவே உயிரோட்டமுள்ளதாக அவருக்குப் படுதலுமாம். சிலம் பில் வேந்தர்தம் முடிநிலை வாழ்த்து விழாதோறும் நடைபெறு கிறது. மூவேந்தராண்டாலும், தமிழகம், அகத்தார்க்கும், புறத்

தார்க்கும் மொழி, வழக்கம் உணர்ச்சியில் ஒரு செந்தமிழ் நில மாகவே காட்சியளிக்கிறது. வரிப்பாடல்களில் மூவேந்தர்களையும் வாழ்த்திப்பாடியுள்ளார். திருமண விழாவிலும் அரச வாழ்த்துப் பாடப்படுதலை இளங்கோ காட்டுகின்றார். குடி பெருகும்தோறும் ஆட்சியும் பெருகவேண்டும் என்பது மக்களின் வேட்கை. சிலம் பின் தொடக்கமே நாட்டுப்பாடலாக அமைகிறது. புகார்— மதுரை—வஞ்சிக்காண்டமென்ற தலைப்புக்களும் நாட்டுணர்வைப் பெருக்குகின்றன. 'முடியுடை வேந்தர் மூவருள்ளும்' என்றவாறு காண்ட இறுதிக் கட்டுரைகளும் நாட்டுப் பற்றை வளர்க்கின்றன. நாட்டுப் பற்றே காவியம் முழுவதும் நடம்புரிகின்றது. எனவே இளங்கோ நாட்டுப்பற்றையூட்டிக் காவியஞ்செய்தார் என்பது சாலும். இவையே கட்டுரை காட்டும் செய்திகள். இக்கட்டுரை யில் தொடர்புடைய கருத்துக்கள் முறையாகத் தொகுக்கப்பெறு கின்றன.

18) 'இளங்கோ ஒலிக்கும் சிலம்பு'. வளவன் பாண்டியன். "கட்டுரைச் செல்வம்"—பக். 20. மு. ப. 1960; 4-ம் பதிப்பு: 1964. H. P. கிளரா பாண்டியன், D, 16, லயோலா காலனி, சென்னை-24 விலை: ரூ. 2·25

முன்னுரையாகச் சிலம்புச் சிறப்பு சில சொல்லிக், 'கதைப் போக்கு' தலைப்பில்—சிலம்பு கதைச் சுருக்கம் பேசப்படுகிறது.

'இளங்கோவின் உள்ளம்' — தலைப்பின்கண் — இளங்கோ வின் இயல், இசை, நாடக நூற்புலமை, நூல்நிலைக்களக் கருத்து மூன்று— ஊழ்வினையின் முதன்மை, கணவற்றொழும் மகளிர் பண்பு, விருந்தோம்பல், கணவனிறப்ப உயிர் வாழாமை—இவை பேசப்படுகின்றது. இளங்கோ உலகிற்கு வேண்டிய அறிவுரை களைப் பலவிடத்தும் சொல்லிச்செல்கின்றார் — உள்ளத்தால்— செயலால் இளங்கோ துறவியாக விளங்குகின்றார். இளங்கோ கொள்கை தமிழ் நாட்டுப் பண்பாட்டை அடிப்படையாகக் கொண்டது.

19) 'இளங்கோ கண்ட இயற்கை'. துரைசாமி பிள்ளை ஔவை சு. "செந்தமிழ்ச் செல்வி." சிலம்பு: 23; பரல்: 8, 9, பக்: 313, 357 & சிலம்பு: 24: பரல்: 1, 2. பக்: 17, 65

மூன்று நாட்டோடும் தொடர்புடைய சிலப்பதிகாரம் முற்றும் இயற்கையன்னையின் இன்ப அழகு காண்டற்கு (குறிஞ்சி, முல்லை

மருதம், நெய்தல்) ஏற்புடையது. காவிரிப்பூம்பட்டின நெய்தல் நிலக்காட்சி—காவிரிக்காட்சி, வையைக்காட்சி — பேரியாற்றின் காட்சி—காட்டப்படுகின்றது. காவிரி பாயும் மருதநிலக் காட்சி—மதுரைச் சார்ந்துள்ள மருதநிலக் காட்சி காட்டப்படுகின்றது. சிராப்பள்ளி—சிறுமலைத் தொடர்—இடைப்பட்ட பகுதி முல்லை. குறிஞ்சிப் பகுதிகள் காட்டப்படுகின்றன. பெரும் பொழுது, சிறு பொழுது வண்ணனை—மதுரைத் தென்றல், புகார்த் தென்றல், இளவேனில் முதுவேனிற் காட்சி—முன்பனி, பின்பனி, கூதிர், கார்காலக் காட்சிகள்—இவற்றைத் தொகைசெய்து காட்டப்படு கின்றது கட்டுரையில்.

20) 'இளங்கோ கூறும் என்கதை' சஞ்சீவி. ந. "உணர்வின் எல்லை". — பக்: 195 மு. ப. 1959. பாரி நிலையம் சென்னை-1 விலை! ரூ. 3·50

காவியச் சுவையோடு தம் வாழ்வுக் குறிப்பைப் பாடும் முதற்பேறு பெற்றவர் இளங்கோ. வரந்தருகாதை—தேவந்தி அடித்தோழி, காவற்பெண்டு, ஐயை—அரற்றல்—செங்குட்டுவனுக்குக் கண்ணகியருள்தல்—பிற மன்னர்கட்குக் கண்ணகி வரந்தரல், இளங்கோவின் வரலாறு—இவை இடம்பெறுகின்றன.

21) 'இளங்கோ புகுத்திய புதுமை' சொக்கலிங்கம், தி. அ. "இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டு ஆராய்ச்சி செயல்முறைக் கருத்தரங்கு" — பக் : 81. 1968- மூன்றும் தொகுப்பு, உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழகம்,

இளங்கோ கதையமைப்பில், பாத்திரப் படைப்பில், நடைச் சிறப்பில் புகுத்திய புதுமைபற்றிக் கட்டுரை அமைகின்றது. தேவரையும் மன்னரையும் விடுத்துச் சோணாட்டுப் பெருங்குடி மக்களின் வாழ்வைக் காப்பியக் கருவாகக் கொண்டது புதுமைப் புரட்சி—கதைப் பாத்திரமாக இளங்கோ தன்னைக் காட்டிக் கொண்டதும் புதுமைப் புரட்சி, இன்பக் காண்டம், துன்பக் காண்டம், தெய்வீகக் காண்டம் எனக் காண்ட அமைப்பில் புதுமை செய்கின்றார். திங்கள், ஞாயிறு மழை இவை முதற் கண் வாழ்த்தல் மேற்கண்ட முக்காண்டப் பொருண்மையைக் குறிப்பால் சுட்டுகின்றது, அழிந்த புகார், மதுரை கொண்டு—இன்ப துன்ப விளைவுக் காண்டங்கள் அமைத்தது — அவை (இன்ப, துன்பம்) நிலையாமையுடையது, எனக் காட்டவே தெய்வீகத் திருவருளே நிலைபேறுடையது என்பதைக் காண்ட

அமைப்பில் விளக்குகின்றார். பலரின் குறைபாட்டு மோதலால் அவலச் சுவையை வெளிப்படுத்தலும் பின்னோக்கக் காட்சி புகுத்தியது, தன்னின் பிரதிநிதியாக மாடலனைப் படைத்தது புதுமை. நடையில் இசை, உரைநடை. காதையிறுதியில் அக்காதை கூறும் பொருளை வெண்பாவில் கூறுதல்—பலதிறப் பாடல்களைப் புகுத்தியிருத்தல் இளங்கோவின் புதுமைப் புரட்சியாம். காப்பியப் பெயர் அமைப்பிலும் புதுமை. 'புதுமையில்' புதிய கருத்துக்கள் உண்டு.

22) 'இளங்கோ பொய் சொல்லவில்லை' பரமசிவானந்தம், அ. மு. ''மானுடம் வென்றது'' — பக் : 47. மு, ப. 1965. தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், லிமிடெட், சென்னை — 8.

விலை : ரூ. 3.00

''முரஞ்செவி வாரணம் முன்சமம் முறுக்கிய, புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென்'' (சிலப்; *10.* இறுதியடி) — இவண் இளங்கோ உரையூரை 'வாரணம்' — கோழியூர் என்கின்றார். கோழி யானையை வென்றதால் 'கோழியூர்' ஆயிற்று — சிலம்பு— வீர ஆதித்த சோழன் யானைமேல் வர — ஓரிடத்துக் கோழி ஒன்று யானையின் மத்தகத்தில் ஏறிக் கொத்த யானை அலறி ஓடிற்று என்ற தலபுராண வரலாறு — K. L. M. — விமான ஆண்டு மலரில் Tit Bits— இதழில் *10—7—1960* — 'From Ants to Elephant' — கட்டுரையில் — டச்சுக்காரர் — விண் விமானத்து யானை ஏற்றிச் சென்றக் கால் யானை மதம் பிடித்துப் பிளிற — விமானம் நிலைதடுமாற அதுபோது கூண்டிலிருந்த கோழி பறந்து சென்று யானை மத்தகத்து அமர, மதம் அடங்கிற்று யானை — என்று கூறும் உண்மை நிகழ்ச்சி — இவை மூன்றினையும் இணைத்து இளங்கோ 'கோழியூர்' வரலாறு கூறுவதில் பொய் சொல்லவில்லை; உண்மை வரலாற்றையே குறிக்கின்றார் — என்பார்.

23) 'இளங்கோ மன்றம்' டாக்டர். சுப்பிரமணியன், ச. வே. ''இலக்கிய நினைவுகள்'' — பக் : 14 — 18 முதற் பதிப்பு : 1964 விற்பனை உரிமை : பாரி நிலையம், சென்னை — 1. விலை 1 — 50.

இயற்கை கடந்த ஆற்றலைப் பற்றிக் கூறுவது காப்பியத்தின் பண்புகளுள் ஒன்று — இளங்கோவின் ஐவகை மன்றங்கள் (புகாரிலுள்ள) பற்றிக் கட்டுரையில் விளக்கப்படுகிறது. மனிதன்

தவறு செய்ய ஆரம்பித்த பிறகுதான் சட்டங்கள் தோன்றின. சடங்கு, கட்டுப்பாடு இவை — 'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர்'. தனக்கு அப்பாற்பட்ட சக்தி, தன் செயலைக் கண்காணித்து வருகின்றது என்ற எண்ணம் மனித உள்ளத்தில் இருந்தால்தான் அவன் தவறு செய்யாதிருக்க முடியும் என்பது இளங்கோ கண்ட முடிபு. சட்டமும் நீதியும் மனிதனை ஒன்றும் செய்ய முடியாது. எனவே மனிதனை நல் வழிப்படுத்தும் நோக்கத்துடனேயே இவ்வகை மன்றத்தினை அடிகளார் அமைத்தார் என்று கொள்வதில் தவறில்லை. மன்ற அமைப்புக் காரணம் காட்டுதல் உலகியற்குப் பொருந்துவதாக அமைகிறது.

24) 'இளங்கோவடிகள்' கன்னிசாமி. சி. து. "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 19; பரல்: 11. பக்: 518.

இளங்கோ பற்றிய பொதுவான செய்திகள்—நிமித்திகன் உரையும் செங்குட்டுவன் சினமும்—அது கண்ட இளங்கோ குணவாயிற்கோட்டத்து அரசு துறந்திருந்த செய்தி பேசப்படு கிறது. மலைவளங் காணச்சென்ற குட்டுவனோடு இளங்கோ சென்றிருந்தார். இவரின் நண்பர் சீத்தலைச் சாத்தனார். குட்டு வன் கற்கோயில் எடுக்கவும், இளங்கோ சொற்கோயில் படைக்க வும் நிலைக்களனான குறவர் செய்தி—அது கேட்ட சாத்தன் உரை முதலான பேசப்படுகின்றன. சிலம்பின் ஐந்திணைப் படைப்பு— இளங்கோ நடுநிலைக் கொள்கை — சமயப் பொது நோக்கு— இவை சுட்டப்படுகின்றன. முழுவதும் மெய்யுரையே பொதிந் துள்ள இந்நூல் இயலிசை நாடகம் எனும் முத்திறம் நிறைந்தது— இவையே கட்டுரைச் சுருக்கம். புதிய திறனாய்வுப் பார்வை யில்லை.

25) 'இளங்கோவடிகள்' டாக்டர் சேதுப்பிள்ளை, ரா. பி. "கடற்கரையிலே"—பக்: 4-7 முதற் பதிப்பு: 1950; 2-ம் 1951; 3-ம் 1954. பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-5. விலை ரூ. 1·40.

குமரியாறு கடல்கோளால் அழிய—அதற்குக் கடற்கரையி லிருந்து இளங்கோவடிகள் வருந்துவதாகக் கட்டுரை அமைகி றது. இக்கட்டுரை குழந்தைகளுக்கென்று எழுதப்பட்டது.

26) 'இளங்கோவடிகள்' வீரபத்திரன், ஆர். "இலக்கியத் தென்றல்" பக்: 48 மு. ப. 1954 2-ம் பதிப்பு: 1969. பூமகள் பதிப்பகம், நாகர்கோவில். விலை ரூ. 3

கவிவேந்தர் மூவருள் ஒருவர் இளங்கோ—இளங்கோவின் மாண்பு—சிலம்பின் சிறப்பு—இளங்கோவின் வரலாறு துறவு பூணுதல் — சிலப்பதிகாரம் பாடக் காரணம் — இளங்கோ செங்குட்டுவனின் தம்பியல்லர்—இளங்கோவடிகளின் புலமை—உளப்பாங்கு—பெண்மைக்கு அளிக்கும் பெருமை—மாதவியை நற்பாத்திரமாகத் தீட்டல்—பண்பாட்டுணர்ச்சி—சிலம்பு உணர்த்தும் உண்மைகள்—ஆகிய இவை பேசப்படுகின்றன.

27) '(துறவரசர்) இளங்கோவடிகள்' ஜகந்நாதன், கி. வா. "கவிஞர் கதை" — பக்: 51 மு. ப. 1957. கலைமகள் வெளியீடு, சென்னை-4 விலை அணா 12

இளங்கோவை இமயவரம்பனவையிற் கண்டு நிமித்திகன் கூறியவுரை—அது கேட்டுத் துறந்த இளங்கோவின் கதை—சிலம்புச் சிறப்பு பற்றிய சில வரிகள்—கட்டுரையில் இடம்பெறுவன.

28) 'இளங்கோவடிகள்' "இலக்கியப் பொழில்" பக். 42 Printed at Sri Bharathi Press, Choolai, Madras-7

வரந்தரு காதை—இளங்கோ வரலாறு—இளங்கோ காட்டும் சுவைமிகு உரை—இளங்கோ நாடக காப்பியம் இன்பியல், துன்பியல், வரலாற்று நாடகப் பாங்குடையது. பெருமகன் தன் குணக்கேட்டால், சூழ்நிலையால் வீழ்கின்றதே துன்பியல் நாடகத்தின் சாரம். இலக்கிய நோக்கம் இன்பம் நல்குவது மாத்திரமல்ல. இன்பம் நல்குவதோடு உயர்ந்த எண்ணங்களை நம் உள்ளத்தில் கோயில்கொள்ளச் செய்வதே இலக்கியத்தின் நோக்கம். இதனை நன்குணர்ந்தனர் இளங்கோவடிகள். எனவே தான் சிலப்பதிகாரம் இன்பக் காட்சிகள் மல்கிய சிந்தனைக் களஞ்சியமாகத் திகழ்கிறது.

29) 'இளங்கோவடிகள் காட்டிய சொற்செல்வம்' சரவண முதலியார், அ. மு. "கட்டுரைப் பொழில்"—பக்: 46 மு. ப. 1959 வி. உ. பாரி நிலையம், சென்னை-1 விலை: ரூ. 3·00

கண்ணகி வாயிற்காவலனை விளித்து—கோயிற்காவலனைச் சிலம்பில் வென்றது (வழக்குரைத்தது) — இவை சொற்செல்வமாகக் காட்டப்பெறுகின்றது.

30) 'இளங்கோவடிகள் காட்டும் காப்பியப் பண்பு' பூ. ஆலால சுந்தரஞ்செட்டியார். "சங்கரதாஸ் சுவாமிகள் நூற்றாண்டு விழா மலர்"—பக்: 145. விலை: ரூ. 5·00

கவி, காவியத்தின் மூலம் தன் கருத்தை அமைத்துக் கூறும் பண்பிற்குப் பாவிகம் என்று பெயர். மூன்று காப்பியப் பண்பில் (மூந்நீதி) நடுநின்ற 'உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தல்' பண்பு முதல் நிலை பெறுகிறது. தொல் கூறும் (களா. 8) பெண்மைப் பண்புக்கு இலக்காகக் கண்ணகி விளங்குகிறாள். கோவலன் பிரிய ஆறியிருந்த கண்ணகி நிலை அவள் கற்புத் திறன் காட்டுவது. 'பீடன்று' என்றது அவள் தெய்வந்தொழாத் தகைமை விளக்கும்.

31) 'இளங்கோவடிகள் குறித்துள்ள பழைய சரிதங்கள்' T. V. சதாசிவ பண்டாரத்தார். "செந்தமிழ்" — தொகுதி 13. பகுதி: 6. பக்: 210—213.

மனுநீதிச் சோழன், சிபிச்சக்கரவர்த்தி, உக்கிரகுமார பாண்டியன், குலசேகர பாண்டியன், சிவன் போன்று மூஎயில் அழித்த சோழனொருவன், பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் பாரதப் போரில் பெருஞ்சோறு கொடுத்த செய்தி, சேரன் ஒருவன் கடற்கடம் பெறிந்தது, ஆகிய வரலாறுகள்-இளங்கோ படைப்பிலுள்ள பழைய சரிதங்களெனக் கட்டுரைக்கண் எடுத்துக்காட்டப்படுகிறது.

32) 'இளங்கோவடிகள் கைவண்ணம்' தாமரைக் கண்ணி அம்மையார். "அழகை வெறுத்த அழகி"—பக். 90. மு. ப. 1946 தினமணி காரியாலயம், சென்னை–2, விலை அணா 8

கோவலன், கண்ணகி மாதவியோடு உள்ளத் தொடர்பு கொண்டிருக்கவில்லை. கண்ணகி கோவலன் காதல், உள்ளத் தொடர்பில்லாத காதல். கோவலன் கண்ணகியொடு இரண்டாண்டுகட்கு மேல் வாழ்ந்திருக்க முடியாது. மாசுமறுவற்ற தங்கச் சிலையாக அடிகள் மாதவியைச் சமைத்திருக்கின்றார். சிலம்பு காவியத் தலைவி மாதவியோ —என்று கூட ஐயுறத் தோன்றுகிறது. கோவலன், கண்ணகி, மாதவி படைப்பு சிறிய அளவில் பேசப்படுகின்றது.

33) 'இளங்கோவடிகள் சமயம்' வித்துவான் ஆ. சிவலிங்கனார் "செந்தமிழ்ச் செல்வி." சிலம்பு 31. பரல் 8; பக். 384

குணவாயிற்கோட்டம், அடிகள் என்பது கொண்டு இளங்கோ சமணர் எனல் பொருந்தா. 'கவுந்தியடிகள்' கதைத் தொடர்பாலே சமணக் கொள்கை பேசவேண்டிய நிலை ஏற்பட்டது. எனவே இளங்கோ நோக்கம் சமணக் கொள்கை பரப்புவதென்பது பொருந்தா. 'பிறப்பு பற்றின் காரணமாக வருவது; பிறப்பால் வருவது பெருந் துன்பம்; பிறவாமையே பேரின்பம்; அதனை அடைவதற்குத் துறவறமே வழி; இப்பிறப்பால் நாம் அனுபவிக்கும் இன்பதுன்பங்களுக்கு வினைப்பயனே காரணம்' என்பது சமணத்திற்கு மட்டும் உரிய கொள்கையன்று. வைதிக சமயங்களிலுமுண்டு. கதை முடிவு கொண்டு 'பிறவாமைக்குத் துறவே வழி''என்றல் பொருந்தா. கண்ணகி மதுரை எரித்து மீண்டும தெய்வப் பிறவி பெறச் சமண சமயப்படி தவஞ்செய்தே பெற முடியும். அவ்வாறன்றித் தெய்வப் பிறவியாகியது இளங்கோ சமணரல்லர் என்பதற்குச் சான்று. எனவே இளங்கோ, வைதீக சமயத்தின்—சைவ சமயத்தினர் என்பர். செங்குட்டுவன் சைவன் என்பதால் இளங்கோவும் சைவமாக இருக்கவேண்டுமென்பது இவர் கருத்து.

34) 'இளங்கோவடிகளின் அடிப்படைக் கொள்கை' க. சுப்பிரமணியம். "இளவேனில்" — பக்: 9. 1972. இளங்கோ மன்ற வெளியீடு, தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம். விலை ரூ. 4·50

'ஊழையும் உப்பக்கங் காண்பர்' என்ற கொள்கை இளங்கோ சித்தாந்தத்தில், கோவலன் வாழ்வின் முடிவுவரையில்லை. மனித முயற்சியின் பயனின்மையைக் காட்டுவதையே தம் கட்டாய நெறியாகக் கொண்டவர் இளங்கோ. அவர் கொள்கை அக்காலச் சமய வாதிகளுள் ஆசீவக சமயிகளின் கொள்கைகளாகவே காணப்படுகின்றன. ஆசீவக மதம் Pre-destination, நியதி (destiny) சங்கதி (Chance), பாவம் (Nature) இவற்றிற்கு முக்கியததுவம் கொடுப்பது. இவர்தம் கொள்கைப்படிச் சிலம்பை நோக்கின் ஒவ்வொரு நிகழ்ச்சியும், ஆசீவகக் கொள்கை அடிப்படையில் வகுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். கோவலன் மாதவி பிரிவு நியதி; கொல்லப்படுதல் சங்கதி (Chance); கொல்லப் பயன்படுத்திய சந்தர்ப்பமே

சங்கதி. எனவே இளங்கோவடிகளின் ஆசீவகச் சித்தாந்தமே தமிழ்க் காப்பியங்கள்—துன்பியற் காப்பியங்கட்கு வித்தாயது எனக் கூற இடமளிக்கிறது என்பது கட்டுரையார் துணிபு.

35) 'இளங்கோவடிகள் உவமைப் புரட்சி ஒன்று' அ. மு. சரவண முதலியார். "கட்டுரைப் பொழில்"—பக். 167 மு. ப. 1959 வி. உ. பாரி நிலையம், சென்னை–1 விலை ரூ. 3·00

புறம், கலி, முதலிய சங்க நூற்களில் 'வடமீன் புரையும் கற்பின் மடமொழி அரிவை', 'வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்', என்ன வரும் உவம ஆட்சியினை மாற்றித் 'தீதிலா வடமீனின் திறம் இவள் திறம்' என்று அமைத்தது இளங்கோவின் உவமைப் புரட்சி எனக் காட்டுவர் இக்கட்டுரைக் கண்.

36) 'இளங்கோவடிகளின் கவிதை நயம்' மயிலை. சீனி. வேங்கடசாமி, "தமிழ் வட்டம்" — பக்: 141. 1969, 2–வது ஆண்டுமலர். 2, மலோனி ரோடு, தியாகராய நகர், சென்னை — 17.

காவியப் புலவன் இளங்கோ சிறப்புச் சில பேசி, கண்ணகி கணவன் இறந்த பின் செய்த மதுரைப் புரட்சித் தொடங்கித் தெய்வமாயது வரையுள்ள சுருக்கங்கூறி, பத்தினி விழாவிற்கு வந்த நான்கு பெண்களை (காவற்பெண்டு, அடித்தோழி, தேவந்தி, மாதர்) அறிமுகஞ் செய்து, அவர்தம் அரற்றொலி, புலம்பொலி இனிய கவிதை நயம் மிகச் சிலம்பில் அமைகின்றது; அவை சுவை நலன் மிக்க பாடல்கள் எனக் காட்டுவர்.

37) 'இளங்கோ வடிகளின் நடை' — மா. எழில் முதல்வன். "செந்தமிழ் செல்வி" சிலம்பு: 38. பரல்: 1, 2; பக். 37, 61.

'நடையாவது சொல்லும் முறையில் சுவையும், உணர்வும், பீடும், பெற்றியும், அமையுமாறு செய்திகளை வார்த்தெடுத்தல்' எனும் 'மேத்யூ அர்னால்ட்' கருத்து சுட்டப்பட்டு, இளங்கோவின் படைப்பில் பல்வகைப் பாவமைப்பு — ஓசைநயம் — உணர்ச்சி ஓட்டத்திற்கேற்ப நடக்கும் சிறப்பு — குறிப்பால் பின்னிகழ்வை உணர்த்தும் திறன், சுருக்க வேண்டிய இடத்துச் சுருக்கியும், பெருக்க வேண்டிய இடத்துப் பெருக்கியும் நடையமைத்தல், உவமை காட்டியுரைத்தல், தெளிவும் தொடர்பும், முன்னேன் மொழிந்த சொல்லும் பொருளும் போற்றல், (காட்சி, கால்கோள்

முதலான அமைப்பு) மக்கள் வழக்குச் செற்புணர்த்தல், இரு பொருள்பட இயம்பல், நயம்பட நவிலல், சொல்வளம், முரணழகு புகுத்தும் திறன், உருவக நடை, கற்பனை வளன், பல்சுவை (இன்பம் முதலான) அமைப்பு, முத்திரைச் சொற்கள் (ஊதுலைக் குருகு, அரும் பெறல் மரபு முதலான) படைத்தல் முதலான காட்டி அவை இளங்கோவின் நடைமாட்சிச் சான்றுவனவெனக் கட்டுரை காட்டுகின்றது.

38) 'இளங்கோ வடிகளும் இயற்கையும்' கே. இலட்சுமண சாமி. "இந்திய பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், நான்காவது கருத்தரங்கு மலர்"! பக். 17, 1972. கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு, திருவனந்தபுரம், விலை! ரூ 20·00.

இளங்கோவடிகள் தம் காப்பியத்தில் இயற்கையைக் கதையுடன் ஓட்டிச் செல்கின்ற முறையிலேயே அமைத்துள்ளது ஒரு சிறப்பாகும். வேனிற் காதையில் மாதவியின் மன வளர்ச்சியைத் தூண்டும் பின்னணியாக இயற்கையை அமைத்திருக்கின்றார். நிலமடந்தையின் நெட்டுயிர்ப்பு (13:19–29) இளங்கோவடிகள் நெட்டுயிர்ப் பின் எதிரொலி. இளங்கோ இயற்கைப் பொருள்களைத் தக்க விடங்களில் தக்கவாறு பயன்படுத்திப் படிப்பவர் உணர்ச்சிகளில் அவை பங்குகொள்ளச் செய்கின்றார். இக்கருத்திற்கு ஏற்ப இளங்கோ படைப்பிலிருந்து சான்றுகள் எடுத்தாளப்படுகின்றன.

39) 'இளங்கோவடிகளும் பொருள் இலக்கணமும்' ந. மு. வேங்கடசாமி நாட்டார். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 8. பரல்: 10, பக்: 605.

இளங்கோ காட்டும் புறப்பொருள் இவண் பேசப்படுகின்றது. இந்திர விழா ஊர் எடுத்த காதையில், கரிகாலன் போர்க் கோலம் பூண்டு வடதிசை நோக்கிப் புறப்படுமுன் தன்னுடைய வெற்றி வாள், கொற்றக் குடை, வீர முரசு, என்பவற்றை நன்னாளில், நன்முழுத்தத்தில் வடதிசை நோக்கிப் புறப்பட விடுத்தான் என்பது உழிஞைத் திணையின் 'குடையும் வாளும் நாள்கோள்' எனக்கூறும் பகுதியாம். வஞ்சிக்கும் இஃது உரிய தாயினும் உழிஞைக்கே சிறப்பாகவுடைத்து. புறப்பொருள் வெண்பா மாலை வஞ்சி, காஞ்சி, உழிஞை என்னும் மூன்று திணைக்கும் குடை நாட்கோளும் வாணாட்கோளும் கூறுவர். அடியார்க்கு நல்லார்

மேற்கண்ட புறச்செய்தி வஞ்சிக்குரியதென்பர். இக் கருத்து பொருந்தாவென்பது இக்கட்டுரையார் கருத்து.

40) 'இளங்கோவின் ஏட்டில்' அ. மு. பரம சிவானந்தம். "வாய்மொழி இலக்கியமே" — பக்: 75, மு. ப. 1964. வி. உ. பாரி நிலையம், சென்னை — 1. விலை: ரூ. 3·00.

கானல் வரியில் வரும் வரிப்பாடல்கள், ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை, வேட்டுவ வரி முதலான வாய்மொழிப் பாடல் களே. இவை சிலம்பின் கதைத் தொடர்பிற்குப் பயன்படுவன வல்ல. சிலம்பின் சிறப்பு கெடாதிருக்கக் காரணம் அதில் இடை இடையே வரும் வரிப்பாடல்களாகிய பண்ணத்தியே இவை காவியத்திற் கணி செய்து, காவியப் போக்கை அறுதியிட வல் லதாகின்றது. இன்றைய மாரி, கங்கையம்மன் விழாவில் மகளிர் குடம், நெருப்புச் சட்டி முதலான தாங்கி, பாட்டிசைத்து விழா எடுப்பதும், அவர் பாடல் நாட்டுப் பாடலே என்பதும், அது போல் இளங்கோவும் வேட்டுவ வரியில் தெய்வம் ஏறிய பெண் ணைப் படைக்கின்றார். ஊர் சூழ் வரி கண்ணகியின் அவலப் பாடல், அது கேட்ட மக்கள் அவலம், இவையும் வாய்மொழிப் பாடல் களே. இறுதிக் காதையில் வரும் அம்மானைவரி, கந்துகவரி, ஊசல்வரி, உலக்கைப் பாடல் இவையும் வாய்மொழிப் பாடல் களே எனக் கட்டுரையில் எடுத்துக்காட்டப்படுகிறது.

41) 'இளங்கோவின் குறை' சிவ. மணிகண்டராமன் "நான்காவது கருத்தரங்கு மலர்" — பக்: 157. இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம். 1972. கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைச் சார்பு வெளியீடு, திருவனந்தபுரம்.

கண்ணகி கதையைப் பதிகத்தில் இளங்கோ வடிகட்குச் சாத்தனார் கூறியதாகவும், காட்சிக் காதையில் சேரன் செங்குட்டு வனுக்குச் சாத்தனார் கூறியதாகவும் செய்தி வருகின்றது. காட்சிக் காதையில் இளங்கோவடிகள் மலைவளங் காண வந்ததாகச் செய்தியில்லை. பதிகத்தின் வழி நோக்க, மலை வளங்காண இளங்கோ சென்றதாக அறிகின்றோம். மதுரை எரிந்த நிகழ்ச்சி பதினான்கு நாட்கள் வரைச் சேரன் செங்குட்டுவனுக்குத் தெரியா மல் இருந்திருக்க முடியாது. அவ்வாறு தெரியாமல் இருந்ததாகக் காட்டுவதும், முன்கண்ட பதிக, காட்சிக் காதை தரும் செய்தி முரண்பாடும் இளங்கோவின் குறையென்று காண்பர் கட்டுரை யார்.

42) 'இளங்கோவின் சொற்றொடர் அமைப்பு' கஸ்தூரி. "இளவேனில்" — பக்: 25 (கையெழுத்துப் பிரதி), 1971. தமிழ்த் துறை, கேரளப் பல்கலைக் கழகம், திருவனந்தபுரம்.

இளங்கோவின் சொற்றொடர் முரண், பொருள் முரண், இளங்கோ அமைக்கும் பட்டியல் முறை (பத்துவகைக் கோட்டம் சமணக் கடவுளரைச் சாரணர் வாய்மொழியால் 45–வகையில் குறிக்கும் பட்டியல் முறை), சிலம்பில் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் (பட்டியல் தரப்பட்டுள்ளது), காப்பியப் பின்னிகழ்வை முன்னரே சுட்டும் காப்பிய உத்திகுறிக்கும் சொல் லாட்சித் தொகுப்பு இவை கட்டுரையில் தரப்பட்டுள்ளன. சுருங் கச் சொல்லி விளங்க வைக்கும் ஆற்றல், சிலேடை நயம், ஒரே பொருளுக்குப் பல்வேறு அடை கொடுக்கும் சிறப்பு, சொல்லோவி யங்கள் சில எடுத்துக் காட்டப்படுகின்றன.

43) 'இளங்கோவின் மறதியன்று' புலவர் செந்துறை முத்து "தமிழ்மறை வாழ்வினர்" — பக்: 68. மு. ப. 1963. மின்னொளி பதிப்பகம், சென்னை-1. விலை: ரூ. 2·00

'தமிழ் நாடு' பொங்கல் இதழ் ஒன்றில் திரு ம. பொ. சிவஞானம் அவர்கள் எழுதிய 'இளங்கோவின் மறதி' என்ற கட்டுரையின் மறுப்பாக இக்கட்டுரை அமைகின்றது. ம. பொ. சி. யார் கருத்துப்படி கோவலன் கொலையுண்ட மறுநாளே கண்ணகி அவனைக் கண்டாள்; அதனையடுத்தநாளே அரசனைக் கண்டு வழக்குரைத்து வென்றாள், என்பது மறுக்கப்பட்டுக் கண்ணகி கணவற்கு உணவு படைத்தது முற்பகல்; கோவலன் கொலையுண் டது நண்பகல்; அவனைக் கண்டது பிற்பகல்; அரசனிடம் வாதிட் டது மாலை; தீ எரியூட்டியதும் அப்போதே; என்பர்.

44) 'இளங்கோவின் வாரிசு' ம. பொ. சிவஞானம். "கம்பர் கவியின்பம்"—பக். 22 மு. ப. 1966, இன்ப நிலையம், சென்னை-4 விலை: ரூ. 3-50

கதையமைப்பில், பண்பாட்டு நெறியில், பழக்கவழக்கங்க ளில், கவிதைச் சிறப்பில், சிலம்பு, இராமாயணம், (கம்பர்), ஆகிய இரு காவியங்களிடை ஒற்றுமை, வேற்றுமைகள் நிறைய உண்டு. ஆயின் தமிழினம் பெருமைபெற வேண்டும் என்பதில் இருவருக் கும் வேற்றுமையில்லை. அயோத்தி இராமனை மக்கள் வழிபடும் தெய்வமாக முதற்கண் தமிழ் மக்கட்கு அறிமுகப்படுத்தியவர் இளங்கோ. கம்பர் சிற்றின்பச் சுவைக்கு முக்கியத்துவம்

கொடுத்தார். இளங்கோ சிற்றின்பத்தை இல்லறைக் காயாக வைத்து வீட்டின்பத்திற்குரிய ஒழுக்கத்திற்கே முக்கியத்துவம் அளித்தார். கொடுங்கோலன் நாட்டைத் தீக்கிரையாக்குவதில் இவ்விருவர்க்கும் வேற்றுமையில்லை. மங்கல வாழ்த்தை இளங்கோ தேசிய கீதமாகப் பாடியுள்ளார், இவ்வடிப்படையில் கம்பர் விரிவாக ஆற்றுப்படலம், நகரப்படலம், அரசியல் படலம் எனத் தனித்தனிப் படலமாகப் பாடியுள்ளார். கம்ப ராமாயணத்தின் போட்டியைச் சமாளித்துவரும் ஒரே தமிழ்க் காப்பியம் சிலம்பு. தமிழ் இனத்தின் இரு கண்கள் இளங்கோவும் கம்பரும். இவை ஆசிரியர் கருத்தாகக் கட்டுரையில் இடம்பெறுவன.

45) 'இளங்கோவும் திருவள்ளுவரும்' அ. ச. ஞானசம்பந்தன் "புதிய கோணம்" மு. ப. 1965 வி. உ. பாரி நிலையம், சென்னை-1 விலை ரூ. 3·25

இளங்கோவும் வள்ளுவரும் காண்பது ஒன்றே. ஒருவர் நீதிநூலாக எழுதினர். மற்றவர் வரலாற்றுக் காப்பியமாக அமைத்தார். 'வையத்து வாழ்வாங்கு வாழ்வான் வானுறையும், தெய்வத்துள் வைக்கப்படும்' எனுங் குறளின் இலக்கியம் கண்ணகி வாழ்வு. கோவலன் பிரிவிற்காகக் கண்ணகி வருந்தவில்லை. அதனல் அறம் செய முடியவில்லையே என்றே வருந்துகின்றுள்: ஊழ் பற்றிய செய்தி சிலம்பில் மிகையாகப் பேசப்படுகின்றது. குடும்பத்தின் குற்றம் மறைக்கவேண்டும் என்றவள் கொண்ட உறுதியான கொள்கை தன்னுடைய எல்லையற்ற துன்பத்தைப் பொறுத்துக்கொள்ளச்செய்தது. கட்டுரை, குறள்—சிலம்பு கருத்தொப்புமை எடுத்துக்காட்டுவது.

46) 'இன்பமும் துன்பமும்' பெ. இராமச்சந்திரன், 1964. "வே. வ இராமசாமி பாராட்டு மலர்" பக்: 149.

மாதவி இன்ப வாழ்வும், கண்ணகி துன்ப வாழ்வும் அடுத்தடுத்துக் காட்டி, இன்ப துன்ப உணர்ச்சிகளால் தாக்குண்டு தடுமாறும் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டும் வல்லமை பெற்றவர் என்பது கட்டுரை காட்டும் செய்தி.

47) 'ஈரடியும் முத்தமிழும்' டாக்டர். சா. வே. சுப்பிரமணியன் "இளவேனில்'' — பக்: 1. மு. ப. 1972. இளங்கோ மன்ற வெளியீடு, தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக்கழகம். விலை: ரூ.4.50.

ஈரடி — திருக்குறள்; முத்தமிழ் — சிலப்பதிகாரம். திருக்குறளும் சிலப்பதிகாரமும்' என்பதன் மாற்றுப் பெயர் 'ஈரடியும் முத்தமிழும்' என்பது. வள்ளுவர் அறவுரையாக வழங்கிய நெறிகள் சிலம்பில் 1. அடிப்படை உண்மைகளாக உருப்பெற்றன. 2. பாத்திரங்களின் பண்பு நிலையால் விளக்கப் பெற்றன, 3. காப்பியத்தில் தாம் (வள்ளுவர் கருத்துக்கள்) உரு மாறிக் கலந்தன, 4. குறளின் பொருளும் சொல்லும் விளங்க இணைந்தன என நான்கு வகையான் வகை செய்யப் பட்டுள்ளன என்பதைக் கட்டுரைக் காட்டுகின்றது. சிலம்பின் முப்பொருளில் 'ஊழ் வினை உருத்து வந்து ஊட்டும்' என்பதன்கண் ஏனை இரண்டும் அடங்கும். புற வாழ்க்கை முயற்சியால் பொலிவுபெறும். இப்பொருள் வாழ்விழத்தல் பேதமை; பொருள் பெருக்குதல் அறிவு; இப்பேதமையையும் அறிவையும் வகுப்பது ஊழ் என்பது வள்ளுவர் கருத்து. அடிகளின் காப்பியத்து நிகழ்ச்சிகளைச் செலுத்தும் பின் தூண்டுதலாக ஊழ் அமைகின்றது. இதனையடுத்து சிலப்பு — குறள் ஒப்புமை முன் குறித்த நான்கு வகையில் விரிக்கின்றது கட்டுரை.

48) 'உரைசால் பத்தினி' டாக்டர். துரை சிங்காரவேலன், "தில்லி தமிழ்ச் சங்க வெள்ளிவிழா மலர்." பக: 75.

'உரைசால் பத்தினி' என்பதற்குப் 'புகழமைந்த கற்புடை மகள்' என்று உரை நூலார் கொள்ளும் பொருள்கோள் பொருந்தா. காரணம் கற்புடை மகளிர் (பத்தினிப் பெண்டிர்) இருந்த நாட்டில் 'வானம் பெய்யாது; வளம் பிழைப்பறியாது; நீணில வேந்தன் கொற்றம் சிதையாது' என்று குறிப்பிடுவதனல், கற்புடைத் தேவி (பாண்டிமாதேவி) இருந்த நாட்டில் அரசியல் பிழைப்பும் மதுரை அழிவும் நிகழ்தலின் 'பத்தினிப் பெண்டிர்' கற்புடை மகளிரினும் வேருனவள். கற்புடை மகள் களவு வழி வந்தவள்; ஊடலும் கூடலும் அளிப்பவள். பத்தினிப் பெண் களவு வழி வாராது கணவனே தெய்வம்; அவன் இன்பமே தன்னின்பம்; கணவன் தவறைக் கண்டியாள்; ஊடல் கொள்ளவும் செய்யாள். சுய நலம் இவள் காணுத ஒன்று. இத்தகைய பண்புடையவளே பத்தினிப் பெண். கற்புடை

மகள் வேறு; பத்தினிப் பெண் வேறு; கற்புடை மகளைவிடப் பத்தினிப் பெண் உயர்ந்தவள். எனவே 'உரைசால் பத்தினி'க்குப் 'புகழமைந்த கற்புடை மகள்' என்ற பொருள்கோள் தவறு என்பர்.

49) 'எந்தச் சிலம்பு' டாக்டர். வ. சுப. மாணிக்கம், "எந்தச் சிலம்பு" — பக்: 9. மு. ப. 1964: வி. உ. பாரிநிலையம், சென்னை–1. விலை: ரூ: 2·50.

புகார், மதுரை, வஞ்சிக் காண்டங்களில் சிலம்பு பற்றி வரும் குறிப்பு தரப்பட்டுப் பத்தினி சிலம்பு முக்காண்டத்தும் பேசப் படுதலின் அதுவே பெயர்க் காரணம் என்றல் பொருந்தா. 'சிலம்புள கொண்ம்; 'சிலம்பு கொண்டுபோய் மாறி வருவன்', கண்ணகி சிலம்பு கொண்டு ஊர் சுற்றல், சிலம்பை உடைத்தல்— ஆகச் சிலம்பு நான்கிடத்துச் சிறப்பிடம் பெறுகிறது. காவியம் இரு தேவியரின் சிலம்புப் பூசல்; இதில் எந்தச் சிலம்பு இன்றேலும் கதை நடவா. வேந்தி சிலம்பு கண்ணகி சிலம்பொடு மோதிய தாலே கண்ணகி உரைசால் பத்தினியாக முடிகின்றது. அதனாலே தான் செழியனுக்கு அரசியல் பிழைப்பும், கோவலற்கு ஊழ்வினை யூட்டும் வந்து சேர்கின்றது. இளங்கோ நிறுவ முனைந்த தலையாய பேரறம் ஊழ்வினைக் கோள் ஆகலின் அது கோவலனுக்கு வந்துறுத்தியது காவலன் தேவி சிலம்பு கவர்ந்த கள்வன் என்பதால். கோவலன் கைச் சிலம்பு 'போற்றாஞ் சிலம்பு', 'சித்திரச் சிலம்பு', 'செய்வினைச் சிலம்பு', 'செஞ்சிலம்பு' என்ற அடையாலும், கண்ணகி கைச் சிலம்பு, 'செம்பொற் சிலம்பு', 'இணையரிச் சிலம்பு', 'பொற்றொழிற் சிலம்பு', என்னும் அடையாலும் குறிக்கப்படுதலின் 'தீவினைச் சிலம்பு' (காட்சிக் காதை), சூழ் வினைச் சிலம்பு (பதிகம்) என்பன காவலன் தேவி சிலம்பு குறிக்கும்; அதுவே சிலப்பதிகாரக் காவியப் பெயர்க் காரணம். என்பர்.

50) 'ஒரு பெருங் காவியம் தந்த இரு பெண் மணிகள்' மேரி. மாசிலாமணியம்மையார். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 39. பரல்: 1. பக்: 33.

கண்ணகியின் குண நலன், அவள் செய்த அறப் புரட்சி, மாதவியின் மாண்பு — அவளின் இரு கடிதம் காட்டும் இரு வேறு வளர்ச்சி நிலை இவை கட்டுரையில் பேசப்படுவன.

51) கடவுளர் போற்றும் தெய்வம்' (கண்ணகி) அ. மு. பரம சிவானந்தம். "காப்பியக் கதைகள்" — பக்: 1-75. மு. ப. 1954. தமிழ்க் கலை இல்லம், சென்னை-30.

காவிரிக் கரையிலே, மதுரைக்கு வழியிலே, மதுரை நகரிலே, தெய்வ வடிவிலே என்னும் உட்பெருந் தலைப்புக்களுடன், பல சிறு தலைப்புக்களையும் அமைத்துச் சிலம்பின் கதைச் சுருக்கம் பேசப்படுகின்றது.

52) 'கண்ணகி' அ. காமாட்சி குமாரசாமி. "இலக்கிய இன்பம்" — பக்: 77. மு. ப. 1959. திருந்திய பதிப்பு: 1963, பறம்பு நிலையம், 131 பிராட்வே, சென்னை-1. விலை: ரூ. 2-00.

சிலம்பின் கதைச் சுருக்கம், கண்ணகி வரலாறு பேசப்படுகிறது. பெரும் பாலும் ஒரு வரிடத்தேயுள்ள குறைபாட்டின் மூலமாகவே விதி நுழையும் என்பது ஒருவகைக் கருத்து. இசைக் கலை யறியாக் கண்ணகியின் குறைபாட்டின் வழியாகவே விதியவள் வாழ்வில் புகுந்து வாழ்வைக் குலைத்தது. விதியின் வலையில் வீழ்வோர் கதிகலங்கி யழியாது மதியால் வெல்ல முயல வேண்டும் என்பது கட்டுரையார் விளக்கமாக அமைகின்றது.

53) 'கண்ணகி' விசு. திருநாவுக்கரசு. "பூச்சூட்டல்" - பக்: 112. மு. ப. 1947. ஸ்டார் பிரசுரம், திருச்சி. விலை: ரூ. 2-00.

பேகன் – கண்ணகி வாழ்வும், கோவலன் – கண்ணகி வாழ்வும் ஒப்புமைப் படுத்தப்படுகின்றது. வேற்றுமை, கோவலன் — கண்ணகி வாழ்வு சோக ரசமாய் முடிந்ததைப்போலப் பேகன் — கண்ணகி வாழ்வு அமையாது பிரிவுக்குப் பின் இன்பமாக அமைகின்றது என்பது கட்டுரை காட்டும் செய்தி.

54) 'கண்ணகி' புலவர். அ. மாரிமுத்து. "காப்பிய மகளிர்" — பக்: 19. மு. ப. 1956. மலர் நிலையம், சென்னை - 1. விலை: ரூ. 1-00

கண்ணகி மனமும், நலமும், கோவலனின் கூடா ஒழுக்கம், கண்ணகி கண்ணீரும் கனவும், கோவலன் வருகையும் மதுரைப் பயணமும், கோவலனின் அருள் உள்ளம், கண்ணகி அடைக்கலம், கோவலன் கொலை, ஆய்ச்சியர் குரவையும் கண்ணகி துன்பமும், கண்ணகி வழக்குரைத்து மதுரையைத் தீக்கிரையாக்கல், கண்ணகியின் பழம் பிறப்பு, கண்ணகிக்குக் கோயில், ஆய தலைப்புக்களில் சிலம்புக் கண்ணகியின் படைப்பு விமர்சனம் (சுருக்கம்) கட்டுரையில் பேசப்படுகின்றது.

55) 'கண்ணகி என்ற ஒரு கற்பு இயந்திரம்' இந்திரா பார்த்த சாரதி. மே, 1972 "கணையாழி" (விவசாயச் சிறப்பிதழ்) வெளியீடு, கே. கஸ்தூரி ரங்கன், புதுடெல்லி-3.

'மழலைப் பருவத்தே கண்ணகி தமிழ்ப் பண்பாம் கற்பு நெறியுணர்ந்த பொற்பின் செல்வி. எல்லாக் கலைகளிலும் தேர்ச்சி பெற்ற ஆரணங்கு' என்ற ஓர் தமிழ்ப் பேராசிரியரின் கருத்தின் தவறுடைமையும், 'நீங்கள் கலைஞர் (மு. கருணாநிதி) எழுதிய சிலப்பதிகாரக் காவியத்தைப் படித்திருக்கிறீர்களா?' எனக் கேட்ட கே. கே. ஷாவின் உரையையும் சுட்டி சிலப்பதிகாரம் எழுதியது இளங்கோவே என்பர். காவியத் தலைவி கண்ணகியை வண்ணமற்ற இயந்திரமாகக் காட்டி விட்டு இன்னொரு பெண்ணுக்குச் சிறப்பளிக்கிறார் இளங்கோ. அவர் தம் அநுதாபம் கண்ணகிக்கு இல்லை. மாதவிக்கே உண்டு. கணவனைப் பிரிந்த துயரைக் கண்ணகி தன் கற்பின் பெருமையாகவே கருதுகிறாள். 'சிலம்புள கொண்ம்' என்றதில் அவள் அன்பு தொனிக்கவில்லை. வணிக நோக்கே காணப்படுகின்றது. கண்ணகியிடம் காதற்குரிய பண்பொன்றும் இல்லை. கண்ணகியின் கற்பைச் சிறப்பிக்கவே இளங்கோ காப்பியம் இயற்றினார் என்பது தவறு. மனப் பொருத்தமில்லா ஒரு மண வாழ்க்கையின் பாலைவன நிலையைச் சுட்டிக்காட்ட எழுந்ததே இக்காப்பியம் என்பர். கட்டுரை புதிய பார்வையுடையது.

56) 'கண்ணகி என்னும் கற்புடைத் தெய்வம்' ச. ஆறுமுக முதலியார் "இலக்கிய ஓவியங்கள்" — பக்: 64. மு. ப. 1958. ம. ப. 1961. பழனியப்பா பிரதர்ஸ், சென்னை — 5. விலை ரூ. 2-50

காவியம் சிறக்கப் பாவிகப் பண்பு ஏதுவாகிறது. சிலம்பில் பல காவியப் பண்பு சிறப்பினும் முப்பண்பே (நீதி) தலையானது. கண்ணகி கற்பு 'தெய்வந்தொழா அள்' குறளுக்கு இலக்கணமாக அமைகின்றது. கண்ணகியின் ஆறிய கற்பு, வீரிய கற்புத் திறம் பேசப்படுகின்றது. கண்ணகி இல்லற மாண்பு 'அமுதம் உண்க அடிகள்' என்பதில் தெளியப்படுகிறது. அறநெஞ்சம் 'அறவோர்க் களித்தலும்' என வருமவள் வாய்மொழியால் அறியப்படும். கோவலன் பெற்றோரிடம் அன்புடன் இருந்தாள். அறிவுறுத்த வேண்டிய இடத்துக் கணவன் குறை சுட்டி அறிவுறுத்துகின்றாள். கண்ணகி கற்புடைமையே காப்பிய உயிர்நாடி என்பது கட்டுரையார் முடிபு.

57) 'கண்ணகி கதை' மறைமலையடிகள். "செந்தமிழ் செல்வி" சிலம்பு: 31 பரல்: 12

கோவலன் அழகிற் சிறந்தவனுய், அறிவில் மிக்கவனுய். தன் இளம் பருவத்திலேயே இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழும் துறை போகப் பயின்று யாவரும் வியக்கத்தக்க புலமையுடையவனுய் விளங்கினுன். கண்ணகியும் அங்ஙனமே முத்தமிழும் முற்றப் பயின்று அழகில் நிகரற்ற பொற்பாவையாய்த் திகழ்ந்தாள் என்பர். "இளைஞர்க்கான இன்றமிழ்' என்னும் நூலில் சேர்க்கும் முகத்தான் எழுதப்பட்ட கண்ணகி கதைப் பகுதி முடிவு பெருது 'கோவலன் மாதவி மாலை வாங்கியவளுக்கு மணவாளனுயினுன்' என்று குறிப்பதோடு நின்றுவிடுகிறது.

58) 'கண்ணகி காப்பியம்' அ. கி. பரந்தாமனுர். "வரலாற்றுக் கட்டுரைகளும் பிறவும்"—பக். 116. மு. ப. 1959 அல்லி நிலையம் சென்னை–7 விலை: ரூ. 3·50

சிலம்பிற்குக் 'கண்ணகி காப்பியம்' என்ற பெயர் பொருத்தமுடையதே. கண்ணகி கதை தமிழகத்தில் வழங்கிய கதை. கலைப்பித்தன் கோவலன் கலை நாட்டங் கொண்டு மாதவியை அடைந்தான். கோவலன் கண்ணகியோடு எட்டாண்டும் மாதவியோடு பதின்மூன்றுயாண்டுகளும் வாழ்ந்தான். கண்ணகி 34–வது வயதில் பத்தினித் தெய்வமானுள். கண்ணகியே மாரியம்மனுனுள். இக்காப்பியத்தினின்று பண்டைத் தமிழர் நாகரிகம், கைத்தொழில், வாணிகம், கலைச்சிறப்பு இன்னபல அறியப்படுகின்றன. நாடக அரங்கமைப்பு விரிக்கப்படுகின்றது. இக்கட்டுரையே மு. பதிப்பாக *1961-ல்* (வி. உ பாரி நிலையம் சென்னை–*1*, ரூ. *2–25*) "பன்னிரு கட்டுரைகள்" என்ற நூலில் பக்: *32*-ல் இடம்பெறுகின்றது.

59) 'கண்ணகி சிலம்பீந்த காரணம்' புலவர் திருமுது குன்றம். "செந்தமிழ்ச்செல்வி": சிலம்பு: 39. பரல் 2. பக். 66

'சிலம்புள கொண்ம்' என்றது மாதவிக்குக் கொடுக்க அல்ல. 'காணுங்கால் காணேன் தவருய காணுக்கால், காணேன் தவறல்லவை' என்ற குறட் கருத்திற்கொப்ப, தமிழ்மகள் இயல்புடைக் கண்ணகி கணவற் கண்ட போழ்தவன் தவறு காணுது அவன் துயர் போக்கல் தன் கடன் என எண்ணினளாய்ச் சிலம்புள; அது விற்று முதலீட்டுக என்றனள். கண்குறியால் வணிக

நோக்கைக் காட்டினள். அஃதறிய, ஒத்த உள்ளத்தினர் இருவரும் மதுரை புறப்படத் துணிந்தனர் என்பது கட்டுரைச் செய்தி.

60) 'கண்ணகி சீற்றம்' வி. மரிய அந்தோனி. "இலக்கிய உலகம்"—பக்: 38. மு. ப. 1962. இ. ப. 1967. பூங்கொடி பதிப்பகம், விருதுநகர் விலை ரூ. 2-50

ஆய்ச்சியர் குரவை தொடங்கி தெய்வமானதுவரை கண்ணகி வரலாற்றுச் சுருக்கம் கட்டுரை. கண்ணகி சீற்றம் நியாயமானதெனினும், சீருதிருப்பதே பொறுமையின் பெருமை. முக்குற்றங்களில் ஒன்ருய சீற்றம் கண்ணகியைப் பல பிறவி எடுக்க வைத்தது (மணிமேகலை). போற்ரு ஒழுக்கம் புரிந்தீர் எனக் கண்ணகி அறியாது மயங்கிக் கூறிவிட்டதாகவும், அதற்காக வருந்துவதாகவும் கட்டுரை குறிப்பது புதுமையுடையது.

61) 'கண்ணகி செய்தது தவரு?' அ. மு. பரமசிவானந்தம் "வையைத் தமிழ்"—பக்: 183 மு. ப. 1959 வி. உ. பாரி நிலையம், சென்னை-1 விலை ரூ. 3-50

'கண்ணகி செய்தது தவறு' என வந்த ஒரு கட்டுரையின் மறுப்பாக இக் கட்டுரை அமைகின்றது. 'காமனைத் தொழுவம் வம்மின்' என்றற்குப் 'பீடன்று' என்று கண்ணகி கூறியது, 'சமணர் தெய்வ வழிபாடு செய்யாராகலின் அவ்வாறு பகர்ந்தாள்' எனும் கருத்து, அமிர்த சாகரர், பவணந்தியார். மாதரி-யாகிய சமணர்கள் செய்வது காட்டி மறுக்கப்படுகின்றது. பல்வகைத் துயர் பொறுத்த கண்ணகி 'கோவலன் கொலையுண்டது ஊழ் வினையால்' என்று ஏன் பொறுக்கவில்லை?' என்பதற்கு விடையாகத் 'தகைசான்ற சொற்காக்கவே எழுகின்ருள்' என்பதைக் காட்டுவர். 'ஊழ் நினைந்து வாளா அமைதலே அறம்' என்றற்குக் காட்டப்படும் இரு குறள் (துறவறவியல், காமத்துப்பால்) சூழ் நிலையறிந்து பயன்படுத்தப்படவில்லை என்று கூறி 'அதுவன்று அறம்' என மறுப்பர். கண்ணகி மதுரையை எரித்தது சமணக் கொள்கைக்கு ஒவ்வாதது என்பதற்குத் 'தீத்திறத்தாரையே அழித்தாள்' எனக் காட்டி மறுப்பர். 'ஆயிரங் கொல்லரைக் கொல்லக் கண்ணகி பணித்தாள்' என்ற குறைக்குச் சிலம்பிற் சான்றில்லை எனக் காட்டி மறுப்பர். எனவே, கற்பின் கொழுந்தை, பொற்பின் செல்வியை, 'இரத்த வெறி கொண்ட இழிதேவதை ஆயினள்' என்று இழித்தும் பழித்தும் உரைத்தல் அறமாகாது எனக் கட்டுரைக்கண் நிறுவப்படுகிறது.

62) 'கண்ணகி திருமணம்' வித்துவான். இ. சிவகுருநாதன். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 19; பரல், 8, 10. பக்: 376 & 462.

எந்த ஒரு நூலும் மங்கல மொழிகொண்டு தொடக்கம் பெற வேண்டும். சிலம்பு 'திங்கள்' என்ற மங்கல மொழி கொண்டு தொடங்குகிறது. திங்கள் பெண்பால்; ஞாயிறு ஆண்பால்; பெண்ணைத் தலைவியாகக் கொண்ட இப்பெருங்காப்பியம் திங்களைப் போற்றுவதியற்கை. தொடக்க கதை இன்பம்; செல்லச் செல்லத் துன்பமாக மாறுகின்ற நிலையைத் 'திங்களைப் போற்றுதும்' என்ற தொடக்கமே அறிவுறுத்துகின்றது. கற்பிற்குப் பெருந்துணை செய்யும் காவலைச் சிறப்பிக்கவே திங்களை முதற்கண் மன்னவன் வெண்கொற்றக் குடைக்கு உவமையாக்கிக் கூறினர். கண்ணகி கற்பைச் சிறப்பித்த இளங்கோ, கோவலன் ஒழுக்கம் கூருதது, பின்னர் அவன் ஒழுக்கத்தில் வழுக்குதல் நினைந்து. கண்ணகி கோவலன் பிரிவு வாழ்க்கை உயர்ந்த தமிழ்க் காதல் ஒழுக்கத்திற்கு இழுக்கமாகு மாதலின் 'காதலை' இளங்கோவடிகள் கண்ணகி கோவலர்க்குக் கூறிற்றிலர். இவை கட்டுரை விளக்கங்கள்.

63) 'கண்ணகி திருமணம்' வை. தட்சிணாமூர்த்தி "செந்தமிழ்ச் செல்வி". சிலம்பு: 31. பரல் 11, 12. பக்: 547 & 573.

களவு மணமே தமிழர்தம் வழக்கு. கண்ணகி திருமணம் தமிழர் மரபு மணமே என்பர் கணக்காயர் நாவலர். பிரசா பத்தியம் என்பர் அடியார்க்கு நல்லார். 'பாணிக் கிரகணம்' என்பர் வையாபுரிப் பிள்ளையவர்களும், இராசமாணிக்கனாரும். 'பிரசாபத்தியமாவது மகட்கோடற்குரிய கோத்திரத்தான், மகள் வேண்டியவழி இருமுது குரவரும் இயைந்து கொடுப்பது' என்பர் இளம்பூரணர். இம்முறையில் கோவலன் மணம் பெற்றோர் கொடு எனக் கேட்டுத் திருமணம் செய்ததாகக் கூறப்படவில்லை. எனவே கண்ணகி திருமணம் பிரசாபத்தியமல்ல. 'காதலால்' என்பதை இருவர்க்கும் ஏற்றி அறிமுகப் படுத்துவதனால் இருவருங் காதலர்களே என்னுங் குறிப்பு தொனிக்கிறது. பாணிக் கிரகணமாயின் ஆண்டுக் கைப்பிடித்தல், ஏழடிநடத்தல், அம்மி மிதித்தல், அருந்ததி காணல் முதலியன கூறப்பட்டிருக்க வேண்டும். அன்றியும் பாணிக் கிரகணத்தில் மங்கல அணி (தாலி) அணியப் பெறுதல் இல்லையாகலின் கண்ணகி மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்' என வருதலின் இம்மணம் பாணிக் கிரகணமல்ல. 'காதலாள்', 'காதலான்' என வருதல் கொண்டு கண்ணகி திருமணம் காதற்கற்பே' என முடிப்பர்.

64) கண்ணகி பெயர்க் காரணம்' வித்துவான். ஆ. சிவலிங்கனார். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 27. பரல்: 7. பக்: 295.

கர்ணம் > கர்ணகி > கண்ணகி. 'கர்ணம் (காது) வழிப் பிறந்தவள் கண்ணகி என்பது கோவலன் கதை கூறும் செய்தி. மு. இராகவையங்கார் கர்ணிகா அல்லது கர்ணகா என்ற வட சொல்லின் திரிபே கண்ணகி என்பர். 'கண்ணகத்துள்ளாள்' கண்ணகி என்பது மூன்ருவது கொள்கை. கர்ணகா, கர்ணிகா என்பது தாமரைப் பொகுட்டெனப் பொருள்படும். இத்தாமரைப் பொகுட்டுப் போன்றவள் கண்ணகியாகலின் 'கண்ணகி' எனப் பட்டாள் என்பது மு. இராகவையங்கார் வாதம். இதனை இக் கட்டுரையார் மறுப்பர். தாமரைக்கு உவமையாகக் கண்ணகியை இளங்கோ யாண்டும் காட்டிலர். 'மணி' (திருமாமணி) என்ற சொல்லைத் தாமரைப் பொகுட்டெனப் பயன் படுத்தாது ஒளி மணி என்றே பயன்படுத்துகின்ருர். உரை நூலாரும் மு. இரா., கொள்ளும் பொருள் (மணி — தாமரைப் பொகுட்டு) கொள்ள வில்லை. திருமாமணியின் — 'மணி' சைன சமயத்தில் வீடு பெற்ற உயிரைக் குறிக்கும். இது கண்ணகியின் பின் நிகழ்வு குறிப்பதே. பெயர்க் காரணமன்று (ஒருமாமணியாய் உலகிற் கோங்கிய திருமாமணி என்பது). எனவே கண்ணகி என்பது கண்ணகத் துள்ளாள் என்று கொள்வதே பொருந்தும் எனக்காட்டுவர்.

65) 'கண்ணகி மணம் மறையோர் மன்றலா? காதற்கற்பா?' எஸ். எஸ். பாரதியார். "செந்தமிழ்", தொகுதி: 40. பகுதி: 7. பக்: 219.

'காதலாள் பெயர் மன்னுங் கண்ணகி', 'காதலாற்கொண் டேத்துங் கிழமையான் கோவலன்' என்பதால் இருவருக்கும் காதலுடைமையை இளங்கோவடிகள் சுட்டுகின்ருர். 'வயங்கிய பெருங் குணத்துக் காதலாள்' என்பது 'பெருங்குணங்களோடு காதலும் உடையவள்' எனப் பொருள்படும். மறைந்த காதலைக் களவென்பதுபோல், காதல் வெளிப்பாடே கற்பறமாகும். 'கண் டேத்தும் செவ்வேள் என்றிசை போக்கிக் காதலால்' என்று வள்ளியின் காதற் கிழவன் என்று சுட்டுதலின் இம்மணம் காதல் வழி வந்த கற்பு மணமே என்பர்.

66) 'கண்ணகியார்' டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை. "தமிழ் நாட்டு நவமணிகள்" — பக்: 46. மு. ப. 1926. ஒற்றுமை ஆபீஸ், சென்னை. விலை: ரூ. 1-00.

சிலம்பு காட்டும் கண்ணகி கதை எளிய உரைநடையில் பாமர மக்களும் புரிய முடிகின்ற அளவில் சுருக்கமாக எழுதப்பட்டுள்ளது.

67) 'கண்ணகியின் வழக்குரை' ஆர். வீரபத்திரன். "இலக்கியத் தென்றல்"-பக்; 59. மு. ப. 1954. இ. ப. 1969. பூமகள் பதிப்பகம், நார்கோவில். விலை ரூ. 300.

சிலம்பு நாடக காப்பியம் — ஊர் சூழ்வரி நிகழ்ச்சி — கண்ணகி மன்னனை கண்டது இரவுப் போழ்தில் — கண்ணகியின் நிலை மாற்றம் கோவலன் இறந்த பின்னே. உயிர் தங்கி நிற்றல் பாண்டியன் தவறிழைத்த காரணம் தவறு எனச் சுட்டவே. கோவலன் ஒற்றைச் சிலம்பு விற்க எண்ணியதன் காரணம் அதுவே போதும் (முதலீட்டிற்கு) என்பதால். கண்ணகி வழக்குரைக்கும்போது சபை கூடியிருக்கவில்லை. பெருந்தேவி கனா, கண்ணகி, அரசன் அரசி முன்வழக்குரைத்தல், வீரபத்தினியின் தோற்றம், மன்னனின் மனதத்டுமாற்றம், புகார் வேந்தர் நீதி, மணிகண்டு மன்னன் மயங்கி விழுதல், அரசமாதேவி ஆவி துறத்தல், மூவகைப் பத்தினிப் பெண்கள் (தலை, இடை, கடை,) கண்ணகி, தேவி இருவரும் பத்தினிப் பெண்டிரே என்பதும், உயிர் கொடுத்து வளைந்தகோல் நிமிர்த்தல், சிலம்பு துன்பியல்—நாடகம்—என்பன பேசப்படுகின்றன.

67) அ 'கண்ணகியும் பகவதி வழிபாடும்' பி. எல். சாமி. "ஆராய்ச்சி" பக்: 391. மலர் : 2 : இதழ் : 4. — 1971.

கண்ணகி வழிபாட்டிலிருந்து பகவதி வழிபாடு தோன்றிய போது அதனுடன் சக்தி வழிபாடு, காளி வழிபாடு, நாக வழிபாடு, பத்மாவதி வழிபாடு, தாரா தேவி வழிபாடு இணைந்திருக்க வேண்டும். விஷாரிகாவு 'பகவதிகோயில்' பூசாரிகள் 'அடிகள்' எனப்படுவதன்றி இவர்கள் இளங்கோ வழிவந்தவரென்றும் கூறுப. இக்கோயில் உற்சவ மந்திரப் பாடலில் கண்ணகி கதை வழங்குகிறது. பெரும்பான்மை பகவதி வழிபாட்டில் கண்ணகி கதை மறைந்து காணப்படுகிறது. சைனர்களின் பத்மாவதி, மங்கள தேவியுடன் தொடர்பு படுத்தி மங்களூரில் வழங்குகின்றது

'மங்கல மடந்தைகோட்டம்' சிலம்பு கூறும். பகவதி வழி பாட்டில் தாய்த் தெய்வ வழிபாடு இரண்டறக் கலந்துள்ளது. சிலம்பிலும் கண்ணகியைத் தாய்த் தெய்வமாகக் காணும் குறிப் புள்ளது. தக்காணத்தில் சந்திராத் தீவு (சந்திரா பழி வாங்கி யது") — கதை கண்ணகி பெயர் 'சந்திரா' என வழங்கியது என்பது குறிக்கும். மரத்தடியில் தெய்வம் நிற்கும் சிற்பம் கி. மு. 2-ம் நூற்றுண்டில் பாரஹூத், சாஞ்சி, ஸ்தூபங்களிலும், குப்தர் களின் கலைகளிலும் காணலாம். கண்ணகி வேங்கை மரத்தடியில் தெய்வமாக நின்றது இதனோடு ஒப்பு நோக்கத்தக்கது. மலையாள நாட்டில் வழங்கும் 'ஒற்றை முலைச்சி' யம்மன் தெய்வம், யக்ஷியாக வும், மலையில் வாழ்பவள் என்றும், பாலை மரத்தடியில் நிற்பவள் என்றும் மலையர் குறிப்பர். இவ் ஒற்றை முலைச்சியே நற்றிணைத் 'திருமாவுண்ணி' யாக இருக்கலாம். அதுவே கண்ணகியாக ஆக் கவும் பட்டிருக்கலாம். மரத்தடியில் நிற்கும் சைனர்களின் யக்ஷி தேவதையொடு தொடர்புடையது கண்ணகி வேங்கை மரத்தடி யில் நின்றது.

68) 'கண்ணகி வழக்குரைத்தது எப்போது? அ. திருமால் இந்திரசிங். "இளவேனில்" (கையெழுத்துப் பிரதி) — பக்: 73 1972. தமிழ்த்துறை, கேரளாப் பல்கலைக் கழகம்.

கண்ணகி பாண்டியனைக் கண்டு வழக்குரைத்தது கோவலன் கொலையுண்ட அதே நாள் இரவு 8–மணியளவில் என்பது மறுக் கப்படுகின்றது காரணங்கள்: இரவு 8-மணி வரை பாண்டியன் வருவோர்க்கு முறை வழங்கினன் என்பது சிறப்பே யாகினும் நடை முறைக்கு ஒவ்வாதது. பாண்டி மாதேவி கடையாமத்துக் கண்ட கனவுரைக் கையில் கண்ணகி வழக்குரைத்தாளாகலின், அவள் கனவை இரவில் உரைத்தாள் என்பதும் பொருந்தா. என் னெனின் பகல் இருமுறை பாண்டியனைச் சந்தித்திருந்தும் அப் பொழுது உரைக்காது இரவில் உரைத்தாள் என்றல் பொருந்தா. அன்றியும், தேவியைத் தொடர்ந்த குற்றேவலர், பல அணிகலன் ஏந்தி வருவதாகக் காட்டிய இளங்கோ 'விளக்கு' ஏந்தி வந்த தாகக் குறிக்கவில்லை இரவு எட்டு மணியாகின் 'விளக்கை' அடி கள் குறித்தே இருக்க வேண்டும். எனவே தேவி கனவுரைத்தது காலைப் போழ்தெனவும், அது போது வந்து வழக்குரைத்ததும் (கண்ணகி) காலைப்போழ்தே எனவும், அது கோவலன் வெட் டுண்டு இறந்த மறுநாட்காலை என்பதும் கட்டுரையார் துணிபு.

69) 'கண்ணகி வழிபாடு' வி. சி. கந்தையா. "மட்டக்களப்புத் தமிழகம்" — பக்: 153. மு. ப. 1964 ஈழ கேசரிப் பொன்னையா நினைவு வெளியீட்டு மன்றம், குரும்பச்சிட்டி, யாழ்ப்பாணம், இலங்கை.

சோழ மண்டலத்துக் கண்ணகி, பாண்டி மண்டலத்து வீரக் கண்ணகியாகி, சேரமண்டலத்திலே பத்தினிப் படிமம் சார்ந்து, ஈழமண்டலத்துச் சிங்களவரிடைப் 'பத்தினித் தெய்யோ' எனப் பெயர் பெற்று மட்டக் களப்புத் தமிழகத்திலே 'கண்ணகையம் மனுக' விளங்கி, வழிபடப் பெறும் முறையினையும், கண்ணகியம் மன் பற்றிய மட்டக்களப்பில் பாடப்பெறும் காவியங்கள் பற்றியும், சிந்து முதலான பாடல்கள் பற்றியும், — கண்ணகி கோயில் வழி பாடும், சடங்குமுறைகள் பலவற்றைப் பற்றியும் — நன்கு வர லாற்று அடிப்படையில் ஆய்கின்றது கட்டுரைப் பகுதி.

70) 'கம்பரின் சிலப்பதிகார நினைவுகள்' வித்துவான் வேங்கடராமச் செட்டியார். சிலம்பு : 45 : பரல் : 3,4,7, பக் : 119, 177, 357 ("செந்தமிழ்ச் செல்வி").

சிறந்த காவியக் கருத்தர் பல கவிஞர் கருத்தைத் தொகுத் துக்கூறி காவிய அழகு செயல்மரபு கம்பர் பலவிடத்து இளங்கோவின் கருத்தை எடுத்துத் தன் காவியத்து அழகு செய் கிறார். தயரதன் ஒற்றை வெண் குடைப்புகழ்ச்சி — சிலம்பின் மங்கல வாழ்த்தின் சாரம். சூர்ப்பநகை வாயிலாகச் சீதையழகைப் புனைதல் — இளங்கோவின் 'போதிலார் திருவினுள்' என்பதன் சாயலே. வாரல் என்பனபோல் மறித்துக் கைகாட்டும் சிலம்புக் கொடி – இராமாயணத்தில் ஐயனை (இராமனை) வருக வென அழைப்பதாகப் புனைவு பெறுகின்றது. இவை போன்று பல நிகழ்ச்சிகள் – ஒப்பு நோக்கப்பட்டு – கம்பனுக்கு முன்மாதிரி யாக – வழிகாட்டியாக இளங்கோ காவியம் அமைகின்றது என்பர்.

71) 'கலை உள்ளம்' சு. வே. நடராஜன். "இலக்கியக் காட் சிகள்" — பக் : 115. மு. ப. 1961. ஏ. டி. என். நாகலிங்கம் & கம்பெனி, மதுரை. விலை : ரு : 2-25.

புகார்நகரம், காப்பியத் தலைவன், தலைவியர் குடிப்பெருமை. அவர் திருமணம், இன்பவாழ்க்கை, பூம்புகார்ப் பொற்றொடியின் தலைக்கோல் தானம், தலைக்கோல் அமைதி, மாதவி நடனம், கோவலன் மாதவியைச் சார்தல், கண்ணகியின், நற்பண்புகள்,

இவை கட்டுரையிற் பேசப்படுவன. மாதவி ஆடல், அழகு, இசை யாகிய முக்கலை வல்லாள். கலை நாட்டமுடைய கோவலன் அதன் பொருட்டு மாதவியைச் சார்த்தான். சிலம்பு ஓர் கலைக்கோயில். இவை கட்டுரைச் சுருக்கம்.

72) 'கவிதையும் நீதியும்' ந. சுப்புரெட்டியார். "அறிவிக்கு விருந்து" — பக்: 99. மு. ப. 1962. வி. உ. கழக வெளியீடு, சென்னை. 1. விலை : ரூ 2–50.

பொது நிலையில் தமிழ்க் கவிதைகள் உணர்த்தும் நீதிகள் சில இடம் பெறுவது வழிச் சிலம்பு கூறும் நீதியும் இடம் பெறு கின்றது. சிலம்பு மூன்று பொது நீதி கொண்டிலங்குகிறது ஆயின் இந்நீதிகளைக் கலையுணர்ச்சியுடன் கலந்து பின்னிவிட் டார்; நீதிகலைப் பண்போடு இணைந்து படிப்போர் உள்ளத்துத் தாமாகவே நிலைபெறவைக்கின்றார் இளங்கோ என்பர்.

73) 'கவுந்தியடிகள்' மு. சண்முகம். "அண்ணாமலைப் பல் கலைக்கழக வெளியீடு" (Journal) 1951 தொகுதி – 16 பக்: 153. 1954 "தொகுதி 19.

கோவலன் கண்ணகி துன்பத்தொடக்கத்தில் தொடர்பு கொண்ட கவுந்தி துன்பப் பெருக்கத் தவர்களோடில்லை. பெரும் பான்மை காப்பியங்கள் மதவுண்மை எடுத்துக் கூறவென்றே எழுந்தன. மதமும் வாழ்வும் பிரிக்கற்கரியது. சமண உண்மை களை மக்களிடை பரப்புவதே கவுந்தி ஏற்றுக்கொண்ட அலுவல். அதனைச் செவ்வே செய்கின்றார். சமண சமயம் அருட் கொள் கைகளை அடிப்படையாகக் கொண்டது. வழித்துன்பங் கூறுங் கால் சமணக் கொள்கைகட்கு முரண்பாடான (உயிர்க் கொலை முதலான) செய்யற்க என்றே கூறுகின்றார் மதுரை சென்று ஆகம நூற்களைக் கேட்டுத் தெளிந்து அறிவனை வணங்க வேண்டு மென்பதே அவர் மதுரை புறப்பட முதற்காரணமன்றிக் கோவலன் கண்ணகியற்குத் துணை செல்வதன்று. சாரணர் உரை கேட் டல், சமணப் பற்றினால் கவுந்திவுரை செய்தல், பிறமதத்தைப் பழித்தல், வெளிப்படையின்றிக் குறிப்பாக நீதிகளை விளக்ககதை களைக் கூறும் பொழுது கவுந்தியின் உளப்பாங்கு எல்லாம் சமண சமயப் பற்றின் வெளிப்பாடாக அமைகின்றது. பெண் காரண மாகத் துன்பம் என்பதை இந்துக் கடவுளர் கதை கொண்டும், ஒழுக்கம் காட்டத் (அடைக்கலச்சிறப்பு) தன் மதக் கதையையும் காட்டுகின்றார். இவண் பிறசமயப் பழிப்பும் குறிப்பில் தொனிக்

கிறது. சமணர்களாகிய கோவல கண்ணகிக்கு முக்கால உணர்வில்லாச் சமணத்துறைவியை வழித்தணையாக்கியது, கதைப் போக்கை மாறுபடாதமைத்தற்கு. கோவலனின் பரத்தமை வாழ்க்கை (மாதவியொடு) அறியார். இதனை மாடலானுல் (மதுரைக் காண்டத்து) அறிய, கோவலன் தன் கனவுரைத்து உண்மையை ஒப்ப, அதனல் ஏற்பட்ட வெறுப்புணர்ச்சியே — கோவலனிடத்துக் கொண்ட அன்பின் சிதைவே கனவுரைத்த கோவலற்கு ஆறுதல் கூருது விரைந்து மதுரை செல்கவெனப் பணித்தது. கோவலன் பகலில் இளைப்பாறி இரவில் நடப்போம் என்று கூறிய நாளுக்கு முந்திய இரவு கனவு கண்டிருக்க வேண்டும். மனையறம் படுத்த காதைக்குப்பின், கொலைக்களக்காதை இல்லறம், அவன் பாராட்டு இவை உண்மையான கோவலனைக் காட்டுகிறது. வழிநடையில் அவன் 'தனிமை' காட்டுவது அவனின் துன்ப மிகுதியைக் காட்டும். கவுந்தி படைப்பும் காவியத்துப் பெறும் இடமும்,அது போதுள்ள கதைத்தலைவன் மன இயல்பும் கட்டுரைக்கண் நன்கு விளக்கம் பெறுகின்றது.

74) 'கவுந்தியடிகள்' வித்துவான். ஆ. சிவலிங்கனர். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு : 29. பரல் : 3. பக் : 113.

கவுந்தியடிகள் துறவிக்குரிய முழு இலக்கணம் உடையவர் அல்லர். நல்லறிவு, நல்லொழுக்கம் உடையவர். 1. கடவுள் கூறியன வற்றில் ஐயம் கொளலின்றி நம்புதல். 2. காமநுகர்ச்சி விருப்பில்லாமை. 3 நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் உடையாரிடத்து உடல் மாசு கண்டால் அருவருப் படையாதிருத்தல். 4. பிறசமயத்தினை உண்மை என்று மயங்காமை. 5. பிறர் குற்றங்களை வெளிப்படுத்தாது மறைத்தல். 6. அறத்தின் வழுவியவரை மீண்டும் அதில் நிறுத்துதல். 7. அறத்தின் நின்றூரை விரும்புதல். 8. அறத்தின் பெருமையினை உரைத்தல், ஆகிய நற்காட்சி எட்டனில் 5—வது குணம் கவுந்தியிடம் இல்லையாகலின் வம்பப் பரத்தை யரைச் சபித்து விடுகின்றூர். இவ்வாறு சபித்தது கவுந்தியைச் சின தருமத்திற்குத் தகுதியற்றவராக்

கியது' சைனமுனிவர், துறவிகள் சபித்ததாக எங்கும் காண முடியாது.

75) 'கவுந்தியடிகள்' மது. ச. விமலானந்தம். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு : 34. பரல் 7,8,9, பக் : 321, 381, 443.

காப்பியத்தில் கவுந்தி தோன்றுவது ஒரே ஒரு முறை நுழையுமிடம் நாடுகாண்காதை நீங்குமிடம் அடைக்கலக்காதை பேசுமிடங்கள் பதினொன்று இவரின் தவ வலிமை, சாரணர்க்கண்டு பணியும் பெருமை, உயர்ந்த உள்ளம், உயரிய நோக்கம், இரக்க ஏக்கவுணர்வு, கண்ணகி பாற்கொண்ட அன்புரிமையும் அருள் உறவும், சமயப்பற்று, எண்ணித் துணியும் திறம் முதலான பேசப் படுகின்றன. 'கவுந்தியின்றிக் கதை நடக்கும்; கவுந்தி படைப்புக் கட்டுக்கதை; சமயப் பிரச்சாரம் செய்யவே கவுந்தி படைக்கப் பட்டுள்ளார்; என்னுங் கருத்து ஆராயப்பட்டு இவர் தம் படைப்பு இன்றியமையாதது; காப்பிய அவலச்சுவையை மிகுதிப்படுத்த இவர் படைப்பு பெருந்துணை செய்கிறது. காப்பிய ஆசிரியரின் கைவண்ணம் இதனால் வெளிப்படுகின்றது. இவை கட்டுரை தரும் செய்திகள்.

76) 'கவுந்தியடிகள் ஒரு கற்பனைப் படைப்பு' வெ. கந்தசாமி. "வே. வ. இராமசாமி பாராட்டு மலர்" — பக் : 146. 1964. விருதுநகர்.

கவுந்தியடிகள் சமயக்கொள்கை பரப்புதற்காக வரவில்லை. அவர் சமயம் கற்பிக்க முழுநிலை எய்தியவரு மன்று. சமண சமயம் பரப்ப இவரைப் படைத்திருப்பின் மிகச் சிறந்தவராகப் படைத்திருப்பார். கண்ணகி சிறப்பை வெளிப்படுத்தவே கவுந்தியைப் படைத்தார். கவுந்தி சிறு குற்றங்களையும் பொறுக்கும் மனமுடையவர் அல்லர். கதைச் சிறப்புக்காகப் படைக்கப் பட்டுள்ளார். கவுந்தி ஒரு கிளைக்கதை; கற்பனைப்படைப்பு; முதற் கதையொடு பொருந்திச் சிறக்கின்றது. இவை கட்டுரையார் துணிபுகள்.

77) 'கற்பரசி கண்ணகி' வே. அண்ணாமலை. "உலகத் தமிழ் அறிஞர்"—பக்: 13. மு. ப. 1970. ம. ப. 1971. அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை-4. விலை ரூ. 1

1968 சனவரி 3-ம் நாள் நடந்த உலகத் தமிழ் மாநாட்டை ஒட்டிய 'கண்ணகி சிலை திறப்பு விழா' குறித்துச் சிலை நின்ற கண்ணகி வரலாறு எழுதப்படுகின்றது.

78) 'கற்பின் கொழுந்து' செ. ரெ. இராமசாமிப்பிள்ளை "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 31 பரல் 2 பக்: 85

கற்பென்பது கற்றல் எனப் பொருள்படும். கற்றல் ஈண்டு ஏட்டுக் கல்வி கற்றலன்று. களவொழுக்கத்தில் தலைநின்று கன்றிய காதலர்களாகிய ஆடவர், பெண்டிர் இருவேரும் கணவன் மனைவியராகி, இல்லறக் கடமை பூண்டு, விருந்து புறந்தந்து அருந்தவர்ப் பேணி, எல்லோரிடத்தும் அன்புடையவராக வாழும் நெறியாம். காதற்பிணைப்பின்றி இருமுது குரவரும் கூட்டுவிக்கக் கூடிய கணவன் மனைவியர்களே கோவலனும் கண்ணகியும். கண்ணகியின் வாழ்க்கை அடுத்துப் பேசப்படுகின்றது.

79) 'கற்பின் தெய்வம்' வித்துவான் கா. பொ. இரத்தினம் "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 26 பரல் 6 பக்: 283

இன்றிருப்பதுபோல் இல்லறமும் துறவறமும் ஒன்றுக்கொன்று மாறாகத் தமிழ்நாட்டில் அன்றிருக்கவில்லை. இரண்டும் சீரிய வாழ்வின் இரு பகுதிகளாகவே இருந்தன. பெண்களைத் தெய்வப்பிறவிகளாக்குவது கற்பின் பெருநலமே. கற்பரசியைத் தெய்வமாகப் போற்றும் தனிப் பெருமை தமிழினத்திற்கே யுரியது. பிறர் நெஞ்சு புகாத பெருங்கற்பு தமிழ்நாட்டிலேயுள்ள காவியங்களுள் கண்ணகியிடத்தே தான் காணப்படுகின்றது. 'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை'; 'பெண்டிர்க்கழகு எதிர் பேசாதிருத்தல்' என்னும் இலக்கண வழி வாழ்வு கண்ணகியது. கண்டார் இகழ்வனவற்றைத் தன் கணவன் செய்திடினும் அவனை இகழாத பேரன்புதான் கற்புடைப்பெண்டிரின் விசேட இயல்பு. கண்ணகி உலகிற்கு ஒளி கொடுக்கும் ஒரு திருமாமணி; தமிழின் தவக்கொழுந்து. என்பனபோன்ற கண்ணகி கற்பின் திறம், கற்பின் இலக்கணம் பேசுகின்றது கட்டுரை.

80) 'கற்பு (நாடகம்)' கி. ஆ. பெ. விசுவநாதம். "தமிழ்ச் செல்வம்"—பக்: 104 மு. ப. 1955. 5-ம் ப. 1968. பாரி நிலையம், சென்னை-1 விலை ரூ: 2-50

ஆய்ச்சியர் குரவையில் கண்ணகிக்குக் கணவன் கொலைப் பட்ட செய்தி எட்டுதல், அவள் நிலை, கண்ட ஊரவர் நிலை, கண்ணகி அவலம், கோவலற் காண்டல், அரண்மனையிற் கண்ணகி வழக்கில் வெல்லல், குன்றக் குரவை நிகழ்ச்சி, செங்குட்டுவற்கு மலைவாணர் செய்தி, சாத்தன் உரை, இமயப் படை எடுப்பு,

போர்க்கள நிகழ்ச்சிகள் ஆகியன ஒன்பது காட்சிகளில் நாடக முறையில் பேசப்படுகின்றன.

81) 'கற்புநிலை' இளவழகனார். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 19; பரல் 11, 12 பக்: 505 & 553

கற்பென்பது உயிர்ப் பண்புகளின் ஆழ்ந்த தோய்வுநிலையாகிய ஒருயிர்க்கு ஓருயிர் என்னும் வரைவு மாட்சியின் இயற்கை விளக்கத்தில் நிழலாடுகின்ற தெய்வப் பண்பாகும்; அது மக்கட் பண்போடு ஒன்றுவதன்றாய் அதனின் மேம்பட்டு மணங்கமழ்வதாகும். கற்பென்னுந் தமிழ்ச் சொல் மாந்தர்தம் உணர்வு நுட்பங்களைக் கல்லிச்சென்று ஆற்றல் வாய்ந்த தெய்வ அருள் நிலையினை எய்தி நிற்றல் என்னும் அரிய கருத்தை உணர்த்தா நிற்கும். கோப்பெருந்தேவியின் உயிரும் அவள் கணவன் உயிரும் ஒன்றுக்கொன்று உரிமையுடையனவாய் இயற்கைக் கூட்டமுற்று உயிர்ப் பண்புகளில் சிறந்து விளங்கியிருந்தன. கண்ணகியின் உயிர் சிறந்ததொன்றாயினும் கோவலனது உயிர் அதனோடு ஒத்ததன்றாய்' அதனால் இயற்கைக்கூட்டமுறாதுபோக அவ்விருவரின் பெற்றோரே அவர் தம்மைச் செயற்கையாகப் பிணைத்து வைத்தமையின், இருவர் உயிர்ப் பண்புகளும் அத்துணைச் சிறந்ததற்கியலாது மங்கின. கோவலன் உயிரும் மாதவி உயிரும் இவ்விரு நிலைகளினும் தாழ்ந்ததோர் ஆற்றான் பரத்தமை நிலையில் தொடர்புற்றனவாதலின் மாதவியின் உயிர் தனது நல்லியல் நிலையால் மூன்றுவது வகையிலாயினும் நின்று கழிந்தது. ஆய்வு நன்றமையினும் உயிர்த்தொடர்பைப் புறநிலையமைப்பில் பகுத்து அவ்வழி இது சிறப்பு, இது சிறப்பின்மையுடையது எனக் கொள்ளல் பொருத்தமுடையதன்று.

82) 'கதைத்திறமும் இளங்கோ கலைத்திறமும்' பி. சௌரிராசன். "ஆய்வுக் கோவை" — பக்: 361. இ. ப. க. த. மன்றம்- 3-வது கருத்தரங்கு. 1971–அண்ணாமலைப் பல்கலைக்கழகச் சார்பு வெளியீடு.

காவியத்தை நடத்திச்செல்லக் கனவை நுட்பமாகப் பயன்படுத்துகின்றனர் இலக்கியப் புலவர்கள். சூலியஸ் சீசரில் - கலிபூர்னியா கனவு, இராமாயணத்தில் திரிசடைகனவு, துறக்க நீக்கத்தில் ஈவ்கனவு, இவை பின் நிகழ்வை முன்கூட்டி எதிர் பார்க்க வைக்கின்றது கண்ணகி கனவும் அஃதே. வழக்குரை காதையில் கண்ணகி என்காற் சிலம்பு மணியுடை அரியே என

நுட்பமாக—தெளிவாக வழக்குரைத்தது அவள் கனவின் விளை வாம். இளங்கோ கனத்திறத்தைக் காவியத் திறமாகக் கொண்டார்.

83) 'காப்பியங்கள்' அ. மு. பரமசிவானந்தம். "கவிதையும் வாழ்க்கையும்" — பக் : 412. மு. ப. 1963. தமிழ்க்கலைப் பதிப்பகம் சென்னை–30.

கட்டுரை, சிலம்பு, மணிமேகலை, சிந்தாமணி பற்றிப் பேசுகின்றது. பொதுவான சிலம்பின் காப்பியச் சிறப்பு, கண்ணகி கதை பேசப்படுகின்றது. இளங்கோ சமயச்சார்பற்றவர். சிலம்பு மக்கள் வாழ்வொடு இணைந்தமையால் பிறகாப்பியங்களைவிடச் சிறப்புற்று வாழ்கின்றது என்பர்.

84. 'காப்பிய ஓட்டத்திலே இளங்கோவின் கற்பனை ஒட்பம்' செ. வைத்திலிங்கன், "செந்தமிழ்ச் செல்வி". சிலம்பு : 45 பரல் : 10 : பக் : 528.

இளங்கோவின் கற்பனை ஒட்பம், 'அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றாதல்' நோக்கில், உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்தும் நோக்கில், ஊழ்வினை உருந்து வந்தூட்டும் நோக்கில், இயற்கை இறந்த நிகழ்ச்சியைக் காப்பியத்தொடு இணைக்கும் நோக்கில்—சிறக்கும் தன்மை எடுத்துக் காட்டப் படுகின்றது.

85. 'காப்பிய நிறைவு விழாவும் நீலகேசி உரை வெளியீட்டு விழாவும்' ம. பொ. சிவஞானம் சொற்பொழிவு "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 39, பரல்: 5 பக்: 205.

இளங்கோ நடனக் கலையை வெறுக்கவில்லை. ஆனால் எச்சரிக்கிறார். கற்பு வேறு; ஒழுக்கம் வேறு. கண்ணகி, கோப்பெருந்தேவி கற்பு மாதர்; மாதவி ஒழுக்கமுடைய நங்கை. காப்பியத்திற்கு, ஈராயிரம் ஆண்டுகட்கு முன் இளங்கோ ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டார். சுவையை அடிப்படையாகக் கொண்டார் இல்லை. பரத்தை ஒழிப்பில் இளங்கோ, சாத்தனார் ஒன்றுபடுகின்றனர். என்பர்,

86) 'காப்பிய நோக்குகள்' டாக்டர். தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், "நீங்களும் சுவையுங்கள்" — பக் : 89. மு. ப. 1954. வசந்தா பதிப்பகம்; சென்னை — 5. விலை ரூ. 3.50

காப்பிய இலக்கணம், குறிக்கோள், மேலை கீழை நாட்டுக் காப்பிய அமைப்பு முறை, தமிழ்க் காப்பியங்களின் அடிப்படை

அறம் பொருள், இன்பம், வீடு ஆகியவற்றைப் பெண்ணின் பெருமையால்—பெண் வளர்க்க வளர்வதாய் அமைகின்றதென் பன சிலம்பு. கம்பராமாயணங் கொண்டு விளக்கப்படுகின்றன. பொதுமக்கள் கதையொன்று காப்பியமாகின்ற புதுமையைத் தமிழ் நாட்டில்தான் காண்கின்றோம். மனிதனைப் பிறந்தவன் தன்னுடைய முயற்சியினால், கடவுள் நிலையை அடையக்கூடு மெனச் சைனப் பெரியோர்களை உள்ளிட்டோர் கூறிவந்துள் ளனர். ஒரு பெண்ணும் இவ்வாறு கடவுளாய் உலகெலாம் போற்ற உயரக்கூடும் என்ற உண்மையைக் காப்பியமாகக் காட்டுவதே சிலப்பதிகாரமாம்.

87) காப்பிய மகள் மாதவி' இரா. சக்திதேவி. "செந்தமிழ்" தொகுதி 66: பகுதி: 2, பக்: 1.

மாதவி காப்பியத் துணைத்தலைவி. சமுதாயச் சீர்திருத்தம் (காப்பியத்தின் பெருநோக்கங்களில் ஒன்றான) மாதவி படைப்பில் மாண்புறுகிறது. எல்லோருக்கும் பொதுவுடைமையான கலை வாழ்வில் தன்னலம் குறுக்கிடின், அது காதல் வடிவில் இருந் தாலும் கலைக்கண் நெஞ்சம் செலுத்தக்கூடிய ஒருமைப்பாடு மறைந்து, கலைகொண்டோரின் வாழ்வு தோல்வியில்தான் முடிய இயலும். மாதவி தோன்றிய மரபின் தோற்றமே அவள் கலை வாழ்வின் ஒருமை நெஞ்சங் கொள்ளவேண்டிய நிலைக்கு எச் சரிக்கை செய்வதாக அமைகின்றது. மாதவியின் கலை வாழ்கை காதல் வாழ்க்கை மாதவி பாடிய கானற்பாணி, மாதவியின் ஊடலும் துன்ப வாழ்க்கையும்பற்றிக் கட்டுரை பேசுகின்றது. கலை மாதை விலை பேசும் அக்காலக் கலைச்செல்வியின் அகவாழ் வின் இழிநிலை கண்டு கட்டுரையார் இரங்குகின்றார்,

88) 'காவியச் சோலையில் இளங்கோவின் இதயம்' டாக்டர். துரை அரங்க சாமி. மொ. அ. "தென்றலிலே தேன்மொழி" பக்: 9. மு. ப, 1953: பொன்முடி நூலகம் சென்னை—1

விலை: ரூ: 2.50

சிலப்பதிகாரக் காவியத்தைச் சோலையாக உருவகஞ் செய் கின்றார். சமணத்துறவி கவுந்தியடிகள் கண்ணகியிடம் சிறு தவறுகூடக் காணமுடியாது; 'கற்புக் கடம் பூண்ட இத்தெய்வம்' என்று தம் சமண சமயச் சிறப்பையும் மறந்து பாராட்டிவிடு கின்றார். சமய வெறியை அறவே விடுத்து, பத்தினி வழிபாட் டில் ஒன்றின், பிறவிப் பயன் அடையலாம் என்றும், கோவலன்

செழியனைப் படைத்து எளிதில் உணர்ச்சி வயப்படுவார் அடையும் நிலை இது எனக் காட்டவும், சமூக ஊழல் ஒழிக்கவும், நாடு, குலம், சமயம், இனம், வழிபாடு இவற்றின் ஒருமை நெறிகாட்டவும், இளங்கோ இக்காவியம் பாடினர் என்பது இக்கட்டுரையார் துணிபு.

89) 'காவியத்தில் கனவு' மா. எழில் முதல்வன். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 39. பரல் 10. பக். 449

காவியத்திற்குக் கனவு இன்றியமையாதது. கனவு பற்றிய பல்லோர் கருத்து, கனு நூற்கருத்துக்கள் காட்டப்படுகின்றன. சிலம்புக் கனவுகளில் கண்ணகி கனவு தெளிந்த நிலையிலும், கோவலன் கனவு குழம்பிய நிலையிலும் இருத்தல் அவர்தம் பண்பைக் காட்டுவதாம். விதியாற்றல் விளக்கவே அடிகள் கோவலன் கனவைப் படைத்தார். கோவலன், கண்ணகி கனவைவிட பாண்டியன் தேவி கனவு படிப்போரை மெய்சிலிர்க்கச் செய்கிறது. காவியப் புலவர்கள் கதைப் போக்கைச் சுட்டிக் காட்டவும், ஏற்ற சூழ்நிலையை உருவாக்கிக்காட்டவும். கனவுகளைப் பயன்படுத்திக்கொள்கிறுர்கள். சிலம்பின் கனவுகள் பின் நிகழ்வு சுட்டுவன. ஆயின் கோமரின் 'இலியதம்' காவிய 'அகமம்னன்' கனவில் அவன் 'தான் போரில் வெற்றிபெறுவதாகக்' கண்ட கனு பின்னர் நடைபெறுது மாறுபாடாகவும் அமைகின்றது. எனவே கனவைப் பயன்படுத்தல் ஓர் காவிய உத்தி அல்லது காவிய அணி என்பது ஆசிரியர் முடிபு.

90) 'காவிரிப்பூம்பட்டினத்துக் கலைவிழா' புலவர் ப. அரங்கசாமி. "பண்பட்ட வாழ்க்கை"—பக். 20, மு. ப. 1963 வி. உ, மெர்க்குரி புத்தக நிலையம், கோவை-1 விலை ரூ. 1-75

இந்திர விழா முதன் முதல் எடுத்த வேந்தன் தூங்கெயில் எறிந்த தொடித் தோட் செம்பியன். விழா நிகழ்ச்சி, விழா அறிவிப்பு, விழாக் கொண்டாட்டம் இவை சிலம்பு, மணிமேகலை வழிக் காட்டப்பெறும். இவ்விழா பற்றிய செய்தி பதிற். 3-ம் பத்தில் குறிக்கப்படுகின்றது. இந்திர விழா காவிரி பூம்பட்டினக் கலைவிழாவாக விளங்கிற்று என்பது ஆசிரியர் துணிபு.

91) 'கானல் வரி' வித்துவான் அ. சிவலிங்கனர். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 29. பரல் 2, 10 பக். 87 & 449.

கோவலனுக்குக் கடலாடு காதையில் ஊடல் குறிப்பு இருப்பினும், கானல் வரி பாடத் தொடங்குகையில் அவனிடம் அக்குறிப்பில்லே. மாதவி ஊடற் குறிப்புடன் பாடியது அவன் தன்னைத் தவருகவே புரிந்துகொள்ளவேண்டும் என்ற எண்ணத்துடனேயே. அவள் பாட்டில் மாயப் பொய் கலந்திருந்தது. அதனுல் தான் தன்னைப் போலவே அகச் சுவை ததும்பப் பாடினுன் எனக் கொள்ளாமல் வேறு குறிப்பிற் பாடினுன் எனக் கொண்டாள். கோவலன் தான் ஒன்றின் மேல் மனம் வைத்துப் பாடினுலும் மாதவியும் அவ்வாறு பாடுவது குலமகளிர் ஒழுக்க மன்று. அது தவறுடையதே. இப் பண்பமையக் காரணம் மாதவி பிறந்த குலமே.

92) 'கானல் வரி' டாக்டர் சி. பாலசுப்பிரமணியன். "கட்டுரை வளம்"—பக்: 88 மு. ப. 1966. இ. ப. 1968. வி. உ. பாரி நிலேயம், சென்னை–1 விலே ரூ: 2–75

யாழிசை மேல் ஊழ்வினை வந்துறுத்தி கோவலன் மாதவி பிரியக் காரணம் ஆயது என்றுரைக்கும் கருத்து பொருந்துவதன்று. இந்திர விழா ஊர் எடுத்த காதை, கடலாடு காதைகளில் கோவலன் உள்ளத்துக் கண்ணகி நினைவும், தன் வறுமையும் உறுத்திக்கொண்டிருந்தது. இந்நிலேயில் அவன் வரிப்பாடல் பெருங் கற்புத் திறன் பாடுவதோடு, மனையறம் படுத்த காதையிற் பேசும் உலவாக் கட்டுரையின் சாயலாகவும் அமைகிறது. கண்ணகியை விலக்கித் தன்பாற் சார்ந்த கோவலன் பாடலில் தன்னை விலக்கும் சாயல் இருப்பது கண்ட மாதவி புலவியூட்டியவனைத் தன்வயமாக்கப் பாடுகின்ருள். கோவலன் பண்படா மனத்தனுகலின் அவள் ஊட்ட நினைந்த புலவி, தீராப் பிரிவாகப் பேருருவம் எடுத்துவிடுகின்றது. கலேயே கூட்டிக் கலேயே பிரிக்கின்றது. கோவலனிடம் சீர்தூக்கும் பண்பு இல்லே. மாதவியிடம் பெருங் கற்பிற்குரிய பொறுமையில்லே. முடிவு கலேக்குத் தோல்வியாகவும், வாழ்விற்கு வெற்றியாகவும் அமைகின்றது. கண்ணகி பெருங்கற்பே இறுதியில் வென்றது என்பதைக் கானல் வரி விளக்குகின்றது—என்பது கட்டுரையார் முடிபு.

93) 'கானல் வரி-ஒரு திருப்பு மையம்' டாக்டர் ச. வே. சுப்பிரமணியன். "கேரள தமிழ்த்துறை ஆண்டு வெளியீடு" (Journal) பக்: 60. 1972. தொகுதி-3. கேரள பல்கலைக்கழகம்.

கானல் வரி-கதை நடக்க, மூன்று நீதிகளும் வெளிப்பட ஓர் திருப்பு மையம். கண்ணகியிடம் மிகுதியாக ஊடும் தன்மையில்லை. உரிமை பாராட்டும் பண்பும் இல்லை. அது அவளுக்குத் தேவையில்லை. மாதவியின் ஊடல் மிகுதியால் தான் பிரிவு ஏற்படுகின்றது. பழங்காலத்தில் கலைப்பெண்ணாகிய பொது மடந்தைக்குக் கற்பில்லை. இதனை மாற்றிப் படைக்கின்றார் இளங்கோ. கானல்வரி அடுத்தடுத்து நிகழும் காப்பிய நிகழ்ச்சிகளின் முதல் இயக்கம். இதுவே கதையின் திருப்பு மையம் கானல் வரிப் பாடல்களின் விளக்கம் சில பேசப்படுகின்றது.

94) 'குடிமக்கள் காப்பியம்' டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார். "நீங்களும் சுவையுங்கள்" — பக்: 31. மு. ப. 1954 வசந்தா பதிப்பகம், சென்னை-5 விலை ரூ. 3-50

கதை என்பின் உலகம் முழுவதிலும் முடிமக்கள் கதைதான். கோமர் இலியட், வடமொழி இராமாயணம், வர்ஜில் – ஈனியட், முதலான எங்நாட்டுப் பழங் காப்பியங்களை நோக்கினும் முடிமக்கள், வீரர் வரலாறே காப்பியமாகின்றது. தமிழ் ஆதிகாவியமான சிலம்பு மக்களில் ஒரு பெண்ணின் கதை கோவலன் ஒரு குடிமகன். மாதவி ஒரு பரத்தை. இவர்களின் சிக்கல் வரலாறே சிலப்பதிகாரம். சங்க காலம் புரட்சிக்காலம் அதில் இளங்கோ பெரும் புரட்சி செய்துள்ளார். காதலும், அழுகையும் வீரமும் காப்பியச் சுவை. இதனைக் குடிமக்கள் வாழ்வில் காட்டுகின்றார். இன்றைய உலகம்போற்றும் வீரம் காந்தியடிகளின் வீரம். இதனை 2000 ஆண்டுகட்கு முன்னே கோவலனிடம் காணுகின்றார். இழிகுலப் பரத்தை மாதவி கற்பரசியாகி துறவறத்தின் முடிமணியாகச் சிறக்கின்றாள்.

95) 'குணவாயிற் கோட்டம் வாழ்க' புலவர் செந்துறை முத்து, "சேரர் இலக்கியச் செல்வம்"—பக்: 103, மு. ப. 1961: வானதி பதிப்பகம், சென்னை—17. விலை. ரூ. 3. 50.

குணவாயிற் கோட்டத்தடிகள் உதியஞ்சேரல் மரபினர். சேரர் செல்லாச் செல்நெறிச் சென்றவர். போரும் வீரமும் காணார். நிமித்திகன் உரைத்த விதிமுறையை மாற்றி இருவிதப் புரட்சி செய்துள்ளார். கருவிலே திருவுற்ற பெற்றியினர். முத்தமிழை

வளமிக வளர்த்தவர். இளங்கோவை உயர்நிலைக்குச் செல்ல அடி கோலியது குணவாயிற் கோட்டமே - என்பர்.

96. 'குலமகளும் நிலமகளும்' செ. வைத்திலிங்கன். ஆய்வுக் கோவை—பக் : 86. இ: ப. க. த. மன்றம் 3—வது கருத்தரங்கு, 1971 அண்ணமலைப் பல்கலைக் கழகச்சார்பு வெளியீடு.

கண்ணகி துன்பியல், அவளை இன்ப மாளிகைக்கு இட்டுச் செல்ல ஊழ்வினை மறுத்துக் கொண்டே செல்கிறது. மண்மகள் அவள் துன்பங்கண்டு அயாவுயிர்க்கின்றாள். 'வண்ணச் சீரடி மண்மகள் அறிந்திலன்' என்றது இளங்கோவின் கண்களுக்குக் கண்ணகியின் தெய்வத்தன்மை மின்னல் வெட்டுப்போல தோன்றிக்கொண்டே இருந்தமையால், தெய்வத்தின் திருவடிகள் நிலத்தில் படியா 'எனுங் கொள்கைக் கேற்ப, அவள் சீறடிகளும் நிலத்திற்படியா என்றார். கண்ணகியைப் பலவிடங்களிலும் தெய்வத் திருவுருவாகவே அடிகள் காட்டிச் செல்கின்றார். நிலமகள் தன்னகத்தே, தன்னல் குலமகள் கண்ணகிக்குவாழ்வின்பம்கொடுக்க முடியாததை உணர்ந்து அவளை விண்ணகம அனுப்பி வாழ்ச் செய்கின்றாள்.

97) 'குறள் வழி இளங்கோ' டாக்டர். தெ. பொ. மீனாட்சி சுந்தரனார். ''நீங்களும் சுவையுங்கள்" — பக் : 23. மு. ப. 1954. வசந்தா பதிப்பகம், சென்னை – 5. விலை : ரு 3-50.

அரசியல் பிழைத்தோர்க்கறங் கூற்றமாதல், உரைசால் பத்தினியை உயர்த்தோர் ஏத்தல், ஊழ்வினை உறுத்து வந்தூட்டல் குறட் கருத்தொடு ஒப்பு நோக்கப் படுகின்றது. 'தெய்வந்தொழா அள்' சிலம்பு வெண்பாவும் குறளும் ஒப்புமையுடையது. சில சொற்பதங்கட்டு அடியார்க்கு நல்லார், குறள் தொடர் நினைந்து உரை வகுக்கின்றார். கண்ணகிவாழ்வு குறள் வழியமைகின்றது. 'குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயும் காத்தலரிது 'என்பதற்கிணங்க கண்ணகி சீற்றம் அமைகின்றது. தீமையைப் பொறுக்கும், ஒறுக்கும், மறக்கும் ஆற்றல் ஆகிய முந்நெறியில் காப்பியம் அமைகிறது. குறள்வழி இளங்கோ காப்பியம் பாடியுள்ளார் என்பது கட்டுரை தரும் முடிபு.

98) 'குறளும் சிலம்பும்' ச. அகத்தியலிங்கம். "செந்தமிழ்ச் செல்வி" : சிலம்பு 53 : பரல் : 6. பக் : 275.

இளங்கோ பிறப்பால் மட்டுமன்றி எண்ணத்திலும், இதய ஆழத்திலும், காப்பியச் சுவையை நம் கருத்தில் பதிய வைப்பதி

லும் மன்னராகவே திகழ்பவர். பெண்மைக்கு ஏற்றமும், தோற்றமும், பீடும், பெருமையும், கண்டவர் இருவர். ஒருவர் உண்மையை இலக்கணமாகக் கூறிச் சென்றார். இன்னொருவர் அதன் இலக்கியமாகக் கண்ணகி காப்பியத்தைப் பாடினர். 'தற்காத்துத்தற்கொண்டான்பேணி' குறட்கு இலக்கியம் கண்ணகிவாழ்வு. வள்ளுவர் கூறுகின்ற மூன்ருவது பண்பே ('தகைசான்ற சொற்காத்தல்') கண்ணகியின் வெற்றிக்குக் காரணம். இதுவே கண்ணகியை ஒருமா மணியாய் உலகிற் கோங்கிய திருமாமணியாக்கியது.

99) 'கொலைப்பட்ட கோகிலனும் வலைப்பட்ட காவலனும்' எஸ். கணபதி. "செந்தமிழ்ச் செல்வி": சிலம்பு : 9 பரல் : 2. பக் :73

கன்றிய சிலம்பு கையதாகின், அவனைக் கொல்ல அச்சிலம்பொடு ஈங்குக் கொணர்கவெனக் கூறக் கருதியவன் வினை விளைகின்ற காலமாகலான் ஒன்றும் தேருனாகிக் 'கொன்றச் சிலம்பு' கொணர்க என்ருன். கோவலனும் கொல்லப்பட்டான். காவலனும் வினை வலைப்பட்டான். வினைவலைப்பட்ட காவலன் கண்ணகியைக் கண்டஞான்று தன் அறநெறியைத் தோற்ருன். அவன் வழக்குரைத்த ஞான்று தன் உயிரையும் தோற்ருன். செங்கோல் வளைய உயிர்வாழார் பாண்டியர் என்ற தங்கள் அரியபெரிய சீரிய குறிக்கோளை உலகம் தெள்ளிதின் அறியுமாறு எடுத்துக் காட்டினன்.

100) 'கோசிகமாணி' ஆ. சிவலிங்கனர். 1961. கழகத்தின் 1008—வது வெளியீட்டுவிழா மலர்—பக் : 92.

கோசிகமாணி கோசிக குலத்தன். மாணி - மாணவன் திரிபு. திருமணமாகாதவன். குலப்பெருமைகாவாது மாதவி கடைவாயிற் கிடந்தான். தீயசெயல்களை விரும்பியவன். மாதவி குடும்ப ஏவலராக இருந்தான். மாதவி தீதிலள் எனக்காட்டப் புகுத்திய படைப்பு கோசிகனது. இவனை இளங்கோ அறிவுள்ளவனாகக் காட்டுகின்ருர். கட்புல மயக்கம் உடையன்; முதியவன்; சிலம்பு காவியத்திற்கு இன்றியமையாத படைப்பு. கோவலன் உணரவேண்டிய இன்றியமையாத பகுதியை நிறைவு செய்த பெருமை கோசிகனுக்குரியது.

101) 'கோப்பெருந் தேவி' த. நடராஜ சர்மா. "ஆய்வுமலர்" பக்: 110 1972. கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைப் பழைய மாணவர் மன்ற ஆண்டு வெளியீடு. வி. உ. செயகுமாரி ஸ்டோர்ஸ் நாகர்கோவில். விலை ரூ. 10-00

கோப்பெருந்தேவி ஊடல் அவளின் பெண்மை உள்ளத்தைக் காட்டும். சிலம்பில் இரு மகளிர் ஊடல் இரு அவல முடிவை விளைவிக்கின்றது. கண்ணகியின் மறக் கற்பிற்கு அவள் வஞ்சம் தீர்த்துக்கொண்ட முறையும் நிலையும் பெருமை தரலாம். ஆனால் பெண்மையின் மேம்பாட்டிற்கு, மனைவியின் மாண்பிற்கு, திண்ணிய தலையாய கற்பின் தரத்திற்கு, தன்னிகரற்ற கோப்பெருந்தேவியே சான்றுவாள். உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர். உயர்ந்தோர்-வானவராயின்-சேரமா தேவி கருத்தினை ஒட்டிக் காண்கையில் வானவரால், உயர்ந்தோரால் ஏத்தத் தகும் பத்தினி கோப்பெருந்தேவியே என்பது வெளிப்படை. இவை கட்டுரை தரும் செய்திச் சுருக்கம்.

102) 'கோப்பெருந்தேவியார்' டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை "தமிழ்நாட்டு நவமணிகள்" — பக். 19. மு. ப. 1926. ஒற்றுமை ஆபீஸ், சென்னை. விலை ரூ. 1-00

சிலம்பில் வரும் கோப்பெருந்தேவி பற்றிய (பாண்டியன் தேவி) செய்தி குழந்தைக் கதையமைப்புடன் எடுத்துக்காட்டப்படுகின்றது.

103) 'கோவலன்' பீ. காஜா முகைதீன். "இளவேனில்"— பக்: 40. (கையெழுத்துப்பிரதி) 1971. தமிழ்த்துறை. கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம்.

மாடலன் கூறும் கோவலன் நற்பண்புகள், தன் குற்றத்திற்கிரங்கும் தன்மை, காட்டி, 'தன் குற்றம் உணர்பவன் முழு மனிதன்' என்பதுகொண்டு கோவலன் உயர்ந்தோன் ஆகின்றான் என்பர்.

104) 'கோவலனின் பாராட்டுரை' தெ. முருகசாமி. "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 40; பரல் 7. பக்: 325

மனையறம் படுத்த காதை, கொலைக்களக் காதை (84-9) கோவலன் பாராட்டுரைகள் விளக்கப்படுகின்றன. 'பொன்னே' என்றது 'பொன்' பிறந்த இடத்திற்குச் சிறப்பளிக்காது புகுந்த இடத்திற்குச் சிறப்பளிப்பதன்னப் பெண்ணும் அமைவதால்,

'கொடி' என்றது காற்றசைப்பினும் அசையாக் கொடிபோற் துன்பத்தால் தளராத நிலை (கண்ணகி) குறிக்கும். 'விளக்கு' என்றது கோவலன் உள்ள இருள் போக்கும் தன்மையள் என்றமையான். இவ்வாறு கோவலன் வாழ்த்துரை விளக்கம் கட்டுரை.

105) 'கோவலனும் மாதவியும்' கே. இலட்சுமணசாமி "ஆய்வுக் கோவை" — பக்: 350. இ. ப. க. த. மன்றம், 3-வது கருத்தரங்கு, 1971-அண்ணமலைப் பல்கலைக்கழகச் சார்பு வெளியீடு

கோவலன் கலையார்வலனல்லன். மாதவியை அடைந்தது கலையார்வத்தாலல்ல. காரணம் இந்திர விழாவில் மாதவி ஆடற் கோலமும், அணியுங் கண்டு ஊடுகின்றான். கோவலன் பிரியக் கண்ணகி குறைபாடு காரணமன்று; அவளிடம் குறையுமின்று. கோவலனிடம் பொன்னிருந்தது. அரசன் முதல் வணிகர் வரை மேற்கொள்ளும் பரத்தையர் ஒழுக்கம் இருந்தது. இவ்விரண்டுமே கோவலன் மாதவியை அடையக் காரணம் என்பர், கட்டுரையார்.

106) 'சங்கப் பாடலும் சிலப்பதிகாரமும்' டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார். 1961. "டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை வெள்ளிவிழா மலர்" — பக்: 211

சங்க இலக்கிய நோக்கில் சிலம்பு முப்பது தனிச் செய்யுள். கதையையுடையது காதை (அடியார்க்) காதை என்பதுபாட்டே. செய்யுள் உறுப்புக்களின் கோவை மாலையாம் (வஞ்சினமாலை, துன்பமாலை). துன்ப மாலை மயங்கிசைக் கொச்சகக்கலி. வஞ்சினமாலை கலிவெண்பாட்டு. மங்கல வாழ்த்து — மயங்கிசைக் கொச்சகக்கலி. கனாத்திறக் காதை கலிவெண்பாட்டு. வேட்டுவ வரி பஃறாழிசைக் கொச்சகக் கலி. ஆய்ச்சியர் குரவை மயங்கிசைக் கொச்சகக் கலி. ஊர்சூழ் வரி அயல்மயங்கிசைக் கொச்சகக் கலி. குன்றக் குரவை — கொச்சகக் கலி. வாழ்த்து, வழக்குரை காதைகள் கொச்சகக்கலி. *2, 3, 4, 5, 8, 10, 11. 13, 14, 15, 16, 22, 23, 25, 26, 27, 28, 30* எண்ணுள்ள காதைகள் நிலை மண்டில ஆசிரியப்பா. எனவே பாவகையில் ஒவ்வொரு காதையும் தனித் தனிச் செய்யுள். குன்றக்குரவை—தலைமகட்குத் தோழி வரைவு கூறும் கூற்று. வரந்தரு காதை ஒன்றே ஆசிரியர் கூற்று. சிலம்பின் காதை—கதையினை வற்புறுத்திச் செல்லும் தனி அத்தியாயங்கள் போலாது தனித்தனிப் பாடலாக

நின்று கதையைப் பற்றிய குறிப்பை இடை இடைக் கொண்டுள்ளன. நேரே ஆசிரியன் கதையைக் கூறுவது ஒரு முறை. கதையில் வரும் பாத்திரங்கள் தனித்தனியே தாமறிந்தன கூற, அவற்றைச் சேர்ப்பக் கதை உருவாகும்படிக் கூறிச் செல்லல் இன்னொருமுறை. அரங்கேற்று காதையில் சில அடிகளில் அமைந்த கதைப் பகுதி பின்னே செல்லச்செல்ல பல அடிகளாக விரிகின்றது. பின்னே போகப்போகக் கதையை நேரிடையாகக் கூறும் போக்கு சிலம்பில் வளர்கிறது. காப்பியத்தில் இயற்கைப் புனைந்துரை, புனலாட்டு முதலான இடம்பெறுவது (மிக நீண்ட அளவில்) காப்பியம் தனிநிலைச் செய்யுளாக அமைந்து வளர்ந்த சிலம்பால் எழுந்த மரபே காரணம். கட்டுரை நல்ல திறனாய்வுப் போக்குடையது.

107) 'சங்கம் மருவிய காலம்' வி. செல்வநாயகம். "தமிழ் இலக்கிய வரலாறு" மு. ப; 1951. 4-ம். ப. 1965. இலங்கா அச்சகம், 234, காங்கேசன் துறைவீதி. யாழ்ப்பாணம், இலங்கை.

சிலம்பு சங்கம் மருவிய காலநூல். ஐம்பெருங் காப்பியங்களில் காலத்தால் முந்தியது. தமிழ் நாட்டுக்கதை; இளங்கோ கால உண்மை நிகழ்ச்சியன்று. சங்ககாலத்து வழங்கிய (திருமாவுண்ணி) கதையைக் காவியமாகப் பாடியுள்ளார். முத்தமிழ்க் காப்பியம். முதலிரு காண்டங்களே தனிக் காவியமாய் அமையுந் தன்மையுடையன. இலங்கையில் பத்தினி வழிபாடு இன்று பெருமளவில் இருப்பது, இக்கதையில் மக்களுக்கு இருந்த ஈடுபாட்டினைக் காட்டும். சமயநிலை, சமுதாய நிலை, கலைநிலை, காட்டும் இலக்கியம் சிலம்பு. பல்வகைச் சுவையுடையது.

108) 'சங்கம் மருவிய காலம் — சிலப்பதிகாரம்' டாக்டர். சி. பாலசுப்பிரமணியன். "தமிழ் இலக்கிய வரலாறு"—பக் : 76: மு. ப. 1959. 4—ம். ப. 1964. பாரி நிலையம், சென்னை - 1. விலை : ரூ: 3—50.

சிலம்பு பற்றிய அறிந்த செய்திகள் காட்டப் படுகின்றன. சிலம்பு எழுந்த காரணம், நூலின் அமைப்பு, நூலின் சிறப்பு, நூலின் காலம்—பற்றிய செய்திகள் கட்டுரையடக்கம். நூலின் காலம் கி. பி. 2-ம் நூற்றாண்டு என்று சுட்டப் பெறுகின்றது.

109) 'சயந்தனும் தலைக்கோலும்' மு. வேங்கடசாமி. 1970. "இ. ப. க. த. மன்றம் 2-வது கருத்தரங்கு கட்டுரை".

நாடக அரங்கு வழிபடு 'தலைக்கோல்', செங்குட்டுவன் பகைப் புலத்து உய்த்து சென்றார் தாங்கிய 'தலைக்கோல்', சயந்தன் 'தலைக்கோல்' ஆன வரலாறு, தலைக்கோலின் இலக்கணம், அமரில் வென்ற மன்னன் பகையரசர் வெண்கொற்றக் குடைக் காம்பினைத் 'தலைக்கோலாய்க் கொள்ளும் மரபு, பகை மன்னர் காவற்காட்டு மூங்கில் மரத்தில் 'தலைக்கோல்' கொள்ளும் மரபு— இவை பேசப்படுகின்றன. 7–சாண் நீளமுள்ள இம்மூங்கிலை நன்னீராட்டித் தலைக்கோலாக நிறுவுதல் வேண்டும். இம்மூங்கில் அகத்தியர் சாபத்தால் முளைத்தது என்பர் பரத சேனாதிபதியார். தலைக்கோல் அரிவை, தலைக்கோல் ஆசான், கல்வெட்டில் பதியிலாளைத் 'தலைக்கோலி' எனக் குறித்துள்ளமை, இவையும் கட்டுரைக்கண் சுட்டப்படுவன.

110) 'சலம்புணர்க் கொள்கைச் சலமதி மாதவியா?' புலவர் கு. திருமேனி. "ஆய்வுக் கோவை"—பக். 307. இ. ப. க. த. மன்றம், 3-வது கருத்தரங்கு மலர். 1971. அண்ணாமலைப் பல்கலைக் கழகச் சார்பு வெளியீடு.

'சலம்புணர்க் கொள்கைச் சலதி' என்பது பொருந்தா. கண்ணகி தேவந்தியிடம் கோவலன் வருகை (கனவு) பற்றிப் புதிதாகப் பேசுதலால் பன்முறை வந்து கோவலன் பொருள் பெற்றான் எனக் கொள்ளல் சாலாது. இதற்கு 'வடுநீங்கு சிறப்பின் மனையகம் மறந்து' என்பதுஞ் சான்றாம். மாதவியும் யாண்டும் பொருட்பெண்டாக வாழ்ந்தாள் அல்லள். எனவே மாதவி சலம்புணர்க் கொள்கைச் சலதியல்லள். கோவலன் குலந்தருவான் பொருளை முதலீடாக்கி, கடற்கலஞ்செலுத்தி வணிகமியற்றி அப்பொருளால் அறம் செய்து வாழ்ந்த காலை மாதவியோடு தொடர்பு கொண்டு மனைமறந்திருப்பக் கடல் விளையாட்டில் மாதவியோடு ஊடிக் கூலமருகில் கலன் கவிழ்ந்த செய்தியறிந்து, பெற்றோர் தந்த குலமுதல் இழப்பையும், மனைவாழ்வையும் இழந்த அதிர்ச்சியை நினைந்து மனைவியிடம், கூறி ஆறுதல் பெறவே கூறினன் என்பது கட்டுரையார் துணிபு. கருத்து வேறுபாட்டிற்குரிய புதிய நோக்கம் உடையது கட்டுரை.

111) 'சில அழகிய இலக்கியக் கடிதங்கள்' தாமரைக்கண்ணி அம்மையார். "செந்தமிழ்ச் செல்வி". சிலம்பு 19; பரல் 12. பக். 561

ஓலை, முடங்கல், திருமுகம், இவற்றின் விளக்கம், சிலம்பில் மாதவியின் இரு கடிதம், சிந்தாமணி, 11–ம் திருமுறை – முதற் கண் வரும் திருமுகப் பாசுரம் பற்றிக் கட்டுரை அமையும். ந. மு. வேங்கடசாமி நாட்டாரின் 'முடங்கல்' கட்டுரைக்கும் இதற்கும் வேறுபாடு இருப்பதாகக் கூற முடியாது. 'மாதவி இரண்டாவது கடிதம் எழுதியதன் நோக்கம் தான் உள்ளன் புடன் காதலித்த கோவலனை மீண்டும் தன்னிடம் வரவழைத்துக் கொள்வதற்கே.' மாதவி கடிதத்தைத் தந்தை தாயர்க்கு அனுப்பியதன் நோக்கம், அவன் கண்ணகியோடு இருக்குங் காலத்து மாதவி கடிதத்தைத் தன்னிடம் வைத்துக் கொண்டிருப் பது முறையன்று என்பதால். இவ்விரு கருத்துத்தவிர ஏனைக் கட்டுரையமைப்பு முழுவதும் ந. மு. வே. வின் 'முடங்கல்' கட்டுரை அமைப்பே உடையது.

112) 'சிலப்பதிகார ஆராய்ச்சி' டி. என். அப்பனையங்கார். "செந்தமிழ்" தொகுதி: 21. பகுதி: 12. பக்: 565.
2 ,, 22. ,, 1. பக்: 17.

இந்நூல் சிலம்பு காரணமாக நிகழ்ச்சியைக் கூறும் கூற் றிற்கு நிலைக்களமாயிருத்தலின் சிலப்பதிகாரம் என்னும் பெயர்த்து அல்லதூம் சிலம்பின் ஆணையால் நடைபெறுகின்ற கதையைக் கூறுதலின் அப்பெயர்த் தாயிற்றெனினும் இழுக் காகாது. 'சிலம்பதிகாரம்' என்று (உலக வழக்குப் புணர்ச்சிச் சொல்) சொல்லாது சிலப்பதிகாரம் (செய்யுள் வழக்குப் புணர்ச் சிச் சொல்) என்றது புலமை வல்லார் விரும்புதலாகலின். நூல் உள்ளுறை (முந்நீதி) சிலம்பு காரணமாகப் பிறந்தன. சிலம்பு ஒன்றே கதைப் போக்கிற்கு இன்றியமையாத உறுப்பாயுதவி தன்னையணியும் பேறு தனக்களித்த தலைவியின் கற்பு மிக விளங் குமாறு செய்து, கதையை நிறைவேற்றுகின்றது. கோவலன் கண்ணகி கதை இச் சிலம்பை ஒழியச் செல்லாது. எனவே காப்பியத்திற்குச் சிலப்பதிகாரம்' என்ற பெயர்ப் பொருத்தம் சிறப்புடைத்தே என்பது கட்டுரையார் துணிபு.

113) 'சிலப்பதிகார ஆராய்ச்சி விளக்கம்' துடிசைக் கிழார். அ. சிதம்பரனுர். "செந்தமிழ்ச் செல்வி." சிலம்பு: 29. பரல்: 4. பக்: 161.

காப்பியம் என்ற சொல் 'காவியம்' என்ற வட சொல்லின் திரிபு அன்று. தமிழ்ச் சொல்லே. காப்பு+இயம்>காப்பியம். இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ் குறிக்கும். கி. மு 6000-க்கு முன் ஆரியர் நுழைதற்கு முன் 'காப்பியக்குடி' ஊர் சோணுட்டில் இருந்தது. காப்பியக்குடி, தொல்காப்பியர், காப்பியக்குடித் தொல்காப்பியர், வெள்ளூர்த் தொல்காப்பியர், காப்பியஞ் சேந்தனுர், காப்பியாற்றுக் காப்பியனுர். இவர் தம் பெயர்கள் தமிழ்ச் சொற்களே. முத்தமிழ் பாதுகாக்கும் குடிகாப்பியக் குடியாம். சிலம்பு, மணிமேகலே நடந்த கதைகளே. கரிகாலன், ஆரியப்படை தடந்த நெடுஞ்செழியன், செங்குட்டுவன் ஒருகாலத்தவர் அல்லர். சிலம்பின் பார்ப்பனப் புரோகிதம் (திருமணத்தில் வருவது) பிற்காலத்ததன்று. இவ்வழக்கம் கி. மு. 7500-ல் பல்யாகசாலே முதுகுடுமிப் பெருவழுதி காலத்தே தோன்றி விட்டது. வேள்விக் குடிச் சாசனம் இதனையுணர்த்தும். சிலம்பு கூறும் வரலாறு முழுவதும் உண்மை என்பது கட்டுரையாளர் துணிபு.

114) 'சிலப்பதிகார உரைநடை' அ. மு. பரமசிவானந்தம். "தமிழ் உரைநடை" — பக்: 65. மு. ப. 1959. வி. உ. பாரிநிலேயம், சென்னே-1. விலே: ரு 3.50.

சிலம்பு உரையிடை இட்ட பாட்டுடைச் செய்யுள். உரைபெறு கட்டுரை, உரைப் பாட்டு மடை, முதலான உரை நடை சிலம்பில் இடம் பெறுகின்றது. சிலம்பு உரைச் செய்யுள் நடையுடையது. தனிச் சொற்கள் (சிலம்பின்) உரை நடை ஆக்க உறுதுணே. மேலே நாட்டு அறிஞர்கள் ஆய்ந்து கண்ட முடிவுப்படி உரை நடை, உணர்வும், ஆற்றெழுக்கும், விழுமிய வகையும் பெற்ற சொல்லோவியம் என்பதை இளங்கோ காட்டியுள்ளார்.

115) 'சிலப்பதிகாரக் காப்பிய இலக்கணம்' பண்டித மணி மு. கதிரேசன் செட்டியார். "செந்தமிழ்" தொகுதி: 43. பகுதி: 3. பக்: 4.

சிலம்பிற்கும் — மூன்றிற்கும் மிகுந்த தொடர்பு உண்டு. முக்காண்டமும், இன்பம், அவலம், வீரம் ஆகிய முச்சுவையையும் கொண்டுள்ளது. காப்பியச் சுவை ஒன்பது. அவற்றில் மிக்கது மூன்று. அவை உவகை, அவலம், பெருமிதம் என்பன. இவை

சிருங்காரம், சோகம், வீரம், என வழங்கப்படும் வடமொழியில் இம் மூன்றனுள் ஒன்றேனும் விரவாத காப்பியம் சுவையுணர்ச்சி யுடையார்க்கு விருந்தாக மாட்டாது. ஏனைச் சுவைகளெல்லாம் சிறுவரவினவாகவும், இன்மூன்றனுள் ஒன்று அல்லது மூன்றும் பெருவரவினவாகவும் தோன்றவைத்துச்செய்யப்பட்ட காப்பியங் களே கற்பார் உள்ளத்தைக் கவரும் இயல்பினவாகும். இவ் வுண்மையுணர்ந்த இளங்கோவடிகள் எல்லாச் சுவைகளுக்கும் இக்காப்பியம் நிலைக்களமாகப் பாடினர். ஆயினும் சிறப்பாக மேற் குறிப்பிட்ட உவகை முதலிய மூன்றனையும் முறையே மூன்று காண்டங்களிலும் தோன்ற வைத்தார்.

116) 'சிலப்பதிகாரக் காப்பியக் கோயில் ஓர் எழிலோவியம்' செ. வைத்தியலிங்கன், "அழகுக் கலைத்திறன்" — பக் : 170 மு. ப. 1970 வி. உ. மணிவாசகர் நூலகம், சிதம்பரம்,

விலை: ரூ: 3.50

கண்ணகி மாண்பாகக் கோவலன் கூறும் சிவன் பிறை, ஒளி நுதல், முதலான கடவுளுறுப்பு – கடவுளாகப் போற்றவிருக்கும் கண்ணகிக்குத் தெய்வீக உறும்புக்களை முன் கூட்டியே படைப்ப தாய் அமைகின்றது. கிளி முதலான கூறி நானிலமும் அவ ளொடு தொடர்புறுத்தப்படுகிறது. பெண்தரும் ஐம்புல இன்ப மாய, கண்டல், கேட்டல். உண்ணல், உயிர்த்தல், உறுதல் என்ற வள்ளுவர் முறைவைப்பிற்கும். 'மாசறு பொன்னே' எனத் தொடங்குவதில், கண்டல், உறுதல், உயிர்த்தல், உண்ணல், கேட்டல் என்ற இளங்கோவின் வைப்பு முறைக்கும் வேறுபாடு காட்டுவர். அரும் பெறல் பாவாய் (சிலை), 'ஆருயிர் மருந்து'; 'பெருமடமகள்' என்பன முன்னேக்குக் கவிக் குறிப்பாக (Poetical suggestion) அமைகின்றன, மலையிடைப் பிறவா மணி, அலையிடைப் பிறவா அமிழ்து, யாழிடைப் பிறவா இசை, இவை மலையத்துச் சாந்தம், அலையத்து முத்தம், யாழது இசை குறிக்கும் பாலைக்கலி (9) யொடு தொடர்புபடுத்தப்பட்டு விளக் கப்படுகின்றது. அதோடு மலைமகள், அலைமகள், கலைமகள்— தொடர்புகாட்டி, அறம், பொருள், இன்பமும் சுட்டப்படுகின்றது. 'தாழிருங் கூந்தல் தையால்' என்பது பேராதிக்க முறையினைத் தாழ்த்தும் கூந்தல் என விளக்கம் தரப்படுகின்றது. கட்டுரை முன் பின் நோக்கிப் பொருள்நயங் காண்கிறது,

117) 'சிலப்பதிகாரக் காலம்' இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 3, பரல்: 2: பக்: 85:

சிலம்பின் கண் வரும் வரலாற்றுப் பகுதியத் துணையும் உள்ளவாறு, இயற்கைக்குக் கொஞ்சமும் மாறுமல் அமைந்துள்ளது. 'ஆடித்திங்கள் அழல் சேர்குட்டம்;' 'கார்த்திகைப் பரணி' என்னுங் குறிப்புக்கொண்டு கணித நூல் வழி கி. மு. 100 முதல் கி. பி. 400-க்கு இடைப்பட்ட காலக்கணிப்பில் கி. பி. 144-ல் இது நடந்திருக்க வேண்டும் எனக் கணிக்கப்படுகின்றது. நீலகிரியிலிருந்து கங்கை செல்ல 17-மாதங்கள் வஞ்சியிலிருந்து கங்கை செல்ல $20\frac{1}{2}$ மாதங்கள். மீண்டுவர $20\frac{1}{2}$ மாதங்கள். நீலகிரியிற்றங்கியது $8\frac{1}{2}$ மாதம். குட்டுவன் 53-வது மாதம் வஞ்சி மீண்டான். மதுரை எரிந்து 4-ஆண்டுகள் கழிந்த பின் 8-வது மாதத்தில் கி. பி. 149-ல் கண்ணகி கோயில் எழுப்பப் பட்டது. புத்த நிர்வாண காலத்தின்படி கயவாகு ஆண்ட காலம் 642—664. புத்த நிர்வாணம் கி. மு. 493. இதனால் கயவாகு காலம் (642 — 493) கி. பி. 148 — 170) வரையாம். எனவே இவ்விருவகைக் கணிப்பின்படி நோக்கினும் சிலம்பின் காலம் கி. பி. 2-ம் நூற்றுண்டு (கி. பி. 144—170) என முடிப்பர்.

118) 'சிலப்பதிகாரச் சிந்தனைகள் சில:' (89 — A) டாக்டர். ந. சஞ்சீவி, "செந்தமிழ்ச் செல்வி:" சிலம்பு: 44: பரல்: 12: பக்: 568.

கொரியா நாட்டுக் 'கியாட்டோ' பகுதியில் கண்ணகி கூத்து, விபுலானந்தர் யாழ்நூல், மதங்க சூளாமணி, பாரதியார் — அடிகளைப் போற்றிய திறன் — பரிதிமாற் கலைஞரின் 'நாடக இயல்' சிலம்பை அடியொற்றி எழுந்ததே என்பது, 'சிலம்பு கூறல்'— பொருள் 'கண்ணகி கதைகூறல்' என யாழ்ப்பாண அகராதி கூறுதல், திருச்செங்கோடு வட்டத்துப் பெண்களுக்கு 'ஒற்றை முலைச்சியார்' எனப் பெயர் வழங்குதல் — ஆகியன சுட்டப்படுகின்றது.

119) 'சிலப்பதிகாரத்தில் கண்ட ஓர் இலக்கண வழக்கு' பேராசிரியர், எஸ். வையாபுரிப் பிள்ளை. "இலக்கிய விளக்கம்"— பக்: 70, மு. ப. 1958, இ. ப. 1965, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை — 5, விலை: ரூ: 2.00

தொல் கூறும் "அல்" ஈறு "அன்" ஈருகச் சிலம்பில் வருதல் சுட்டியது பிற்கால வழக்கென்பர். 'நீர்' முன்னிலைப் பன்மை

சங்க இலக்கியங்களில் அருகிய வழக்காயிருப்பச் சிலம்பில் பெரு வழக்காயிருப்பதால் சங்க இலக்கியத்திற்குப் பிற்பட்டதென்பர். "யாங்கள்" என்ற சொல் சிலம்பில் வருவது. சங்க இலக்கியத்துள் இவ்வழக்கில்லை. "நான்," தன்மை ஒருமை தொல்காப்பியர் கூறாதது சிலம்பில் வருகின்றது, இவ்வாறு இச்சொற்களின் வழக்கு காட்டிச் சிலம்பு கடைச் சங்க காலத்திற்குப் பிற்பட்ட தென்பர்.

120) 'சிலப்பதிகாரத்தில் கற்பனை' சு. செயராம் நத்தானியேல். "ஆய்வுக்கோவை"—பக்: 154 இ. ப. க. த. மன்றம் 3-வது கருத்தரங்கு. 1971. அண்ணாமலைப் பல்கலைக்கழகச் சார்பு வெளியீடு

இலக்கியம் சிறக்க, இலக்கிய உணர்ச்சி ஓங்கக் கற்பனை இன்றியமையாதது. கற்பனை இலக்கணம், கற்பனை வகை, பேசப்பட்டு அவற்றிற்குச் சிலம்பிலிருந்து எடுத்துக்காட்டுக்களும் தரப்பட்டுள்ளன. புலன்களுக்கு எட்டாத தோற்றங்களையும்,எண்ணங்களையும் மனதிற் கொள்ளல் கற்பனை. இவை சிறப்புக் கற்பனை, வெறுங் கற்பனை என இருவகைத்து. ஆக்ஸ்போர்ட் அகராதி கூறும், கற்பனை, இரஸ்கினின் வெறுங்கற்பனை, சிறந்த கற்பனைக்கான விளக்கங்கள், 'வேர்ட்ஸ் ஒர்த்'—ன் ஆக்கக் கற்பனை, நினைவுக்கற்பனைப் பாகுபாடு,வின்செஸ்டரின் படைப்புக் கற்பனை (creative imagination), இயைபுக் கற்பனை (Associative Imagination), கருத்து விளக்கக் கற்பனை (interpretative Imagination) என்ற பாகுபாடும், 'ரிச்சார்டு' வின் அறுவகைக் கற்பனைப் பாகுபாடும் விளக்கப்பட்டுச் சிலம்பொடு ஒப்புமைப் படுத்தப்பட்டுக் காட்டுக்கள் எடுத்தாளப்படுகின்றன.

121) 'சிலப்பதிகாரத்தில் நகைச்சுவை' விசு. திருநாவுக்கரசு "பூச்சூட்டல்"—பக்: 49. மு. ப. 1947 ஸ்டார் பிரசுரம், திருச்சி விலை: ரூ. 2–00

நகைச்சுவை மூன்று வகையில் அடங்கும். அவை முறுவலித்துச் சிரித்தல், அளவே சிரித்தல், பெருகச் சிரித்தல் என்பன. வம்பப் பரத்தன் கண்ணகி கோவலரைக் கண்டு கவுந்தியிடம் யாரெனக் கேட்டு நகையாடுகின்றான். இந்நகையாடல் 'அளவோடு சிரித்த'லாகும்.

122) 'சிலப்பதிகாரத்தில் பாண்டியன் சிறப்பு' வித்துவான் டி. சிவப்பிரகாச சேதிராயர். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 21 பரல்: 5 பக்: 226

பொதுவான சிலம்பின் சிறப்பை முன்னுரையாக்கிப் புகார்க் காண்டத்தின் சுருக்கம் காட்டி, மதுரைக் காண்டக் கதை நிகழ்ச்சிச் சுருக்கமும் இடம்பெறுவன. பாண்டியன் எதனையும் ஆராயாது செய்யும் நீதியற்றவன்; கொடுங்கோலன்; என்னுங் கருத்து கோவலனைக் கொல்வித்ததனால் நிலைபெறுமாயினும், அதன் காரணம் ஊழ் எனக்காட்டி, ஊழ்வினை வயப்பட்டா னன்றிக் கொடுங்கோலன் அல்லன், நீதி வழுவா மன்னனே; கல்வியறிவுடையவன்; பேராற்றல் உடையவன், எனச் சிலம்பு, புறப்பாடல்கள் காட்டி நிறுவிச் செல்வர்.

123) 'சிலப்பதிகாரத்தில் வரும் போர்க் களங்கள்' டாக்டர் சி. பாலசுப்பிரமணியன். "இலக்கிய அணிகள்" — பக். 174 மு. ப. 1972. வி. உ. பாரி நிலையம், சென்னை-1 விலை ரூ 7

சேரன் செங்குட்டுவன் தன் தாயைக் கங்கைத் துறையில் நீராட்டியபோது செய்த போர், பத்தினிக் கல்லெடுக்க இமயத் துச் சென்று கனகவிசயருடன் உடற்றிய போர், கடற்கடம்பு எறிந்த போர், கொங்கரொடு போருடற்றியது, இடும்பில், வியலூர், கொடுகூர்—போர்—இவை சிலம்பு வழியும், பதிற்றுப் பத்து வழியும் எடுத்துக்காட்டப்படுகின்றன.

124) 'சிலப்பதிகாரத்தில் வெண்பாக்கள்' த. இராமமூர்த்தி "வே. வ இராமசாமி பாராட்டு மலர்"—பக்: 141

சிலம்பில் வரும் வெண்பாக்கள் 15. இவை 12 காதைகளில் வருகின்றன. வஞ்சிக்காண்டத்து வெண்பாக்கள் இடம்பெற வில்லை. பெரும்பான்மை வெண்பாக்களுக்கு உரை இல்லை. உரை இருக்கின்ற வெண்பாக்களுக்கும் அரும் பதவுரையார் உரை இருப்பவை சிலவற்றிற்கு அடியார்க்கு நல்லார் உரை இல்லை. அடியார்க்கு நல்லார் உரை இருப்பவை சிலவற்றிற்கு அரும்பதவுரையார் உரையில்லை. வெண்பாக்கள் அனைத்தும் பெரும்பான்மை அவ்வக் காதைச் சுருக்கமாக அமைந்து, கூறி யது கூறலாக அமைகின்றது. இவ்வாறு ஒவ்வொரு வெண் பாக்கள் பற்றியும் தனித்தனியாக ஆய்ந்து, அவை இளங்கோ வால் பாடப்பட்டதன்று எனக் கட்டுரையார் துணிகின்றார்.

125) 'சிலப்பதிகாரத்திலிருந்து இராமாவதாரம் முதலிய நூல்களில் வந்தன' ஜி. சதாசிவம் பிள்ளை. "செந்தமிழ்" தொகுதி: 18 பகுதி: 1 பக்: 6

சிலம்பின்கண்ணுள்ள பாடல்கள், அடி, சீர், கருத்துக்கள்—இராமாவதாரம், வில்லிபாரதம் ஆகிய நூல்களில் எடுத்தாளப் படுதல் சுட்டி, அவ்வப்பாடல்களையும் எடுத்துக்காட்டிச் செல்கிறது கட்டுரை.

126) 'சிலப்பதிகாரத்திலிருந்து சிந்தனையில் வந்த செய்யுட்கள்'. ஜி. சதாசிவம்பிள்ளை. "செந்தமிழ்" தொகுதி:17 பகுதி. 11 பக்: 494

சிலம்புச் செய்யுள், அடி, சீர், கருத்து முதலான பிற இலக்கியங்களில் எடுத்தாளப்படுதலை எடுத்துக் காட்டுக்களுடன் தருவர். இக்கட்டுரையின் தொடர்ச்சியே, "சிலப்பதிகாரத்திலிருந்துஇராமாவதாரம் முதலிய நூல்களில் வந்தன".வென்னுங் கட்டுரையுட் பேசப்படுவன.

127) 'சிலப்பதிகாரத்திலே வள்ளுவர்' டாக்டர். ரா.பி. சேதுப்பிள்ளை. "வழிவழி வள்ளுவர்"—பக்: 1-20. மு. ப. 1953. பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-5. விலை. ரூ 1.8.0.

காவேரி நாடு, வாணிக வளம், நகரச் சிறப்பு, இன்ப வாழ்க்கை, மாலைப் பொழுது, பழுதுற்ற மனையறம், கண்ணகியின் கண்ணீர், வீரக் கற்பு, இறையும் முறையும், கொலைத் தண்டனை, வினைப் பெருமை, கற்பின் பெருமை, மான வீரம், அறவுரை; என்னும் தலைப்புக்களில் சிலம்புச் செய்திகளும் அவற்றிற் கேற்பக் குறள் விளக்கமும் கொடுக்கப்பட்டுள்ளது.

128) 'சிலப்பதிகாரத் திறன்' டாக்டர் வ. சுப. மாணிக்கம், "இரட்டைக் காப்பியங்கள்" மு. ப. 1958. இ. ப. 1960. செல்வி பதிப்பகம், காரைக்குடி, விலை ரூ. 6

கண்ணகிக்குக் கல்லெடுப்பு, கோட்டமமைப்பு, விழா வெடுப்பு முதலிய அரசியல் செல்வாக்கிற்குப் பின்னரே சிலம்பு காவியம் எழுதப்பட்டிருத்தல் வேண்டும். சிலம்பு தமிழ்நாட்டுக் காப்பியம். தமிழிசை வளர அடிப்படையானது. சிலம்பு உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள். ஈண்டு உரை என்றது 'ஆங்கு', 'அதனல்', 'அவளுந்தான்', 'அவனுந்தான்', 'அவ்வழி' என வரும் தனிச் சொற்களேயன்றிக், காண்ட, நூல் இறுதிக்

கட்டுரைகள் முதலானவென்பது பொருந்தா. சிலம்பு நாடக காப்பியம் என்றற்கு நூலின் தொடக்கமே சான்று. கோவலன் வாழ்க்கை வரலாறு முழுவதும் இளங்கோவால் காட்டப்பட வில்லை நாடக காப்பியம் என்பதால். நாடகக்காட்சிகள் இன்பி யலும் துன்பியலுமாக மாறுகின்றன. சிலம்பு நாடகக் காப்பிய மாதலின் காப்பிய நிகழ்ச்சி நடந்த கால அளவைக் குறுக்கி, நிகழ்ச்சிகள் அடுத்தடுத்து (கோவலன் புறப்பாடு (அடைக்கலக் காதை) முதல் அழற்படுகாதை ஈருக ஒரே நாள் நிகழ்ச்சிபோல் காட்டியிருப்பது) நிகழ்ந்தனவாகப் பிணைத்தும் இணைத்தும் காட்டிச்செல்கின்றூர்.

129) 'சிலப்பதிகாரத்தின் கதையமைப்பும் அவலச்சுவையும்' டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியன் "காப்பியக் கட்டுரைகள்"-பக்: 47 மு. ப. 1952 மிரானியா அச்சகம், நெல்லை. விலை ரூ. 2-25

சிலம்பு காப்பியத்திற்கும் பிற இந்திய, தமிழ்க் காப்பியங் கட்குமுள்ள வேறுபாடுகளாவன: சிலம்பு தமிழ்நாட்டுக் கதை; மன்னர், கடவுளர் அன்றி மக்களே கதைத் தலைவன் தலைவியர்; கதைத் தலைவன் கொலைப்படுதல்; காப்பியத்து வரும் அரச மரபினர் தமிழ்நாட்டு அரச மரபினர்; உறுதிப்பொருள் நான் கன்றி மூன்றே கொண்டுள்ளது. ஆறு, நகர வண்ணனையொடு தொடங்கப்பெறவில்லை. இவை சிலம்பின் மாற்றங்கள். சேக்ஸ் பியர் அடிப்படையில் புகார்க் காண்டம் இன்ப முடிவு (Comedy); மதுரைக் காண்டம் துன்ப முடிவு (Tragedy); வஞ்சிக்காண்டம் வரலாற்று நாடகம். சிலம்பின் உயிர்நாடி மதுரைக்காண்டம். அதில் மண்டிக்கிடக்கும் அவலச்சுவையே சிலம்பில் சிறப்பிக்கப் பெறும் சுவை. இன்பம் துய்த்தற்குரிய இளமை கண்ணகிக்கு வீணே கழிந்தது; எனவே அசைவு. தன் செல்வத்தை இழந்த கோவலனுடன் மதுரைக்கு வருகின்றுளாகலின் வறுமை. கண வன் பழியேற்று மடிகின்றுனாகலின் இளிவு. அவனை இழந்ததி னல் இழவு. இந்நான்கன் வழி அழுகையைப் பெருக்குகின்றூர் இளங்கோ. கோவலன் கண்ணகி மதுரைப் பயணத்தை (30 காத தூரம்) ஏழு காதைகளிலும், செங்குட்டுவன் இமயப் பயணத்தை (1000 காதம்) ஒரே காதையிலும் கூறியது அவ லத்தை மிகுக்கவே. P. T. சீனிவாச ஐயங்கார் கருதுவது போன்று இவ்விரு நிகழ்ச்சி பாடினர் இருவர் அன்று. கண்ணகி, மண்டோதரி (கம்பராமாயணம்) இருவரின் அழுகை (கணவனை இழந்த நிலையில்) ஒப்பிடப்படுகின்றது. மண்டோதரி 'சீதை

காதல்' 'நின் உயிர் அழித்ததே' என்று புலம்புதல் உலகியல்பும், கற்பு மகளிர் இயல்புமன்று; அழுகைச் சுவை பெருக்க உறுப்பினர் இயல்பழித்தாரன்று; அதற்கு இம்முறை உதவா. தெய்வ நியாயம் கூறவே இங்ஙனம் இயல்பழிக்கின்றார். ஆயின் இளங்கோ உலகியல்பும், கற்பு மகளிர் இயல்பும் அழிக்காது அவலச்சுவை பெருக வைக்கின்றார். கோவலன் முடிவிற்கு முழுக்காரணம் மாதவியாகினும் கண்ணகி அது குறித்து அழாது, பழிசெய்தானைப் பழிவாங்குவன் என்று கூறியரற்றுவது, உலகியல்போடு பொருந்துகிறது. கோசிகன் கோவலன் கண்டு தெளிவது, துஷ்யந்தன் வனத்திடை பிரிந்த தன் (மனைவி) மகன் கண்டு உண்மை தெளிவதினோடு ஒப்பிடப்பட்டு, இளங்கோ காட்டும் 'இலக்கிய இன்பம்' சுவையுடையதெனக் காட்டப்படுகின்றது. கலையும் கற்பும் பிரிந்தால் கண்ணகிபோல் துயருற நேரும் என்பதை வலியுறுத்துவதே இக்கதை; இவ்வாறு பிரித்து வைத்த சமுதாயம் அழியவேண்டும் என்றே கண்ணகியைக் கருவாகப் பயன்படுத்துகின்றார்.

130) 'சிலப்பதிகாரம்' எம். ஆர். அடைக்கலசாமி "தமிழ் இலக்கிய வரலாறு" — பக். 136. மு. ப. 1960, 2-ம் ப. 1968 பால்நிலா பதிப்பகம், லயோலா நகர், சென்னை-24

சிலம்பு எழுந்த வரலாறு, சிலம்பு காவிய அமைப்பு, சிலம்பு கதை, முதற்காப்பியம், இயல், இசை, நாடகக் காப்பியம், தேசியக் காப்பியம், மூவேந்தர் காப்பியம், குடிமக்கள் காப்பியம் பெண் பெருமை பேசும் காப்பியம், வரலாற்றுக் காப்பியம் எனச் சிலம்புச் சிறப்பு பேசுகிறது கட்டுரை.

131) 'சிலப்பதிகாரம்' புலவர் அரசு. "காப்பியக் கதைக் கொத்து" (முதற்பாகம்) — பக். 1-44. மு. ப. 1949. கழக வெளியீடு, சென்னை-1

சிலம்பின் கதைச் சுருக்கம், புகாரில் நடந்தது, மதுரையில் நடந்தது, வஞ்சியில் நடந்தது, என்ற முப்பெரும் பகுதியுடன் சிலப்பதிகாரம். புகார், கோவலனும் கண்ணகியும், கோவலனும் மாதவியும், கோவலனும் கண்ணகியும் மதுரை செல்லல், கோவலன் மதுரையைப் பார்த்தது, கோவலன் கண்ட கனவு, மாதரியிடம் கண்ணகியை ஒப்புவித்தல், கோவலன் கொலையுண்டது, கண்ணகி துன்பம், வழக்குரைத்தல், அரசன் அழிவு, நகர்

அழிவு, கோவலன் ஊழ்வினை, கண்ணகி கணவனையடைதல், சேரன் செங்குட்டுவன், சிலைக்குக் கல் கொண்டுவருதல், கண்ணகிக்குக் கோயில் கட்டி வழிபடுதல், நீதிகளும் பயிற்சிகளும்—ஆய சிறு தலைப்புக்களுடன் பேசப்படுகின்றது.

132) 'சிலப்பதிகாரம்' அரசு. ஆறுமுகனார்: "தமிழ் இலக்கிய வரலாறு"—பக்: 207 மு. ப. 1972 தாஸ் புக் சென்டர், நாகர் கோயில். விலை ரூ. 6

சிலம்பின் சிறப்புக்கள், காலம், சதகர்ணி, கயவாகு வரலாறு இடம்பெறல், குடிமகள் கண்ணீர் படையாகிக் கொடுங்கோல் அழிக்கும் பெற்றி, சிலம்பின் உவமை நலன், நாடகக் குறிப்பு, மாதவி இரண்டாம் கடித மாண்பு, சிலம்பு உரையார் அரும்பத வுரையார், அடியார்க்கு நல்லார், ந. மு. வேங்கடசாமி நாட்டார், ஆர். கே. சண்முகஞ்செட்டியார் — இவர்களைக் குறிப்பிடுகின்றது கட்டுரை. 'வாலசரிதை நாடகங்கள்' கண்ணனுக்குக் கி. பி. 2-ம் நூற்றாண்டில் நடைபெற்றது. இது சிலம்பில் இடம் பெறுதலின் சிலம்பின் காலம் கி. பி. 2-ம் நூற்றாண்டென்பர்.

133) 'சிலப்பதிகாரம்' டாக்டர் மா. இராசமாணிக்கனார் "தமிழ் இலக்கிய வரலாறு" (சங்ககாலம்)—பக்: 272 மு. ப. 1963 பாரி நிலையம், சென்னை-4 விலை ரூ. 5

சிலம்பின் காலத்தை, கரிகாலன், இலங்கைக்கயவாகு, நூற்றுவர்கன்னர், ஆகியவர்களின் காலத்தொடு தொடர்பு படுத்தி கி. பி. 2-ம் நூற்றாண்டென்பர். திரு. வையாபுரிப் பிள்ளையவர்கள் 'தமிழ் மொழி இலக்கிய வரலாறு' (History of Tamil Language and Literature) நூலில் சிலம்பின் காலம் பிற்பட்டது எனக் காட்டும் கருத்துக்கட்கு மறுப்புரை பல ஏற்றுக் கொள்ளத்தக்க முறையில் கொடுக்கப்பட்டுள்ளது. அடுத்து சிலம்பு காவியச் சிறப்பு, திருமணச் சடங்குமுறை, இசை நடனக் கலைகள், இந்திரவிழா, தமிழர் வீரம், அக்காலப் பெருவழிகள், சிலம்பு காட்டும் சில சிறப்புச் செய்திகள், இளங்கோ சிறப்பு, சமயம் (சமணம்), சிலம்பில் வரும் வடசொற்கள் பற்றிய பட்டியல் முதலன பேசப்படுகின்றன.

134) 'சிலப்பதிகாரம்' எஸ். இராமகிருஷ்ணன். "தமிழ் இலக்கிய வரலாறு – ஓர் அறிமுகம்" பக்: 26. மு. ப. 1962. என். சி. பி. எச். பிரைவேட் லிமிடெட் 6, நல்லதம்பிச் செட்டித்தெரு. சென்னை - 2. விலை: ரூ: 2–50.

இளங்கோ, செங்குட்டுவன் தம்பி என்றற்குச் சங்க நூல்களில் சான்றில்லை மணிமேகலைச் சாத்தன் வேறு; சிலம்புச் சாத்தன் வேறு. குறளின் பின்னைய தோற்றம் சிலம்பு. சிலம்பின் பின்னர் மணிமேகலை தோன்றியது. சிலம்பை வரலாற்றுவைப்பு நிதியாகக் கொள்ளல் பிழை சிலம்பு ஒரு கதை. சங்ககாலத்துக்கு முன்பே மெய்யாக நிகழ்ந்த நிகழ்ச்சிகளின் அடிப்படையில் இக்கதை தோன்றி நாளாவட்டத்தில் வளர்ந்திருக்க வேண்டும். இளங்கோ கூறாத கண்ணகி வளர்ச்சி பின்னர் வளர்கிறது. துர்க்கையாகப் பிறந்தாள் என்பது. மலையாள பகவதியம்மன், வட்டபுரியம்மன், இவை பிற்காலக் கண்ணகி கதை வளர்ச்சி. பல காலம் பாணர் நாவில் வளர்ந்த கதைப் பாட்டு இளங்கோவடிகளது வளர்ந்த மனோபாவனையில் சிலப்பதிகாரமாகப் புத்துரு பெற்றிருக்க வேண்டும். சங்க காலத்தின் சிறந்த பண்புநலன்களைப் போற்றவும். அதில் படிந்த கேடுகளை அகற்றும் நோக்கிலேயே புதிய சகாப்தம் தோன்றியதென்பதை நிறுவவும் ஆசிரியர் சிலப்பதிகாரம் வாயிலாக முயன்றிருக்கின்றார். தமிழக ஒருமை, இந்திய ஒருமை, பெண் பெருமைக்காப் பியம்சிலம்பு. இந்திர விழாக்காலத்தில் நடு வீதியிலேயே நகர நம்பியர் பொது மகளிரைத் தழுவும் அளவுக்குச் சமுதாயம் கெட்டிருந்தது. மதுரை எரிகின்றதென்றால் தசையின் நசையால் வசையுற்ற சமுதாயம் அழிகின்றதென்று பொருள். முதல், இடை, கடை என்ற உறுப்பழகும், உறுப்புக்கள் இயைந்து பொருந்தப் பெற்ற ஒருமை நயமும், காப்பியப் போக்கின் நாடகப்பாங்கும், உணர்ச்சி வேகமும், பாத்திரப் படைப்பின் வெற்றியும், வரிப்பாட்டின் சுவையும் சிலம்புச் சிறப்புக்கள். இவை கட்டுரை தரும் கருத்துக்கள்.

135) 'சிலப்பதிகாரம்' வி. ரா. இராமச்சந்திர தீட்சிதர். "செந்தமிழ்ச் செல்வம்''—பக்: 33. மு. ப. 1952. 3-ம் ப. 1953. அருளகம் நெல்லை. விலை. ரூ. 1-12–0.

பொதுவான சிலம்புச் சிறப்பு எடுத்துக் காட்டப்படுகின்றது. தமிழ் முதற் காப்பியம் சிலம்பு. வள்ளுவரின் போக்கு இளங்கோவின் போக்கு என்பது சுட்டப் படுகின்றது.

136) 'சிலப்பதிகாரம்' ஏ. இராமசாமி "விரிவுப் பணி சொற்பொழிவுகள்"—பக். 115. 1959. அண்ணாமலைப் பல்கலைக்கழகம் விலை ரூ. 1-50

கட்டுரை சிலப்பதிகாரக் கண்ணகி கதைச் சுருக்கம் பேசுகின்றது.

137) 'சிலப்பதிகாரம்' ப. இராமன். "தமிழ் இலக்கிய வரலாறு" மு. ப. 1961. 4-ம். ப. 1968. சேகர் பதிப்பகம், சென்னை-1. விலை: ரூ. 3-50.

மூன்நீதி பகர்வது, முத்தமிழ்க் காப்பியம், மூவேந்தர் திறம் பாடுவது, கோவில்பல, தெய்வம்பல, பத்தினி வழிபாடு, முற்பிறப்பு, நிமித்தம் பார்த்தல், பிறபல பழக்க வழக்கம், கடல்கோள் நிகழ்ச்சி, முதலான பாடுவது சிலப்பதிகாரம் என்பது சுட்டப்படுகின்றது.

138) 'சிலப்பதிகாரம்' (கானல்வரி) தி. சங்குப் புலவர். "செந்தமிழ்ச் செல்வி". சிலம்பு: 32. பரல். 6, 8, 9: பக்; 278, 365, 425.

மாதவி பாடிய ஆற்றுவரிப் பாடல் மூன்றின் பொருள் விளக்கமும் (சொற்பொருள்) உட்கருத்தும் (கருத்துரை) விரிக்கப் பெறுகின்றன. அடுத்து மாதவி பாடிய சார்த்து வரியில் கையுறைத் துறை, திணை நிலைவரி, காமம் மிக்க களிபடர்க் கிளவிதுறை, மயங்கு திணை நிலைவரி, அலரறிவுறீஇ வரைவு கடாதல் துறை, தலைவி மாலையாம் பொழுது கண்டிரங்கல் துறை, ஆகிய திணை, துறை விளக்கி, அவ்வத்திணை, துறைக்கண் அமைந்த மாதவி கானல்வரிப் பாடல்களுக்கு விளக்கம் எழுதப்படுகின்றது.

139) 'சிலப்பதிகாரம்' ச. சாமிமுத்து. "தமிழ் இலக்கிய வரலாறு"-பக்: 174. மு. ப. 1962. 4—ம். ப. 1968. யுனைட்டெட் பப்ளிசர்ஸ், திருச்சி - 2. விலை: ரூ: 3-50.

ஒருவனது வாழ்க்கையின் ஒரு கூறை மட்டும் இலக்கியமாக்கிய தமிழ்ப் புலவர்கள் அவனது வாழ்க்கையின் பல கூறுகளையும் இலக்கியமாக்க முனைந்தனர். அதனால் சிலப்பதிகாரமும், மணிமேகலையும் கிடைத்தன. சிலம்பின் கதைச் சுருக்கம், மூன்று நீதி, ஐம்பெருங் காப்பியங்களில் தலையாயது, சிலம்பின் நயமிகு பகுதிகள், இசை, நாட்டியம், ஜநில வாழ்க்கை முறையாகியன காட்டப்படுகின்றன.

சிலம்பின் கண் அகச்செய்தியும் புறச்செய்தியும் ஒருங்கே அமைந்துள்ளன. அரசியல், பொருளியல், வாழ்க்கைகளும், போர் நிகழ்ச்சிகளும் பேசப்படுகின்றன. கயவாகு, கனகன், விசய னாகிய வரலாற்று மன்னர் குறிப்புக்களும் இடம்பெற்றுள. சிலம்பு பற்றிய விமர்சனக் கட்டுரையாக அமைகின்றது.

140) 'சிலப்பதிகாரம்' க. சுப்பிரமணிய பிள்ளை. "இலக்கிய வரலாறு" (முதற்பகுதி)—பக்: 232. கழக வெளியீடு, சென்னை-1.

சிலம்பின் காண்ட அமைப்பு, காதைகளின் சுருக்கம், காலம், அக்காலத் தமிழர் நாகரிக வாழ்வு, தொழில்முறை, பண் பாடு பற்றிச் சுருக்கமாகக் கட்டுரை அமைகின்றது. செங்குட்டு வனின் காலம் கயவாகுவின் காலம் (கி. பி. 171–193) வடநாட்ட ரசன் 23–வது குடும்பத்தில் வந்த கௌதமபுத்த யக்ஞபதி என் பவனே நூற்றுவர் கன்னன். இவன் காலம் கி. பி. 166. எனவே சிலம்பின் காலம் கி. பி. 2–ம் நூற்றாண்டெனை முடிப்பார்.

141) 'சிலப்பதிகாரம்' டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை. "தமிழ் விருந்து". பக்: 47. 8-ம் ப. 1960. பழனியப்பா பிரதர்ஸ், திருச்சி-2. விலை: ரூ: 2—00.

கண்ணகி வரலாறு, இளங்கோ வரலாறு, சிலம்புச் சுவை பற்றிய அறிமுகக் கட்டுரையாக அமைகின்றது.

142) 'சிலப்பதிகாரம்' (கவிதை) வெண்பாவூர், பொ. திரு ஞானம். "செந்தமிழ்ச் செல்வி": சிலம்பு: 33. பரல்: 12. பக்: 548.

சிலம்பு பற்றிய சிறு கவிதை. 8–அடிகளில் கவிதை அமை கின்றது. கவிதை வருமாறு.

செந்தமிழர்க் காப்பியமாம் சிலப்பதிகாரமதில்
நந்தமிழர்க் கற்பினையே நயமுடனே கூறினரே
செந்தமிழ்ச் செல்வரெல்லாம் செம்மையுற அறிந்ததனை
நந்தமிழர் வாழ்வினிலே நிறையுறுக என்றனரே!
முத்திறமும் முறையாக முன்னோர்தம் வாழ்வினையே
தித்திக்கும் தேன்தமிழில் தெவிட்டாநற் பாவாக
இத்தரணி இனிதுறவே எழுதிவைத்த இளங்கோதான்
சித்திக்கும் வழிஎனவே செப்பிவிட்டார் செகமறிய.

143) 'சிலப்பதிகாரம்' ஞா. சா. துரைசாமி பிள்ளை. "தமிழ் இலக்கியம்'' (சங்ககாலம்)—பக்: 148. மு. ப. 1923. அசோசியேசன் பிரஸ் (Y. M. C. A.) 5, ரஸ்கல் தெரு, கல்கத்தா.

சிலம்பின் காப்பிய அமைப்பு (காண்டம், காதை), சுவைமிகு கானல்வரிப் பாடல்கள், இவற்றைப் பற்றிச் சிறிய அளவில் அமைகின்றது கட்டுரை. வஞ்சிக் காண்ட நிகழ்ச்சிகள் இளங்கோ நேரில் கண்டறிந்த உண்மை நிகழ்ச்சிகள். பிற காண்ட நிகழ்ச்சிகள் பிறர் கூறக் கேட்டவை. புகார் மன்னன் கரிகாலன். மதுரை மன்னன் பாண்டிய நெடுஞ்செழியன். வஞ்சி மன்னன் செங்குட்டுவன். இவை கட்டுரை காட்டும் கருத்துக்கள்.

144) 'சிலப்பதிகாரம்' கு. மதுரை முதலியார். "கல்வியும் கேள்வியும்" – பக்: 41-63. மு. ப. 1960. வி. உ. பாரிநிலையம், சென்னை-1. விலை: ரூ: 2—00.

கட்டுரை வஞ்சிக்காண்ட நிகழ்ச்சிச் சுருக்கமாக அமைகின்றது.

145) 'சிலப்பதிகாரம்' பேராசிரியர். தெ. பொ. மீனாட்சி சுந்தரனார். "சமணத்தமிழ் இலக்கிய வரலாறு": பக்: 69. மு. ப. 1961. கலைக்கதிர் வெளியீடு, கோவை, விலை: ரூ: 2—50.

சிலப்பதிகாரக் காப்பியம், ஆசிரியர் சமயம், சிலம்பின் காலம், பதினெண் கீழ்க் கணக்கும் சிலம்பும், மணிமேகலையும் சிலம்பும், கோவலன் முதாதை, புத்தர் பிறப்பு, கண்ணகி கதை, சமயநெறி ஆகியவை கட்டுரைக் கண் ஆய்வு பெறுகின்றது. சிலம்பு சங்க இலக்கியத் தனிப் பாடல் வளர்ச்சி; குடிமக்கள் காப்பியம்; சமயம் சமணம். ஆசிரியர் காலம் சங்கம் மருவிய காலமாகிய கி. பி. 2-ம் நூற்றாண்டு என நிறுவுகின்றார் கட்டுரையாளர்.

146) 'சிலப்பதிகாரம்' இ. எஸ். வரதராஜ ஐயர். "தமிழ் இலக்கிய வரலாறு"—பக்: 25. 1957. அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

இளங்கோவின் காவியம் - ஓர் சமண காவியம், எனக் கருதிச் 'சமணமும் தமிழும்' பகுதியுட் சிலம்பு காவியத்தையும் அடக்கி, அக்காவியத்துக் காணக்கிடக்கும் சமணக் குறிப்புக்கள் சில காட்டுவர்.

147) 'சிலப்பதிகாரம்' பேராசிரியர். எஸ். வையாபுரிப்பிள்ளை "இலக்கிய மணிமாலை."—பக்: 125. மு. ப 1954. தமிழ்ப் புத்தகாலயம், சென்னை—5. விலை: ரூ: 3-80.

சிலம்பு போற்றப்படக் காரணம் ஆர். கே. சண்முகம் செட்டியார் ஊக்குவித்த தமிழிசை இயக்கம். சிலப்பதிகாரம் - சிறப்பதிகாரம் என்று தமிழ்ப் புலவர்களிடை வழக்கிலிருந்தது. 'Chandra's vengeance' in old Deccan Days by M. Frere - அவர்களின் கதைக்கும் கோவலன் கதைக்கும் தொடர்புள்ளது. சிலம்பு கதை கி. பி. 1650–ல் மக்கள் வழக்கில் பரவியது. 11, 12–ம் நூற்றூண்டில் அறிஞர்கள் அறிந்திருந்தனர். கி பி. 10–ம் நூற்றூண்டில் களவியலுரை இதனை மேற்கோள் காட்டியுள்ளது. கி. பி. 13–ம் நூற்றூண்டில் சிலம்பிற்கு உரை தோன்றிற்று. அரும்பதவுரையார் காலம் கி பி. 12, 13–ம் நூற்றூண்டு, அடியார்க்கு நல்லார் காலம் கி. பி. 14–ம் நூற்றூண்டு. சிலம்பு கதை இளங்கோ கால உண்மை நிகழ்ச்சியன்று. சிலம்பு நாட்டிய சாத்திரம், பஞ்சதந்திரம், பதினெண் கீழ்க்கணக்குக் கருத்தை எடுத்தாளுதலின் அதற்குப் பிற்பட்டது. சிலம்பின் காலம் கி. பி. 8-ம் நூற்றூண்டு, சிலம்பின் இயற்கை இறந்த நிகழ்ச்சி (11), சிலப்பதிகாரப் பதிப்பு இவை பற்றியும் குறிப்பர்.

148) 'சிலப்பதிகாரம்' பேராசியர். எஸ். வையாபுரிப் பிள்ளை. "தமிழ் இலக்கிய சரிதத்தில் காவியகாலம்" மு. ப. 1957. தமிழ்ப் புத்தகாலயம், சென்னை—5. விலை: ரூ: 5-80.

வடமொழி உதயன் கதையை மொழிபெயர்த்த முயற்சிக்குப் பின்னர் தமிழ் நாட்டில் வழங்கிய பழங்கதை ஒன்றை எடுத்து அழகிய இலக்கியமாகச் சைனர்கள் அமைத்தனர். இது சிலப்பதிகாரம் எனப்படும். சேர நாட்டில் பத்தினித் தெய்வ வழிபாடு தோன்றியபின், அவ்வரலாறு எழுதுவதே சிலம்பின் நோக்கமாம். கதை இளங்கோ கால உண்மை நிகழ்ச்சியன்று. வரந்தருகாதையில் இளங்கோ தன்னையும் கதையொடு தொடர்பு படுத்திக் கொள்வது உலகம் முழுவதும் கதாசிரியர்கள் கையாளும் ஒரு மரபேயன்றி உண்மையல்ல. சிலம்பின் கால ஆய்வில், திரு. சாமிக்கண்ணுப் பிள்ளை யவர்களின் சோதிடக் குறிப்பு, வடமொழிப் பஞ்சதந்திரக் கதைகள், பரதநாட்டிய சாத்திரம், சிலம்பின் மொழி நடைகொண்டு அதன் காலம் கி. பி. 8–ம் நூற்றூண்டென்பர். அடுத்து இளங்கோவின் புலமை நலன், முந்து நூற் பயிற்சி, சிலம்பின் இலக்கியச் சுவைபற்றிச் சில காட்டுவர்.

149) 'சிலப்பதிகாரம் என்பதின் பொருள் யாது? டாக்டர் துரை சிங்காரவேலன். "செந்தமிழ்ச்செல்வி" சிலம்பு 46. பரல் 11&12

இளங்கோ சிலம்பு காவியம் எழுதச் சிலம்பணி காரண மன்று. சீத்தலைச் சாத்தனர் காரணமன்று. காரணமாக இருந்தவர் குன்றக் குறவரே. குன்றக் குறவரால் உணரப்பட்டு, குன்றக் குறவரால் ஒலி எழுப்பப்பட்டு, அஃதறிந்தருள் நீயெனக் குன்றக்குறவரால் கட்டளையிடுவதுபோன்று எழுப்பப்பட்ட ஒலி யால் எழுந்த காவியமே சிலப்பதிகாரம். சிலம்பு - பொருள்; ஒலி; மலை; — மலையில் உள்ளார் எழுப்பிய ஒலி காரணமாக எழுந்த காவியமாகலின் 'சிலப்பதிகாரம்' என்னப் பெயர் பெற்றது என உரைப்பர்.

150) 'சிலப்பதிகாரம் — ஒரு பெருங்காவியம்' உ. இலிண்டா "இளவேனில்" (கையெழுத்துப் பிரதி) 1970. தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக்கழகம்.

தண்டி இலக்கணம் கூறும், வாழ்த்து, வணக்கம், வீடு பேற்றின் சிறப்பு, தன்னிகரில்லாத் தலைவி (தலைவன்), மாலை வண்ணனை, நாட்டு வளம், நன்மணம் புணர்தல் இவை அமைந்துள்ள சிலம்பில். பொன்முடி கவித்தல் நீர்ப்படைக் காதையில் (*133-137*) குறிப்பாகச் சுட்டப்படுகிறது. புனல் விளையாடல்— கடலாடு காதை. சந்தி எனப்படுவது, முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்த்தல் என ஐந்தாகும். மங்கல வாழ்த்து முகம்; கானல்வரி பிரதிமுகம்; வழக்குரை—கருப்பம்; நடுகல் காதை விளைவு; வரந்தருகாதை துய்த்தல். *14* - இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் இடம்பெறுகின்றன சிலம்பின்கண். கண்ணகி யின் இல்லற தவத்தின் எல்லையில் ஆற்றலை, குணமென்னுங் குன்றேறி நின்றாள் தெய்வ மாண்பை. ஒழுக்கத்தால் பெற்ற உயர்வை உலகம் காண வல்ல ஒற்றுமை இன்பத்தைச் சிலப்பதி காரத்தின் வாயிலாக உலகிற்கு உணர்த்தியுள்ளார் இளங்கோ. இவை கட்டுரைச் சுருக்கம்.

151) 'சிலப்பதிகாரம் குடிமக்கள் காப்பியமா?' வை. கா. சிவப் பிரகாசம். Tamil Culture .vol: ix: No. 2. P. 131

பாடுபட்டு உழைக்கும் பாட்டாளிகள், சமுதாயத்தில் சுரண்டப்பட்டோர், வஞ்சிக்கப்பட்ட வறியோர், என்போர் வாழ்க்கை, துன்பம், போராட்டம் முதலியவற்றைப் படம்பிடிக்

கும் இலக்கியம் குடிமக்கள் இலக்கியம் அல்லது பாட்டாளி இலக்கியம் எனப்படும். உழைப்பின் பெருமை, முதலாளியை முறியடிக்கும் போராட்டம், தொழில் மேம்பாடு, சமுதாய முன்னேற்றம், என்பன பாட்டாளி இலக்கியத்தின் இன்றியமையாத அம்சங்கள். சிலப்பதிகாரம் முடியாட்சிக் காலத்தில் மலர்ந்த ஓர் புரட்சிக் காப்பியம். செல்வக் குடும்பத்தில் பிறந்த இருவர் திருமணம், அன்னார் செல்வச் சிறப்பு, அவர் தம் வாழ்க்கையில் பரத்தை ஒருத்தியின் தலையீடு, காம இன்ப ஈடுபாட்டால் செல்வம் கரைதல், வறுமை மிகல், வறுமை மீட்சிப் போராட்டம், விதியின் சதி என்ற இவற்றைச் சிலம்பு கூறலால் சிலப்பதிகாரம் முதலாளி இலக்கியம் அல்லது மேன்மக்கள் இலக்கியம் என்ற எண்ணம் உள்ளத்தில் நிழலாடுகின்றது. வேடர். இடையர், குறவர், உழவர் முதலிய உழைப்பாளிகளின் வாழ்க்கை இடை இடையே கோவலன் கண்ணகி கதையொடு பின்னப்படுகிறது. ஏழைகள், தொழிலாளர், குடிமக்கள் ஆகியோர் வாழ்வு, எண்ணம், இன்ப துன்பங்கள் யாவும் சிலப்பதிகாரத்தில் எழில்மிக்க பின்னணியில் காட்சியளிப்பினும், வேடர் முதலிய பாட்டாளிகளின் வாழ்க்கையைக் கூறல் சிலப்பதிகாரத்தின் கருவாக அமையவில்லை. கோவலன், கண்ணகி இருவரின் வாழ்க்கைப் போராட்டமே கதையின் கருவாதலால் சிலப்பதிகாரம் முதலாளி இலக்கியம் என்ற எண்ணம் மறையவில்லை. ஆயின் கோவலன் பிறர் துன்பம் உணரா இரக்கமற்ற அரக்க உள்ளம் படைத்த முதலாளியாகக் காட்சியளிக்கவில்லை. தன்னம்பிக்கை, உழைப்பில் ஊக்கம் ஆகிய உழைப்பாளர் பண்புகளும் கோவலனை அணி செய்தன. எனவே பிறப்பால், தோற்றத்தால், சூழலால் கோவலன் முதலாளியாகக் காணப்பட்டாலும் உள்ளப் பண்பால், எண்ணத்தால், உழைப்பாளி என்றே இளங்கோ காட்டுகிறார். அதனால் புறத் தோற்றத்தில் சிலப்பதிகாரம் முதலாளி இலக்கியமென நிழலாடினும் உண்மைப் பண்பால் குடிமக்கள் காப்பியமாக ஒளிவீசுகிறது என்பது ஆசிரியர் துணிபாகக் கட்டுரை காட்டுகிறது.

152) 'சிலப்பதிகாரம் கூறும் வழக்க ஒழுக்கங்கள்' மு. இராகவையங்கார். "இலக்கியக் கட்டுரைகள்"—பக்: 120. மு. ப. 1952, 3-ம் ப: 1965. பி. என். பிரஸ், சென்னை-2. விலை: ரூ: 2-50.

வேதாகம வழக்கொடு அமைந்த கொள்கையே பழந்தமிழர் கொள்கை. கடவுளும், இருவினையும், மறுபிறப்பும் இல்லை என்ற

நாத்திகக் கொள்கை அன்றில்லை. குரவைப் பாடல் குறிஞ்சி மக்கள் மணமுறை 'களவுக் கூட்டம்' என்கிறது. ஐவகை நில மக்கள், நால்வகை வர்ணத்தார், வணிகர் மணமுறை, அவர் தம் வழக்க ஒழுக்கங்கள் சில காட்டப் படுகின்றது சிலப்பதிகார வழி நின்று.

152—அ) 'சிலப்பதிகாரம் பற்றி இளங்கோ' நா. வானமாமலை "தமிழ் வரலாறும் பண்பாடும்" — பக்: 91. மு. ப. 1966. நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 6/30 மவுண்ட் ரோட், சென்னை-2. விலை: ரூ: 3—00.

இளங்கோவின் நோக்கம் பதிகம் கூறும் மூன்று உண்மைகளைப் பாடுவதன்று. அக்காலச் சமுதாய, அரசியல், பண்பாடு இன்ன பிறவற்றை எடுத்துக் காட்டுவதே அவரின் முக்கிய நோக்கமாக அமைகின்றது என்பதைச் சில சான்றுகளுடன் கட்டுரை விளக்கிச் செல்கின்றது.

153) 'சிலப்பதிகாரம் மணிமேகலை' வித்துவான் அ. கிருஷ்ணமூர்த்தி, "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 18; பரல்: 8; பக்: 376.

சிலப்பதிகாரம் – மணிமேகலைக் காவியங்கட்குள்ள ஒற்றுமை வேற்றுமைகளாக 54-எண்ணம் தொகுத்து அளிக்கப் படுகின்றது.

154) 'சிலப்பதிகாரமும் அவலச் சுவையும்' தே. ப. பெருமாள் "செந்தமிழ்ச் செல்வி." சிலம்பு: 18. பரல் 9. பக்: 407.

சிலப்பதிகாரம் பழந்தமிழரின் திருந்திய வாழ்வினையும், பொருந்திய நேர்மையினையும், விரிந்த மனப்பான்மையையும், வாணிபச் சிறப்பையும், தொழிலின் ஏற்றத்தையும், நாகரிக முதிர்ச்சியையும், வீரத்தின் விளைவையும் வெற்றியின் உயர்வையும், கலையின் தேர்ச்சியையும், கவின்பெறக் காட்டுவது. சிலம்பின் கதை வடமொழிக் கதையன்று. சிலம்பு நூலார் காலத்துத் தமிழகத்து நடந்த கதை. புகார்க் காண்டம் இன்பச் சுவையுடையது. மதுரைக் காண்டம் துன்ப, வீரச் சுவைகளுடையது. வஞ்சிக்காண்டம் வீரச் சுவையுடையது. பிற சுவைகளும் முக்காண்டத்தும் விரவி வந்துள்ளன. சிலம்பின் அமைந்த அவலச்சுசுவை பெரும்பான்மையும் இழவால் (இழிவே இழவே அசைவே வறுமையென) ஏற்படுவதாம். கண்ணகி அவலம் பல காட்டுக்களால் விளக்கப்படுகின்றது. உலக இலக்கியங்களிலே

சோகத்தைப் பிழிந்து வடிகட்டிக் காட்டும் எந்தக் காவியத் திற்கும் சிலம்பு இளைத்ததன்று' என்பது ஆசிரியர் துணிபு.

155) 'சிலப்பதிகாரமும் சங்கீதமும்' நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை, "இசைத்தமிழ்"— மு. ப. 1943, தமிழ்ப்பண்ணை, சென்னை. விலை: ரூ. 1.80.

சிலம்புச் சிறப்புபற்றித் திரு. தி. செல்வக்கேசவராய முதலியார், டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் கருத் துரைகள் காட்டப்பட்டு, அரங்கேற்று காதை, நாடக அரங்கம், அரங்கம் இருந்த இசைவாணர் இசைக்கும் திறம் எடுத்துக்காட் டப்படுகின்றது. அடியார்க்கு நல்லார் காலத்துத் தமிழ் மக்கள் தமிழ் நூல்களின் பெயர்களை வடமொழிப் பெயர்களால் அழைத் தனர். இசைக்கலைபற்றிய பல தனித் தமிழ்ச் சொற்கள் பல வடமொழிப் பதங்கள் பெற்று வழங்கும் வழக்கம் அடியார்க்கு நல்லார் காலத்து வந்துவிட்டதென்பது கட்டுரையால் எடுத்துக் காட்டப்படுகின்றது.

156) 'சிலப்பதிகாரமும் திருமணமும் இல்வாழ்க்கையும்' டாக்டர் மா. இராசமாணிக்கனார். "செந்தமிழ்" தொகுதி: 52 பகுதி: 7. பக்: 273

சோழநாடு, பூம்புகார், அதன் வணிகச் சிறப்பு, காதல் மணம், திருமண நிகழ்ச்சி, இல்வாழ்க்கை, இன்ப வாழ்க்கை — இவை மங்கலவாழ்த்துப் பாடல், மனையறம்படுத்தகாதை இவை கொண்டு பேசப்படுகின்றன.

157) 'சிலப்பதிகார மும்மைச் சிறப்பு' த. நிர்மலா. "இள வேனில்" (கை எழுத்துப் பிரதி)— பக். 21. 1971. தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக்கழகம்.

சிலம்பின் முத்தமிழ்ச் சுவை, மூன்று சுவை, முக்காண்டம், முந்நாடு இணைப்பு, மூன்று கற்பரசிகள், மூன்று வழியும் பொய்கையும் (மாங்காட்டு மறையோன் கூறும்) கண்ணகியின் முத்திற இயல்பு (ஆறிய, சீறிய, தெய்வக் கற்பு) மூன்றுவதாகக் கவுந்தி வந்திணைந்து வழிப்போக்கிலும் மூன்று இணையும் முறை இவற்றை எடுத்துக்காட்டிக் கட்டுரை விளக்குகின்றது.

158) 'சிலப்பதிகாரமும் வெள்ளிக்கிழமையும்' கே. எஸ். மகாதேவன். "தமிழ்ப் பொழில்" துணர் 36. மலர் 6. பக்; 166

கி. பி. 650–ல் ஞானசம்பந்தர் ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனியாகிய கோள்களைக் குறிப்பர். ஞாயிறு, புதன், வெள்ளி, திங்கள், செவ்வாய், வியாழன், சனி தொலைவு அடிப்படை வரிசை. சனி, வியாழன், செவ்வாய், ஞாயிறு, வெள்ளி, புதன்—எகிப்திய நாள் வரிசை. இவ்வகுப்பு நாளின் முதன் மணி சனி, அடுத்து வியாழன், செவ்வாய் என மணிக்கணக்கு அடிப்படையில் அமைந்துள்ளன. மணிக்கணக்கைப் பார்த்து நாட்களின் 'பெயர் வட்டம்' அமைத்து அவ்வடிப்படையில் 'வெள்ளி வாரத்து' எனச் (கிழமை) சிலம்பில் வருதலான் சிலம்பின் காலம் கி. பி. 8–ம் நூற்றாண்டென்பர் வையாபுரிப்பிள்ளை. இது பொருந்தாவென்றும், கி. பி. 650–ல் 'நாட்களின் பெயர் வட்டம்' அடிப்படையில் கிழமையமைத்தல் அமைந்துவிட்டதென்பது — நாள் வட்டச் சுழற்சி கொண்டு ஞாயிறு, திங்கள்...சனி' நிரலே அமைத்துக்காட்டி, விளக்குவர். கிழமைப் பெயர் கல்வெட்டில் இந்தியாவில் கி. பி. 471–ல் வந்தது என்றும், மக்கள் வழக்கில் கி. பி. 800–ல் அமைந்தது என்றும், எனவே இம் மக்கள் வழக்கிலமைந்த கிழமைப் பெயர் சிலம்பில் வருதலின் சிலம்பு காலம் கி. பி. 8–ம் நூற்றாண்டு என்பர் வையாபுரிப்பிள்ளை. இதனை மறுத்து கல்வெட்டில் 471–ல் அமையவேண்டுமாயின் மக்கள் வழக்குப் பெறாமல் அமைந்திருக்க முடியாது எனக் காட்டி, எனவே சிலம்பின் காலம் பிற்பட்டதென்பது பொருந்தாவென்பர்.

159) 'சிலம்பில் இரு சுடர்' தரணி பாஸ்கர். "இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டு ஆராய்ச்சி செயல்முறைக் கருத்தரங்கு"— 3–ம் தொகுப்பு: பக்: 86, 1968. உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழகம்

இரு சுடருக்குக் காப்பியத்தில் முதலிடம் கொடுத்த பெருமை இளங்கோவைச் சாரும். இதற்குத் தனித்தனிக் கோயில்கள் இருந்தன. இரு சுடரும் கடவுளும், இரு சுடரும் காப்பியத் தலைவர்களும், இரு சுடரும் புகாரும், அந்திமாலைச் சிறப்பு, சிறு பொழுது, நிலவால் இன்ப துன்பம், கதிரவனும் கண்ணகியும், அணிநயம், பழக்கவழக்கம், என்னுந் தலைப்புக்களில் இரு சுடர் பெறுகின்ற இடம் (சிலம்பில்) பேசப்படுகின்றது.

160) 'சிலம்பில் ஊழ்வினை' ஆ. செபரத்தினம். "இலக்கிய ஒளி"—பக்: 53 மு. ப. 1962. ஆ. செபரத்தினம், பெருமாள்புரம், நெல்லை.

கோவலன், கண்ணகி வாழ்வில் ஊழ்வினையின் செயல், மதுரை நகர்க்குற்ற ஊழ்வினை, பாண்டியனைச் சூழ்ந்த ஊழ்வினை பேசப்படுகின்றது.

161) 'சிலம்பில் ஒருநாள் கூத்து' டாக்டர். மொ. அ. துரை அரங்கசாமி. "கந்தன் இனியன்" — பக்: 168. மு. ப. 1967. மீனாட்சி புத்தக நிலையம், மதுரை — 1. விலை: ரூ. 3—50.

கொலைக் களக் காதை, ஆய்ச்சியர் குரவை, துன்ப மாலை, ஊர் சூழ்வரி, வழக்குரை காதை, வஞ்சினமாலை, அழற்படு காதை, கட்டுரைக் காதையாகிய எட்டுக் காதைகளில் நிகழும் நிகழ்ச்சிகளான, ஆயர் சேரியில் கண்ணகி கணவனுக்கு உணவு படைத்தல், கோவலன் சிலம்பொடு மதுரை சென்று கொலைப்படுதல், ஆய்ச்சியர் குரவையாடுதல், கண்ணகி காவலன் முன் வழக்காடி வெல்லல், காவலனும் தேவியும் இறந்துபடுதல், கண்ணகி மதுரைக்கு எரியூட்டி நீங்கல் ஆகிய இவ்வெல்லா நிகழ்ச்சியும் ஒரே நாளில் நிகழ்ந்தன. ஒரு நாட் கூத்தேயாம். கண்ணகி, கோவலர் கண்ட கனவு நள்ளிருள் அமயம். காவலன் தேவி கண்ட கனவு கடையிருள்யாமம். எனவே உடன் பலிக்கின்றது. இவை கட்டுரை காட்டும் செய்திச் சுருக்கம்.

162) 'சிலம்பில் கனவு' ஆ. செபரத்தினம். "முருக தனுஷ்கோடி மணி விழா மலர்" — பக்: 86.

சிலம்பில் வருகின்ற மூன்று கனவுகள் பற்றிக் கட்டுரை அமைகின்றது. கண்ணகி கனவு மேலும் அவள் பல கொடுந் துன்பங்களை ஏற்க வேண்டும் என்ற முன்னறிவிப்பாக அமைகின்றது. பாண்டியன், அவன் தேவியின் அச்சமிகு அவல நாடகத்தின் உடனடித் தொடக்கமும், பின்னணியுமாக இருப்பது பாண்டிமா தேவி கனவு. கோவலன் கனவு அவன் சாவு உறுதி என்பதை அவனுக்கு முன்னறிவிக்கின்றது. முன்னைப் பழம் பிறப்பில் அணிகலன் விற்க வந்த சங்கமனை ஒற்றன் எனப் பொய்க் குற்றம் சாற்றி அவனைக் கொல்வித்த பாவத்தின் விளைவிற்குத் தப்ப விடாமல், அவன் மதியை நலிவுறுத்தி, வாயைக் கட்டிச் செய விழக்கச் செய்தது அவன் கண்ட கனவே.

163) 'சிலம்பில் கனவு' சே. பீ. டாக்டர் நசீம்தீன். "இளவேனில்" — பக்: 17. 1972. இளங்கோ மன்ற வெளியீடு. தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக் கழகம். விலை: ரூ: 4—50.

கனவு பற்றிய பண்டைக்கால நம்பிக்கை, பிளாட்டோ, அரிஸ்டாட்டில், லைப்னிட்ஸ், பிராய்டு, யுங், ஆட்லர், சமயத்தார், கருத்துக்களைக் காட்டி அவ்வழிச்சிலம்பில் கனவு நோக்கப்படுகின்றது. கண்ணகி இரவு மூன்றும் சாமத்துக் கனவு கண்டிருக்க வேண்டும். 'கோவலன்' நள்ளிருள் யாமத்துக் கனவு கண்டதாகக் கூறுதலின், அவன் புறஞ்சேரி வரக் காலையாகிற்றாகலின்—அவன் புறஞ்சேரியில் இருக்கும் ஞான்று கனவு கண்டானல்லன். பயணத்தின்போதே நனவுபோலக் கனவு கண்டிருக்கவேண்டும். பாண்டிமாதேவி கனவு கனு நூற்படி பகற்கனவாகவே இருந்திருக்கவேண்டும். மூன்று நீதிகளும் இம் மூன்று கனவுகளில் உணர்த்தப்படுகின்றன.

164) 'சிலம்பில் நாயகன்' புலவர் செந்துறை முத்து, "இலக்கிய நாயகர்கள்"—பக்: 5. மு. ப. 1963. பசவேஸ்வரா பிரசுரம். தவுலதாபாத், கிருஷ்ணகிரி, விலை. ரூ: 2.

இலக்கியத்தின் விதை, சிலம்பின் செழுமை, கோவலன் குடிப் பிறப்பு, கோவலன் திருமணம், கோவலன் வாழ்க்கை முறை (கண்ணகி, மாதவியொடு), நாயகன் கலக்கம் (கொலைக் களக்காதையில் கண்ணகியிடம் விடைபெறும் போது) நாயகனின் நற்பண்புகள் (மாடலன் கூறுவன) — இவை கட்டுரையுள் அடங்குவன.

165) 'சிலம்பில் கால உணர்வு—ஒரு குறிப்பு, டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், 1970. "தமிழ்த்துறை ஆண்டு வெளியீடு" (Journal) தொகுதி: 1; பக்; 7. கேரளப் பல்கலைக் கழகம், திருவனந்தபுரம்.

ஒரு நிகழ்ச்சி சிறு கதைக்குக் கரு; வாழ்க்கையின் ஒரு பகுதி புதினத்தின் கரு; வாழ்க்கையின் முழு அமைப்பு காப்பியக் கரு. சிலம்பு சுமார் 25 ஆண்டின் நிகழ்வைத் தருவது. பதினெட்டுக் காதைகள் சுமார் எட்டு நாள் நிகழ்வைக் குறித்து அமைந்துள்ளன. இளங்கோவடிகளும் கால உணர்வும், காதைகளும் கால அமைதியும், கால மாற்றம், காப்பியச் சுவையும் கால மாற்றமும், பாத்திரப் படைப்பும் கால அமைதியும் — என்னும் தலைப்புக்

களில் கட்டுரை விரிவடைகிறது. 'காப்பியத்தின் கால அளவை அறுதியிட்டு நோக்குமபோது, காப்பிய அமைப்பிற்கும், சுவைக் கும் ஏற்ப அடிகள் இதனை அமைத்த நிலையும், இதனோடு பொருந்திப் பாத்திரப் படைப்பின் பண்பை உய்த்துணர வைத்த நுட்பமும் அறியலாம்' என்று கட்டுரை கால உணர்வையும், காப்பிய அமைப்பையும், பாத்திரப்படைப்பையும் இணைத்து நுட்பம் காணுகின்றது.

166) 'சிலம்பில் பெண்மை' டாக்டர், தா. வே. வீராசாமி, ''வெற்றியின் இருமுகம்'' — பக்: 104. மு. ப. 1969. மொர்க்குரி புத்தகக் கம்பெனி, கோவை—1. விலை: ரு. 2.50.

பெண்மையின் மணம் நூலின் வாயிலிலேயே வீசுகின்றது. கனாத்திறம் உரைத்த காதை நூலின் தலைச்செல்வியின் பெண்மை ஆற்றலை நன்குணர்த்துகின்றது. பெண்டிர் உடை மாற்றங் கூறும் (மாலை வண்ணனை) காதை, கதைத் தலைவியின் வாழ்வு மாற்றம் கூறும் தொடக்கமாக அமைந்துவிடுகின்றது. இக காதையில் வரும் மாலதி கதை, மகவு இலா நிலையில் ஆண்கள் வேறு மணம் தேடும நிலை, பெண்மை ஆண்மைப் பிடியிற் சிக்கித் தவித்த நிலை காட்டும். கணவற் பிரிநத தேவந்தி கதை ஆண்கள் புண்ணிய நீராடல் ஏதுவாகப் பிரிந்தனர் என்பதைக் காட்டும். தேவந்தி கணவற்பெறக் கோயில் வழிபாடு செய்வது தெய்வம் தொழா அள் நெறியின் மாறுபாடு. வரப்போகும் துன் பத்தைக் கனவு அறிவிக்கும் என்ற மகளிர்நம்பிக்கையைக் கனவு நிகழ்ச்சி உணர்த்தும். 'தெய்வம் தொழுவம் வம்மின்' என் றற்குப் 'பீடன்று' என்றுரைத்தது கோவலன் 'அன்பால் வருவன்' என்ற அவள் நம்பிக்கையினைத் தெளிக்கும் நிலைக்களன். மாலதி, மாற்றாள் குழவி பற்றி விரித்தது கண்ணகி அடிமனத் தாழ்ந்துகிடந்த மகவாசையைச் சுட்டும். இதன் வெளிப்பாடு 'ஈன்ற குழவி எடுத்து வளர்க்குறூஉம் சான்றோரும் உண்டு கொல்' என்ற கண்ணகி உரையில் அமைகின்றது. இவை கட்டுரை காட்டும் கருத்துத் தெளிவுகள்.

167) 'சிலம்பில் மண்ணக மடந்தை' டாக்டர். ச. வே. சுப்பிரமணியன், ''ஆய்வு மலர்''—பக்: 102. 1972, கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை பழைய மாணவர் மன்ற ஆண்டு வெளியீடு. விலை: ரு. 10.

தொடர் நிலைச் செய்யுளாம் காப்பியம் நாவலின் முன்னோடி. பாத்திரப் படைப்பு நாவலின் வெற்றிக்கு அடிப்படை. காப்பி

யத்திலும் பாத்திரப் படைப்பு ஏற்றம் பெறல் வேண்டும். பின் நிகழ்வை முன் சுட்டல், முன்னிகழ்வைப் பின் சுட்டல், இவை சிறப்புத்தரும் காப்பிய உத்தி. சிலம்பில் மண்ணக மடந்தை வண்ணனை வருமிடங்கள் எடுத்துக்காட்டப்பட்டு, அவை கதை மாந்தர்களோடு இணைந்து செயல்படுகின்ற முறை விளக்கப்படுகின்றது. பின்னணி வாயிலாகக் கதை மாந்தரின் இயல்புணர்த்தும் அடிகளின் காப்பிய உத்தி, மணியாய் மிளிர்ந்து காப்பியத்தின் எழிலைப் புலப்படுத்தி நிற்கின்றது. சிலம்பில் மண்ணக மடந்தை வருமிடங்கள் ஆறு. [*4: 1-4; 5: 1-5; 13: 19-39; 16: 215-217; 23: 4-5; 25: 64*]

168) 'சிலம்பில் மலர்கள்' டாக்டர் சுப்பிரமணியன், ச. வே "காந்தி கண்ட மனிதன்"-பக்: 47-62. இரண்டாவது பதிப்பு: 1970 விற்பனை உரிமை: செயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோயில் விலை ரூ. 2-50

மலரின் தன்மை—மலரும் மனித உறவும்—மலரின் பயன்பாடு—மலரும் பண்டைத் தமிழர் இலக்கியமும்—மலரணியும் மரபு (ஆண், பெண்), மலரும் காமமும் — மலரும் மன்மதனும்—என மலரின் தன்மையும்—தொடர்பும் பேசப்படுகின்றன. கோட்டுப்பூ-கொடிப்பூ, நீர்ப்பூ — ஆகிய மூவகைப் பாகுபாடும்—தொடர்புடைய மூவகை வாழ்வும் எடுத்தியம்பப்படுகின்றது. அகவாழ்வின் அழகு, தூய்மை, மென்மை, நன்மணம் இவற்றிற்கு அடிப்படையாக அமைந்த பெண்ணின் பெருமையைத் தமது காப்பியத்தின் அடித்தளமாக அமைத்த இளங்கோ அதன் புறத்தோற்றத்தை மலர்களால் அலங்கரிக்கின்றார். கள்ளக் கமலம் திரிதல்-மாதவி மலரோவியம்—போன்ற ஓவியங்கள் எடுத்துக்காட்டப்படுகின்றன. சிலம்பு தரும் மலரோடு தொடர்புடைய அன்றைப் பழக்க வழக்கங்கள் சில சுட்டப்படுகின்றன. ஆண் அணிவது (மலர்த் தொகை) தார், பெண்ணணிவது மாலை, என்னும் பெயர்பெறும். மலர் அழகுப் பொருளாயும் — மங்கலப் பொருளாயும் பயன்பட்டது. பல்வகை மலர் கொண்டு சிலம்புச் செல்விக்கு அணிசெய்கின்றார் இளங்கோ என்பது கட்டுரை முடிவு. 'மலரின் பயன்பாடும், தன்மையும்' நன்கு விளக்கப்படுகிறது.

169) 'சிலம்பில் முரண்' செயராமன், வெ. "இந்தியப் பல் கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், 1970-இரண்டாவது கருத்த ரங்கு மலர்"—பக்: 419

மூவகைப் பாத்திரப் படைப்பு— 1. தவறே செய்யாதவர். 2. தவறு செய்தும் தவறில்லாராய்க் காட்டப்படுபவர். 3. தவறு செய்யாது பிறர் செய்த தவற்றைத் தனதாக உணர்பவர். கவுந்தி, கண்ணகி தெய்வப் பண்பு வெளிப்பட வாயிலாக அமைகிறார்— 'தவத்தோர் அடைக்கலம் தான் சிறிதாயினும் மிகப் பேரின்பம் தரும்' என்று கவுந்தி கூறிய வுரை பொய்யாகி அடைக்கலம் பெற்றார், பெறப்பட்டோர் அனைவரும் துன்புறுதலின் கவுந்தி சிறந்த தவத்தர் அல்ல என்று கூறத் தோன்றலாம்—கவுந்தி தவத்தர்—தவத்திலர் — என ஒருமுக முடிவிற்கு வர இயலா நிலையில் முரண்பாடு சிலம்பில் காணப்படுகின்றது. இம் முரண் பாட்டை இளங்கோ வைத்ததேன்? அவரையும் அறியாது இம் முரண் அமைந்துவிட்டதா? எனும் ஐய வினாவோடு விடை வேண்டி நிற்பதுபோன்று கட்டுரை முடிகின்றது. இதனோடு கவுந்தியடிகளின் சமண நெறி—பிறநெறி கேளாத மதப்பற்று, அவர் தம் படைப்பு கதையோட்டத்தில் பெறும் முக்கியத்துவ மும் பேசப்படுகின்றது. சிந்தனைத் திறன்—பிறர் சிந்தனையைத் தூண்டும் திறன் மிக்கதாகக் கட்டுரை அமைகிறது.

170) 'சிலம்பில் வஞ்சின மாலை' டாக்டர் சுப்பிரமணியன், ச. வே 1970 — "இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், இரண் டாவது கருத்தரங்கு மலர்"—பக்: 425

'வஞ்சினம்' அரசியல், அக இயல் — வாழ்வில் நிலையான இடம் பெறுவது. ஆடவர் வஞ்சினம் 'இன்னது பிழைப்பின் இது வாகுக'—என்பது. பெண்டிர் வஞ்சினம் 'யான் இன்னேன் ஆயின் இது செய்வேன்' — என்றுரைப்பதை வஞ்சின மாலை காட்டுகிறது. பத்தினியை ஏத்தும் பண்பு காப்பியம் முழுவதி லும் பொதுவாகவும், இக்காதையில் சிறப்பாகவும் ஆற்றப்பெறு கின்றது. ஏழு பத்தினிப் பெண்டிரை — 1. கணவன் என்ற கருத்துக் கோளுக்கு அளித்த மதிப்பு காரணமாகத் தம்மை இழக்கத் துணிந்தவர். 2. தன்மேல் சார்ந்த பழி அல்லது இழப்பினால் தூண்டப்பெற்று, ஆற்றல் கடந்து செயல் புரிந்தோர் அல்லது அவலங் கொண்டோர். 3. கணவன் பிரிவால் தம்

இயக்கம் இழந்தோர்—என்று எழுவரையும் மூவகையில் அடக்கலாம். கற்பு நிலையில் கண்ணகியைத் தனித் தமிழ்ப் பத்தினியாக அடிகள் உயர்த்தியுள்ளார். அறம் கனன்று, அற மற்றவற்றைச் சிதைக்கும் கடவுட் பணியில் நிலைக்கின்றாள் கண்ணகி. கட்டுரையில் திறனாய்வுப் போக்கு உயர்நிலை பெறுகிறது.

171) 'சிலம்பில் வென்ற சேயிழை' டாக்டர் சிதம்பரநாதன், அ. 1961—"டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளிவிழா மலர்"-பக்: 263

'சிலம்புள கொண்ம்' என்று கூறிச் சிலம்பினால் தன் கணவனை வென்றவளாகிவிடுகின்றாள் கண்ணகி. 'சிறுமுதுக் குறைவி'—என்று முன்னிற்கும் கண்ணகியைப் படர்க்கை மொழியில் விளித்துப் பகர்ந்தான் கோவலன் என்பதால் அவள்பால் அவன் கொண்டுள்ள மதிப்பு புலனாம் — கோவலன் 'சிலம்பின் ஒன்று கொண்டுபோய்'—என்பதிலும், 'சித்திரச் சிலம்பின் செய்தியை எல்லாம்' — பொற்கொல்லன் காணுங்காலும் 'சிலம்பு' சொல் ஒருமைப் பொருளில் பயன்படுத்தப்படுகிறது. 'கோயிற் சிலம்பு கொண்ட கள்வன்' இவண் சிலம்பு பன்மைப் பொருளில் அமைந்து கிடக்கின்றது. 'கொல்லச் சிலம்பு கொணர்க' எனச் சொல்ல நினைந்து 'கொன்றச் சிலம்பு' என வாய்குழறிக் கூறிவிட்டான் பாண்டியன் என்பர் அடியார்க்கு நல்லார். இரட்டைச் சிலம்பு கொடுக்க முன்வந்து கணவனை வென்றவள் ஆகின்றாள். ஒற்றைச் சிலம்பு ஏந்திச் சென்று காவலனை வென்றவள் ஆகின்றாள் கண்ணகி.

172) 'சிலம்பிலே செங்குட்டுவன்' விமலானந்தம், மது. ச. "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 34 பரல் 11, 12 பக்: 531, 563

சிலம்பில் செங்குட்டுவனின் பங்கு — பாத்திரப் படைப்பு பேசப்படுகிறது. செங்குட்டுவனின் குணம் நாடும் கொள்கை—கடமையுணர்வு — பெண்மை போற்றும் பெற்றி—அடைக்கலம் பேணும் அருள் — மானம் பெரிதெனமதித்த பண்பு—நின்ற சொல்லினனாதல் — சான்றோர் உரை போற்றும் சால்பு—விறல் மேம்பாடு—சமயப் பொது நோக்கு — மக்கள் நலம் போற்றும் மாண்பு—ஈத்துவக்கும் இனிமை—கூடி வாழும் குணநலன்—மூவேந்தரின் முதன்மை பெறும் சிறப்பு—ஆகிய இன்னோரன்ன பண்பு நலன் பேசப்படுகின்றது.

173) 'சிலம்பிற்காணும் வழிபாட்டுப் புதுமை' பரிமணம், அ. மா. "நான்காவது கருத்தரங்கு மலர்" — பக்: 663 'அகில இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்' 1972. கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு விலை ரூ. 20

மறக்குடிப் பெண்டிரின் வீரம் பாராட்டப்பெற்றதேனும் அவர்கட்கு நடுகல் அமைக்கும் வழக்கம் சங்க காலத்திருக்க வில்லை. வீரர்களுக்கே அமைக்கப்பட்டு வந்த நடுகல் அமைப்பு முறையினை மாற்றிக் கற்பிற் சிறந்தோர்க்கும் நடுகல் அமைத்துப் போற்றி வழிபடும் புதுமையினை மேற்கொண்டவன் செங்குட்டு வன். அவட்குக் கோட்டமும் அமைத்து அங்கு நாளும் பூசனை நடைபெறவும் வேண்டுவன செய்தான். இவ்வழிபாடு புதுமை யுடையது.

174) 'சிலம்பின் கதைக்கரு' காசிராசன், இரா, "Journal of the Department of Tamil"—p: 66 vol: III, University of Kerela, Trivendrum 1972

சிலம்பில் வருவனவனைத்தும் உண்மை வரலாறு அன்று; சிலம்பு கதை மக்கள் வழக்கில் வழங்கிவந்ததன்று; நற்றிணை(216) குறிக்கும் 'திருமாவுண்ணி'யைக் கண்ணகியாகக் கொள்ள முடியாது. சிலப்பு தொன்மை வகை இலக்கியமன்று. சிலம்பு இளங்கோவின் படைப்புக் கதையே. இளங்கோ காலம் சங்க இலக்கிய இறுதிக் காலம். இளங்கோ நோக்கம் வரலாறு பாட வேண்டுமென்பதே—வரலாறு பாடக் கோவலன், கண்ணகி அக வாழ்வை வழிமுறையாகக் கொள்கின்றார். பத்தினித் தெய்வ வழி பாடும், அது எடுத்துச் சிறப்புச் செய்த செங்குட்டுவனின் இமய வெற்றிச் சிறப்புமே இளங்கோவிற்குச் சிலம்பு பாடக் 'கதைக் கரு'வாகி—அப் பத்தினித் தெய்வமே சிறப்புப் பாத்திரமாகவும் அமைகின்றது.

175) 'சிலம்பின் சிறப்புக்கள்' இராசாராம், த. "இளவேனில்" பக்: 28 (கையெழுத்துப் பிரதி) 1970. தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம்.

சிலம்பு கதை ஒன்றே தமிழ் மணங்கமழ்வது. முதற் பொருட்டொடர் நிலைச் செய்யுள் சிலம்பு. இது நாடகக் காப்பி யம்—சிலம்பு ஒன்றே குடிமக்கள் காப்பியம். பெண்மைக்கு இழைக்கப்பட்ட கொடுமையைச் சாடியது. புதிய வாழ்த் துடையது எனக் கட்டுரை சிலம்பின் சிறப்பு பற்றிய தொகுப்புரையாக அமைகின்றது.

176) 'சிலம்பில் முச்சுவை' வித்துவான் வேங்கடராமச் செட்டியார், செ. "முல்லையும் பூத்தியோ"-பக்: 115. மு. ப. 1963; இ. ப. 1967. பாரி நிலையம், சென்னை-1

சிலம்பின் புகார், மதுரை, வஞ்சிக்காண்டச் சிறப்புச் சுவைகளான இன்பம், துன்பம், பெருமிதம்—ஆகிய மூன்றனைத் தொல்காப்பியர் வழி நின்று, ஒவ்வொரு சுவையையும், அவை தோன்றக் காரணமான நான்கு வழி கொண்டு நான்காகப் பகுத்து (தொல் வழி நின்று) அவை ஒவ்வொன்றிற்கும் சிலம்பினின்று எடுத்துக் காட்டுக் காட்டிச் செல்கின்றார்.

177) 'சிலம்பின் யாப்பமைதி' அன்னி மிருதுல குமாரி தாமசு "நான்காவது கருத்தரங்கு மலர்" — பக்: 506, அகில இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் 1972. கேரளப் பல்கலைக் கழகத் தமித்துறைச் சார்பு வெளியீடு விலை ரூ. 20

தொல்காப்பியம் கூறாத, ஆயின் வழிவகுத்த பல பாவேற்றுமையும், வளர்ச்சியும் சிலம்பிலுள—பாவின் வேறுபட்டு உரை கலந்த வகை உரைப்பாட்டு மடை — இவற்றில் ஆசிரியச் சாயல் காணப்படுகின்றது. ஒரே காதையில் பல பாவமைப்பு சிலம்பிற்குரிய தனிச் சிறப்பு.—தமிழிலக்கியத்தில் முதன்முறையாக எண்சீரடி சிலம்பில் பிறந்தது — இது பின்னர் எண்சீர் விருத்தம் தோன்றக் காரணமாயிற்று. அறு சீராலமைந்த தாழிசை—பிற்கால ஆசிரிய விருத்தம் தோன்றக் காரணமாயின—'அயன் மயங்கிசைக் கொச்சகக் கலி' சிலம்பில் மட்டுமே உண்டு. இது ஒப்பாரி இலக்கியத்திற்குத் தோற்றுவாய். வழக்குரை காதை உறழ்கலிச் சாயல் பெற்றிருக்கின்றது. தனி வெண்பாக்களை இலக்கியத்தில் புகுத்தியவர் அடிகளே.

178) 'சிலம்பினைப் போற்றுவோம்' இயேசுதாஸ் த. "இலக்கியச் சிந்தனைகள்"—பக்: 1 மு. ப. 1964. த. இயேசுதாஸ், ஸ்காட் கிறிஸ்தவக் கல்லூரி, நாகர்கோயில். விலை ரூ. 2

சிலம்பு முதற் காப்பியம் — முத்தமிழ்க் காப்பியம், மக்கள் விரும்பும் காப்பியம்—எதிர்த் தலைவனில்லாக் காப்பியம்—புத்துலகத்திற்கு வழிகாட்டி — தேச ஒருமைப்பாடு பேசுவது—சமயப் பொது நோக்குடையது—அரசியலுக்கு முக்கியத்துவம் கொடுத்திருப்பது — பெண் பெருமை பேசுவது — கட்சனின் (Hudson) "Literature is born out of life, belongs to life and exists for life"— என்ற இலக்கணத்திற்கு இலக்கியமாவது

சிலம்பு என்பர். இக் கட்டுரைத் தொகுப்பில் — திருப்பு மையம் என்ற தலைப்பில் சிறு பகுதியாக வரும் சிலப்பதிகாரம் உட்டலைப்பில்—கானல்வரி சிலம்பின் திருப்புமையம் என்று சுட்டுகின்றார்.

179) 'சிலம்பு' செல்லூர்க் கிழார். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 26 பரல் 9 பக்: 434

கண்ணகியார் தம் காலில் அணிந்த செம்பொற்சிலம்பு இளங்கோ வாயாற் புகழும் பெருமை பெற்று, அது காரணமாக அறத்தையும், கற்பு நெறியையும், ஊழ்வலியையும் காட்டி, என்றுமுள தென்றமிழ் மொழியைச் சிறப்பித்து நிற்கின்றது— என்பது கட்டுரை காட்டும் கருத்து.

180) 'சிலம்புச் சிரிப்பு' ந. வீ. செயராமன். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 39 பரல்: 9 பக்: 423

இன்பியல் நிலையைத் தோற்றுவிக்கும் கூறுகள் பலவற்றுள் சிரிப்பும் ஒன்று. கண்ணகி நகை முகம் (நலக்கேள் முறுவல் நகை முகம் காட்டி) அகத்துயர் வெளிப்படுத்தும் புறக் குறி. கண்ணகி, மாமன். மாமியிடம் காட்டிய வேதனைச் சிரிப்பு, 'சிலம்புள கொண்ம்' என்று கூறித் துன்பத்தை மறைத்துக் கணவனிடம் சிரித்த போலிச் சிரிப்பு—மதுரை மூதூர் யாங்குளது என வினவிச் சிரித்த அறியாச் சிரிப்பு—சாவினிவுரை கேட்டுச் சிரித்த இகழ்ச்சிச் சிரிப்பு—இவை காட்டப்பெறுவன. போலிச் சிரிப்பு கடமையுணர்வையும், அறியாச் சிரிப்பு உரிமையுணர்வையும், இகழ்ச்சிச் சிரிப்பு மிக நெருங்கிய உரிமை (கணவன், மனைவி) யுணர்வையும் காட்டும்.

181) 'சிலம்புச் செல்வம்' டாக்டர் சேதுப்பிள்ளை, ரா. பி. "தமிழின்பம்" — பக்: 39. 2-ம் பதிப்பு 1951 புத்தக நிலையம், திருச்சி. விலை ரூ. 3

'காதலும் கற்பும்' 'கண்ணகி கூத்து', 'சிலம்பின் காலம்' என்ற மூன்று தலைப்புக்களில் கட்டுரை அமைகின்றது. 'காதல்' சொல்விளக்கம்—'காதல்' என்பது உணர்ச்சி. 'கற்பு' என்பது ஒழுக்கம். கற்புடைய மாதரிடம் பெண்மையும் உண்டு; மனத் திண்மையும் உண்டு. பொறுக்கும் திறமும் உண்டு; மாறுபட்டோரை ஒறுக்கும் திறமும் உண்டு. கண்ணகியிடம் இவ்விரு தன்மையையும் பார்க்கிறோம். 'கண்ணகி கூத்து' தலைப்பில் 'காவியக் கண்ணகி' 'கோவிலன் நாடகக் கண்ணகி' வேறுபாடு

சுட்டப்படுகிறது. சிலம்பின் காலம்—தமிழ்நாடு சிறந்த நிலையில் இருந்த காலம். காவிரிப்பூம்பட்டினம் பொருள் வளமும், தெய்வ நலமும் பெற்று விளங்கிய காலம் சிலம்பின் காலம்—பரணர் காலம் சிலம்பு காலம்—கயவாகுவின் (கி. பி. 176–193) காலமே சிலம்பின் காலம். கி. பி. 3-ஆம் நூற்றாண்டு முதல் 9–ம் நூற்றுண்டு வரை தமிழ் நாட்டில் ஆண்ட பல்லவர் பற்றிய குறிப்பு சிலம்பில் இல்லை. எனவே அதற்கு முந்தியது சிலம்பின் காலம்.

182) 'சிலம்புச் செல்வம்' பெருமாள், வ. "தமிழ் இலக்கியச் சோலை"—பக். 51 மு. ப. 1969 கலைமகள் வெளியீடு, விலை ரூ. 2-25

காதலற் பிரியாமல் கவவுக்கை நெகிழாமல் தீதறுக என்ற எதிர்மறை வாழ்த்தில்—பின்னிகழ்வை முன்னரே குறிக்கின்றார். இவ்வாறு வருகின்ற பின்னிகழ்வு உணர்த்தும் குறிப்பு மொழி பல எடுத்துக்காட்டப்படுகிறது. 'காப்பிய இயைபு' தலைப்பில் கண்ணகியின் பின்னய உயர்வு நிலை முன்னரே பல்லோர் மொழியால் எடுத்துக்காட்டப்படுதல் விளக்கப்படுகின்றது.

183) 'சிலம்புச் செல்வியும் சிங்கள இலக்கியமும்' நா. சுப்பிரமணியன். "இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டு ஆராய்ச்சிச் செயல் முறைக் கருத்தரங்கு"– 3-ம் தொகுப்பு பக்: 156 1968. உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழகம்

'இராஜ வலி' நூல் கசபாகு சோழனை மிரட்டிப் பத்தினித் தெய்வத்தின் சிலம்பு பெற்றான் என்கின்றது. பத்தினி வழிபாடு தமிழ்ப் பூசை முறை தழுவியே சிங்களத்து நடத்தப்படுகிறது. பத்தினிக் கதைகள்—வயந்தி மாலா அல்லது மாதேவி கதை (வயந்தி மாலா நூல் கூறும்). மாதேவி கத்தாவா (419 செய்யுட்கள் கொண்டது), கோள்முறை சாகித்தியம் அல்லது காவல் முறை இலக்கியம், (கண்டிக்காலம்) தெய்வந் துறைத் தேவாலயம், சென்னையில் சிங்களச் சுவடிகள், பாளங்க ஹெல்ல, பத்தினி ஹெல்ல, வித்திய காவியம், சத்பத்தினி கத்தாவா, பாண்டி நெத்த பெக்கு உபத்த, கன்னூரன் கத்தாவ, தெத் பத்தின, ஆகிய சிங்கள இலக்கிய, மக்கள் வழக்குக் கண்ணகி கதை பற்றிய செய்திகளும் கோவிலன் கதை, கோவலன் நாடகம், ஆகிய தமிழ் நாட்டு வழக்குக் கதை, நாடகம் பற்றியும், அவை கூறும் கருத்துக்கள் பற்றியும் கட்டுரை விளக்கிச் செல்கின்றது.

184) 'சிலம்பு சிலம்பியது' டாக்டர் சாலை இளந்திரையன் "சமுதாய நோக்கு"—பக்: 91 மு. ப, 1970 தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5 விலை ரூ: 3

சிலம்பின் காலம் பற்றிய இருவேறு கருத்து வேறுபாடு சுட்டப்பட்டுச் சிலம்பின் காலம் அகநிலையில் இக்கட்டுரைக்கண் ஆராயப்படுகின்றது. தன்னேரில்லாத் தலைவனே காப்பியத் தலைவன் என்னும் நிழல் தமிழ் இலக்கியத்தில் விழுவதற்கு முன் படைக்கப்பட்ட யதார்த்த நிலைக் காப்பியத் தலைவன் கோவலன். குறைகளும் நிறைகளும் உடையவன். கண்ணகியும் ஓர் யதார்த்த நிலைப் படைப்பே. மனைவிக்குரிய கடமையினின்று நாம் தவறிவிட்டோம்; இனியப்படி நடந்துவிடக்கூடாது என்று நினைத்தவள் போல் பின்பகுதியில் அவள் செயல்படுகின்றாள். பிற பாத்திரப் படைப்புக்களும் குறைகளும் நிறைகளும் உடையனவாகவே அமைகின்றன. திணைத்தமிழ் வாழ்வு, வழிபாடுகள் முதலான ஆராயப்பட்டுச் சிலப்பதிகாரம் பல வகையான சமய நம்பிக்கைகள் பெருகித் தமிழ் வாழ்வே பெரிய மாறுதல்களுக் குட்பட்ட கி. பி. 4–ம், 5–ம் நூற்றாண்டிற்கு முந்திய தமிழகத் தைச் சித்தரிக்கிறது என்றும், கதை தழுவிய இலக்கியத்தை இதுவே தமிழில் தொடங்கிவைக்கிறது என்றும், தமிழ் இலக் கிய வரலாற்றில் சங்க கால முறையை ஒட்டிய எதார்த்த நிலைப் படப்பிடிப்பைக் கடைசியாகக் கையாண்ட நூல் இதுவே என்ப தும் கட்டுரையார் துணிபு.

185) "சிலம்புநெறி" டாக்டர். மொ. அ. துரை அரங்கசாமி. "பண்டைத் தமிழ்நெறி" – பக்: 130. மு. ப. 1956. 2—ம் ப. 1959. பழனியப்பா பிரதர்ஸ் சென்னை–5. விலை: ரூ: 3-25.

இன்பத் தூய்மைக்குரிய பத்தினி வழிபாடு கற்புடையாள் வழிபாடு எனும் சமய நெறியும், பொருட்டூய்மைக்குரிய நீதி வழு வாத் தத்துவத்தையும், அறத்தூய்மைக்குரிய ஊழுண்மையும் பதிகம் உணர்த்துகிறது. 'வையத்து வாழ்வாங்கு வாழ்வான் வானுறையும், தெய்வத்துள் வைக்கப்படும்' எனும் குறள்நெறி ஈண்டு வற்புறுத்தப் படுகிறது. கோவலன் முன்பின் ஆராய்ந்து தெளிதலில்லாத உணர்ச்சிமய மானவன். கண்ணகி ஆளுமையிற் சிறந்தவள். பாண்டியன் ஆளுமையும் ஒரு நிலைகொள்ளாது ஊச லாடிக்கொண்டே இருக்கின்றது. கண்ணகி ஆளுமை தன்னை (தன்னாற்றலை) வெளிப்படுத்துவதில் அமைகின்றது. சமநிலைப்

பண்பு, அமைதி, ஒற்றுமைக் காட்சி-இவை மாடலன். இளங்கோவிடம் உண்டு. அயல் நாட்டான், ஆதரவற்ற அநாதையைத் தயங்காது கொல்லும் அரசு மண்ணோடு மண்ணாகும். கண்ணகி பொறையுடைமை தவமாகும். கவுந்தி தன் சமணக்கொள்கையை மறந்து, கண்ணகியைப் பாராட்டி விடுகின்றார். பொறுத்தல்நெறி, ஒறுத்தல்நெறி, மறத்தல்நெறி-இவை சிலம்பு காட்டும் நெறியாம். 'குணமென்னுங்குன்றேறி நின்றார் சினம் கணமேயுங் காத்தலரிது,' என்பதற்கிணங்க கண்ணகி சினம் அமைகிறது. சிலம்புநெறி சமண நெறியன்று; சமயப் பொதுமைநெறி. பத்தினி அல்லது கற்புடையாள் வழிபாடே சிலம்பின் சமயநெறி. முதற்கண் ஞாயிறு, திங்கள் முதலான வாழ்த்தல் சமய வாழ்த்தன்று; அரச வாழ்த்தே. இவை முதலான கட்டுரை காட்டும் கருத்துக்கள்.

186) 'சிலம்பும் பரணியும்' (மொழிநிலை ஒப்பாய்வு) மு. பிளாரான்சு கேதரின். ''இளவேனில்''- (கையெழுத்துப் பிரதி) - பக்: 414) 1968. தமிழ்த்துறை, கேரளப் பல்கலைக்கழகம்.

சிலம்பு, பரணி மொழி முதல் எழுத்துக்கள் வருதலின் வேறுபாடு எடுத்துக்காட்டப் படுகின்றது. பொருளன் நிலை (Morph), பிறவினை இடைநிலை க்க், ச்ச், சிலம்பில் காணப்படுவது பரணியில் இல்லை. ட்ட், ற்ற், இடைநிலைகளே பரணியில் உள்ளன. சிலம்பிலுள்ள 'அல்' எதிர்மறை இடைநிலை பரணியில் இல்லை. வினையடிச் சொற்கள் சிலம்பினின்று வேறுபட்ட வினைவடிவங்கள் *160* கலிங்கத்துப் பரணியில் காணப்படுகின்றன.

187) 'சிலம்பும் சமுதாய வாழ்வும்' மா. ரா. இளங்கோவன் "செந்தமிழ்": தொகுதி: 52. பகுதி: 4. பக்: 115.

கோவலன் கண்ணகி காதலால் இணைந்தவர். கோவலற் பிரிந்த கண்ணகி அவலம், வேட்டுவர் வாழ்வு (வேட்: *10–19*), ஆய்ச்சியர் நம்பிக்கை (கொலை: *100–101*), குறவர் வாழ்க்கை (குன்றக் குரவை), செங்குட்டுவன் சூழுரை, மணஞ்செய நல்நாள்—பார்க்கும் வழக்கமும் நம்பிக்கையும், (மங்: *50–53*). வஞ்சின மாலை கற்புமகளிர் வாழ்வு, நாடகக் கலைக்கிருந்த உயர்சிறப்பு—இவை சுட்டப்படுகின்றன கட்டுரைக்கண்.

188) 'சூழ்வினைச் சிலம்பு' ஆ. சுப்பிரமணியன். "ஆராய்ச்சி"- மலர்: 1. இதழ்: 3. பக்: 353.

'எந்தச்சிலம்பு' கட்டுரையில் டாக்டர். வ. சுப. மாணிக்கம் அவர்கள் 'சூழ்வினைச் சிலம்பு' தேவி சிலம்பெனக் கொண்டு, அதுவே 'சிலம்பு' பெயர்க் காரணமாயது - எனக் குறிப்பது மறுக்கப்பட்டுக் கண்ணகி சிலம்பே பெயர்க்காரணமாயது-என்று நிறுவப்படுகின்றது. அரசனை அச்சுறுத்தும் அளவில் வணிகர் குலம் வளர்ந்து விட்டது என்பதைச் சிலம்பு காவியம் முழுவதும் இலைமறை காயாகச் சொல்லிச் செல்கின்றார். ஆட்சி, சட்டம், சமுதாய நெறியின் பிரதிநிதி என்ற நிலையில்—அது கொண்டு அரசன் வணிக குலத்தைப் பழிவாங்கினான் என்பதைக் கோவலனுடைய கதை, அவனுடைய முற் பிறப்புக் கதை விளக்கும். தொழில் வளர்ச்சியால் சமுதாய மாற்றம் ஏற்படுகிறது என்பதைக் கண்ட இளங்கோ அதைப் பிரதிபலிக்கக் கண்ணகி சிலம்பைக் காவியப் பெயராகக் கொள்கின்றார்.

189) 'செங்குட்டுவன்' வித்துவான். வே. க. ரங்காச்சாரி, "சேரவேந்தர் நால்வர்"- பக். 39. மு. ப. 1959. 4-ம் ப. 1965. மங்கள நூலகம், நுங்கம் பாக்கம், சென்னை-34. விலை: 95-பை.

செங்குட்டுவன் வெற்றிச்சிறப்பு, குணநலன், இவை சிலம்பு, பரணர் பாடல் வழிப்பேசப் படுகின்றன. அடுத்து, இச்செங்குட்டுவன் காலத்தெழுந்த இருபெருங் காவியங்களான சிலம்பு, மணிமேகலைக் கதைச்சுருக்கம் பேசப் படுகின்றது. சிலம்பின கதைச்சுருக்கம், 'கோவலன் கண்ணகி வரலாறு' என்ற தலைப்பில் இடம் பெறுகின்றது.

190) 'சென்ற கலன் எது?' அ. திருமால் இந்திரசிங் "இளவேனில்". பக்: 39. 1972. இளங்கோ மன்ற வெளியீடு, தமிழ்த் துறை, கேரளப் பல்கலைக் கழகம். விலை: ரூ: 4-50.

அந்தி மாலைச் சிறப்புச்செய் காதையில் (47—51) கண்ணகி அணியாது களைந்த சிலம்பு, மேகலை, குழை, இவையும், அணிந்த மங்கல அணியினையும் குறிக்கின்றார் இளங்கோ. 'சிலம்புள கொண்ம்'—என்பதால் அதுபோது அவளிடம் சிலம்பு இருந்தது தெளிவு—மங்கல அணியைக் (கட்டுரை: 18) கொற்றவைக் கோயில் உடைக்கின்றாள். காடுகாண் (205) காதையில் கண்ணகி

குழையணிந்த செய்தி அறியப்படுகிறது சிலம்பு, மேகலைகுழை, மங்கலஅணி—நான்கில் கண்ணகி கணவனொடு மதுரை புறப்பட்ட பின் சிலம்பு, குழை, மங்கலஅணி குறிக்கப்படுகிறது. மேகலை பற்றிய எந்தக் குறிப்புமில்லை. சிலம்பு முதலாகச் சென்ற கலன் (கனா: 74) என்று 'கலன்' ஒருமையில் சுட்டப்படுதலின் மாதவி யொடு வாழ்ந்த காலத்து இழந்த கலன் ஒன்றே. அது மேகலை மட்டுமே. இம் மேகலையை மாதவிக்களித்தான் எனலாம். மேகலை பெற்ற மாதவி யதனைத் தன் மகட்களித்திருக்க வேண்டு மாகலின் அதுவே மணிமேகலை பெயர்க் காரணமாகவும் அமைந் திருக்கலாம் என்பது கட்டுரையின் முடிபு.

191) 'சேரன் செங்குட்டுவன்' மு. சண்முகம் பிள்ளை. "முடிமன்னர் மூவர்"—பக்: 1—39. மு. ப. 1967. 2-ம் பதிப்பு 1968 நேசனல் பப்ளிஷிங் கம்பெனி, சென்னை-1 விலை ரூ. 1-50

சிலம்பில் வஞ்சிக் காண்டத்தில் இடம்பெறும் செங்குட்டுவன் பற்றியும் — சிலம்புச் செய்தி பற்றியும் கட்டுரை பேசுகின்றது. தமிழ்நாடு—செங்குட்டுவன் — செங்குட்டுவன் போர்ச் செயல்— கண்ணகி வரலாறு — கண்ணகிக்குக் கோயில் எடுத்தல் — செங்குட்டுவன் அரசியல்—செங்குட்டுவன் குண நலன்—என்னும் உட்தலைப்புக்களில் சிலம்புச் செங்குட்டுவன் பற்றிய விமர்சன மாகக் கட்டுரை (சுருக்கவுரை) அமைகிறது.

192) 'சேரன் செங்குட்டுவன்' (உரைநடை நாடகம்) வித்துவான் சிங்காரவேலனார், சொ. "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 33 பரல் 7, 8 பக்: 329, 369

இமய வரம்பன் வஞ்சிப் பேரவைக் காட்சியில் நிமித்திகன் உரை கேட்ட இளங்கோ துறக்கும் செய்தியும் — ஆரிய மன்னர் திருமண விழாக் காட்சியில் தென்றமிழ் ஆற்றல் இகழ்தலும். இளங்கோ செங்குட்டுவன் மனப் போராட்டமும், மலைவளங் காணும் காட்சியும்—குன்றக் குறவர் செய்தியும், பின் கண்ணகி விழா எடுக்கும் காட்சி வரையுள்ள சிலம்பு நிகழ்ச்சியும்—ஒன்பது காட்சிகளாக அமைகின்றன. சுருங்கிய அளவிலுள்ள சிறு உரை நடை நாடகம்,

193) 'சேரன் செங்குட்டுவன்' பக். 73-114 பாலுசாமி, நா. "இலக்கியம் காட்டும் மன்னர்கள்" விலை 1-25 முதற் பதிப்பு 1966 2-ம் பதிப்பு 1967, 3-ம் 1968 நான்: 1969 A. T. N நாகலிங்கம் அண்டு கம்பெனி, புதுமண்டபம், மதுரை

இளங்கோவடிகள் — அவர்தம் பெருமை —செங்குட்டுவன் போர்ச் செயல்கள்—கண்ணகி வரலாற்றில் பூம்புகார் நகரம்—கண்ணகி—கோவலன்—அவர் திருமணம்—மாதவி- தலைக்கோல் தானம் பெறல்-கோவலன் மாதவியைச் சார்தல்-கண்ணகி துயர் -திருந்திய கணவன் - காவலன் பேரூரில் கோவலன் நிலை - கண்ணகி வழக்குரைத்தல் - கணவனொடு சேர்தல் - பேசப்படுகின்றன. செங்குட்டுவன் மலைவளங் காணல்-கற்கொணர இமயஞ் செல்லல், பத்தினிக் கடவுள் படிமம் எடுத்தல்-மாடலன் அறவுரை-கடமை உணர்ந்த காவலனுதல்-இவை ஏழு உட்தலைப்புக்களில் சொல்லப்படுகின்றன. கட்டுரை சிலம்பின் நிகழ்ச்சித் தொகுப்பு.

194) 'தண்டமிழ் இலக்கியத்தில் தென் மதுரை' பரந்தாமனர், அ. கி. "வரலாற்றுக் கட்டுரைகளும் பிறவும்"— பக்: 73-87 முதற் பதிப்பு: 1959 அல்லி நிலையம், சென்னை-7 விலை 3-50

சங்க காலம் முதல் நாயக்கர் காலம் வரை மதுரையின் அமைப்பு பேசப்படுகிறது. அதில் ஒரு பகுதி சிலப்பதிகார மதுரை. அதிற் கூறப்படுவன: பதி எழு வறியாப் பண்பு மேம்பட்ட மதுரை மூதூர் மாநகர்—அரண் சிறப்பு—பல்வகைப் பொறி – இவை காட்டப்படுகின்றன. கண்ணகி மும்முறை மதுரையை வலம் வந்தாளாகலின் இன்றைய மதுரையினும் சிலம்பு மதுரை சிறியதாக இருந்திருக்க வேண்டும். பல்வகை வீதிச் சிறப்பு – வெயில் காலத்து வீதி ஓரம் பந்தல் வேய்ந்தமை சுட்டப்படுகிறது. இளங்கோவின் மதுரை இன்றய மதுரையோடு ஒப்பிடப்படுகிறது.

195) 'தமிழன் காத்த நீதி' டாக்டர் பெருமாள், ஏ. என். 1967 "விவேகானந்தா கல்லூரி ஆண்டு மலர்"—பக்: 66. அகத்தீசுவரம்

நீதியின் விளக்கம் – பாண்டியன் தவற்றினைக் கண்ணகி நிலை நாட்டுதல் – நீதியை உணர்ந்த பின் தண்டனை பெறுகின்ற நிலை – இளங்கோவின் சமன் செய்து சீர்தூக்கும் திறன் இவை கட்டுரையுள் அடங்குவன. 'இன்றய அரசியல் பீடம் ஏறியிருப்

போர் பாண்டியன் நெடுஞ்செழியன் நிலைநாட்டிய நீதிமுறையினை நன்றாகத் தெரிந்துகொள்ளட்டும்' என்று கட்டுரையார் அன்றைய அரசியல் செம்மையை எடுத்துக்காட்டுவதுபோல் முடிக்கும் திறன், இன்றைய அரசியல் நிலையைக் குறிப்பின் சுட்டுவதாக அமைகிறது.

196) 'தலைமக்கள் கொலை' டாக்டர். த. வே. வீராசாமி. "ஆராய்ச்சி" பக்; 443: மலர்: 2. இதழ்: 4. 1971 டிசம்பர்: நா. வானமாமலை, பாளையங்கோட்டை.

சிலம்பு, மணி மேகலையில் வரும் தலை மக்கள் கொலைபற்றிக் கட்டுரை அமைகின்றது. கோவலன் கொலைக்குரிய இலக்கணமுடையன் அல்லன் எனக் கொலை செய வந்தார் வாயிலாகச் சொல்லச் செய்து, அவர்களிடம் பொறுப்பை ஒப்புவித்த அரசன் தவறிழைக்கவில்லை என்பதை அடிகள் காட்டுகின்றார். பொற்கொல்லன் ஊட்டிய அச்ச வுணர்வே கொலையாற்றலாக மாறுகிறது. கோவலனின் கொலையை முதலிலிருந்தே துக்கப் பின்னணியில் அமைத்து அதற்கு அரக்கண்ணீர் வடிக்கும் நிலையோடு முடிக்கின்றார். மணிமேகலையில் காஞ்சனன் அறியாமையே தீவினைக்குக் காரணம். இங்கு தலைவன் கொலைக்குப் பின் பேசும் பாவை பேச்சில் தலைமகனை மறக்கிறோம். உதய குமரன் வீழ்ச்சியை விடக் காஞ்சனனுக்கு வரவிருக்கும் தீவினை முன்னிற்கிறது. பௌத்தக் கொள்கைப்படி உடல் என்பது நில்லாவுலகில் கணத்துக்குக் கணம் மாறுபடுவது; இதன்படி உதயகுமரன் வாழ்வும் கொலையும் மாற்றத்தின் கண நேரக் காட்சியே ஒழியப் பரிவு காட்டும் அறிவு நிலையன்று. அறிவு ஆட்சி செய வேண்டிய இரு தலை மக்களிடத்தில் ஆணவம் தலை எடுக்கிறது. பொறியின்மை (கோவலன் பொற்கொல்லன் பேச்சைக் கேளாதிருத்தல்) இருதலை மக்களின் இறுதிக் குறையாக அமைகின்றது. — இவை கட்டுரைச் சுருக்கம்.

197) 'திங்களைப் போற்றுதும்' மாசிலாமணி அம்மையார். "செந்தமிழ்ச் செல்வி"; சிலம்பு: 28; பரல்: 7. பக்; 317.

பொருள், செய்யுள் நடை — இரண்டையும் பொருந்திய தன்மையில் கலந்து நம் நெஞ்சையள்ளுகின்றார். உரிய சிலவிடத்துக் கதை நிகழ்ச்சியை ஒதுக்கி — இசைப் பாடல்களில் இறங்கிவிடுகின்றார். சிலம்பு காப்பியம் ஒரு நாடகக் காப்பியம்—

இளங்கோவின் கவிநயம் இனிமை பயக்கின்றது. திங்களைப் போற்றுதும், ஞாயிறு போற்றுதும் இவற்றிற்பாட்டிசையும் (Lyric charm) முதற் காதை முடிப்பில் 'முரசியம்பின' என வருவதின் கண் ஒருவகை ஒலிக்குறிப்பும், (Sound echoing sense) இளங்கோவின் சொற்களில் சந்தமும் (Cuphony) இன்பமும் (Pleasure) காணப்படுகின்றன. மங்கலமாய்த் தொடங்கிய தொடக்கத்திலேயே இளங்கோ நம் நெஞ்சையள்ளி விடுகின்றார்

198) 'திருக்குறளும் சிலப்பதிகாரமும்' டாக்டர். சிதம்பரநாதச் செட்டியார், அ. "செந்தமிழ்ச் செல்வி". சிலம்பு: 31. பரல் 4, 6. பக்: 161 & 281.

"முற்பகல் செய்தான் பிறன்கேடு" குறள் கருத்தே சிலம்பில் வரும் கோவல கண்ணகியரின் முற்பிறப்பு வரலாறு. "தெய்வம் தொழாஅள்" குறள்வழி கண்ணகி. — 'செல்லின் கண் சோர்வு. குறள் (642) வழிப்பாண்டியன் நெடுஞ்செழியன். கனக விசயரும் அவ்வாறே. 'இன்னா செய்தாரை ஒறுத்தல்' குறள்வழிக் கண்ணகி கோவலனை ஒறுக்கின்றாள். 'செய் தக்க அல்ல செயக் கெடும்' குறள்வழிக் கோவலன் மதுரையில் தன் இனத்தவர் கண்டுவரச் சென்றவன் செய்தக்க செய்யாது, செய்தக்க அல்ல செயல் (பொற்கொல்லனைக் கண்டு விலை பேசல்) செய்து கெடுகின்றான். இன்னோரன்ன குறள் — சிலம்பு ஒப்புடைக் கருத்துக்களை எடுத்துக்காட்டி விளக்கிச் செல்கின்றது கட்டுரை.

199) 'திருக்குறளும் சிலப்பதிகாரமும்' 'டாக்டர். சிதம்பரநாதன் செட்டியார், அ. "தமிழ் காட்டும் உலகு" — பக்: 53. மு. ப. 1957; 5-ம் பதிப்பு: ஆகஸ்ட் 1963. நேசனல் பப்ளிசிங் கம்பெனி, சென்னை — 1. விலை: ரூ. 2.50.

எண் 198-இல் அமையும் 'திருக்குறளும் சிலப்பதிகாரமும்' என்னும் கட்டுரையே சில் மாற்றங்களோடு அமைகின்றது.

200) 'திருக்குறளும் சிலப்பதிகாரமும்' வித்துவான். தியாகராசன், சு. "தமிழ் மறைக் கட்டுரைகள்" — பக்: 143. மு. ப. 1959, இன்ப நிலையம், சென்னை — 4. விலை: ரூ. 3·50.

மணமக்கள் வாழ்த்தே மங்கல வாழ்த்து — காதலற் பிரியாமல் கவவுக்கை நெகிழாமல் தீதறுக என்ற குறள் விளக்கம் காண்பர்; ஐம்புல இன்பத்தை - 'மாசறு பொன்னே' என வரும் கோவலன் உரை விளக்கும். கண்ணகி தனிக் குடும்பம் — மாதவி —

நெடுஞ்செழியன் — கவுந்தி சீற்றம் — அழுத கண்ணீர், தலைப் புக்களில் குறள், சிலம்பு கருத்து ஒப்பு நோக்கப்படுகிறது. வஞ்சிக் காண்டத்தில் குறளின் கருத்துக்களைக் காண்பது அருமையாகவுள்ளது. எனினும் இல்லாமலில்லை. சிலம்பை நுண்மையாக ஆராயின் குறள் ஒலி சிலம்பொலியாகி நிற்றலை யறிதல் எளிது.

201) 'தென்னவன் தீதிலன்' விமலாநந்தம், மது. ச. "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 32. பரல்: 10. பக்: 473.

புகார்க் காண்டத்தில் சிறப்புடைய பாத்திரங்கள் கண்ணகி, கோவலன், மாதவி. மதுரைக் காண்டச் சிறப்புடைப் பாத்திரங்கள் கோவலன், கண்ணகி, பாண்டி மன்னன். இம் மதுரைக் காண்டத்து, அறக் கற்புடைய கண்ணகியை மறக்கற்புடையாளாகக் காட்டத்தென்னவனைக் குறைவுடையவனுக்கி வஞ்சிக் காண்டத்துக் குறையை நிறை செய்கின்றார். தீதுதீர் மதுரையும் தென்னவன் கொற்றமும், தீத்திறமும், தென்னவன் தவறும், குறுமகன் கோளும் கொற்றவன் மயக்கும், வல்வினையும் வேந்தன் வீழ்ச்சியும், காவலன் செயலும் பாவலன் சிறப்பும், ஆகிய தலைப் புக்களிட்டுத் தென்னவன் சிறப்பும், ஊழ்வினையும் பேசப்படுகின்றன. 'இளங்கோவும் இரண்டாம் பணியும்' தலைப்பின்கண் காவல் வேந்தன் பாண்டியனை இளங்கோ குற்றமில்லாதவனுக்கிய வரலாறு கூறப்படுகின்றது.

202) 'தேவந்தி' வித்துவான். சிவலிங்கனார், ஆ. "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 33. பரல்: 2. பக்: 95.

தேவந்தி கண்ணகியின் உயிர்த்தோழி. தெய்வம் தொழாது கணவனைத் தொழுதெழும் கண்ணகி மாண்பினை அறிய உரைகல்லானாள் — கண்ணகி பழம் பிறப்பில் நோன்பு ஒன்று பொய்த்தாள் என்பதைத் தேவந்தி சாத்தன் அருளால் அறிந்தாள். தேவந்தி உண்மைத் தோழியாகலின் கண்ணகியார்க்குப் பூவும் புகையும் மேவிய விரையும் செய்யச் செங்குட்டுவனால் ஏவப்படுகின்றாள். இளங்கோவின் துறவு பற்றிய செய்தியைக் கண்ணகியார் தேவந்தி மேல் ஆவேசித்து வந்து கூறுகின்றார். இஃதவளின் பெரும் வாய்ப்பாம். தேவந்தி பாத்திரப் படைப்பு பேசப்படுகின்றது.

203) 'நெஞ்சையள்ளும் சிலம்பு' தாமோதரன், கு. "வாழ்க்கை விளக்கு" பக்: 46-64. முதற் பதிப்பு: 1969. கலைவாணி வெளியீடு. உடுமலை. விற்பனை உரிமை: மணிவாசகர் நூலகம், சிதம்பரம், விலை: ரூ. 3.00.

சிலம்பின் நாடகப் பாங்கமைப்பை எடுத்துக் காட்டி ஆங்காங்கு நெஞ்சையள்ளும் பகுதிகள் சுட்டப்படுகின்றன. சிலம்பு-தமிழிலக்கிய வரலாற்றுத் திருப்பு மையம்—குடிமக்கள் காப்பியம் – பெண்ணுக்கு ஏற்றம் தருவது – மங்கை மாட்சி தெரிவிப்பதே சிலம்பின் உள்ளுறை. ஒரு நாடகக் காப்பியம் சிறப்பது - அதன் நாடக மாந்தரின் படைப்புத் திறத்தால் – பண்பாட்டு வளர்ச்சியால். இந்நிலையில் கண்ணகி படைப்பின் வளர்ச்சிப் போக்கு – இறுதி நிலை – கோவலன் படைப்பின் வளர்ச்சி நிலை சுட்டப்படுகின்றது. இளங்கோவின் காவிய நடை பாராட்டப்படுகின்றது. நாடகக் குறிப்பு - 'காதலற் பிரியாமல்' 'சிலம்பு கொண்டு மாறிவருவன்' என்பதிற் பேசப்படுகின்றது. நாடக அவலச் சுவை - துன்பியல் அவல நாடகமே போற்றப்படுதல் - சிலம்பில் துன்பியலின் உச்சநிலை மதுரைக் காண்டம் - எனக்காட்டி அவலச் சுவை பேசப்படுகின்றது. மூவேந்தர் பற்றிக்கூறிய ஒற்றுமைத் திறன் - காப்பியச் சமயப் பொதுமை - இவை நெஞ்சையள்ளுகிறது – கட்டுரையில் புதிய திறனாய்வுப் பார்வை குறைவு.

204) 'நெடுஞ்செழியன்' செ. பொன்னுசாமி. "இலக்கியத்தில் சிலர்" பக்; 76. மு. ப. 1961. மெர்க்குரி புத்தகக் கம்பெனி. கோவை -1. விலை; ரூ. 1.75.

மாங்காட்டு மறையவன் பேசுகின்ற பாண்டியன் சிறப்பு, கோவலன் கூறும் பாண்டியன் ஆட்சிச் சிறப்பு, பாண்டியன் தேவி ஊடலும் பொற்கொல்லன் உரையும், வினைவிளை காலமாதலால் பாண்டியன் தவறுதல், கண்ணகி வழக்குரைத்தல், பாண்டியன் தோல்வி - ஆகியன பற்றிக் கட்டுரை அமைகின்றது.

205) 'பஞ்ச தந்திரமும் சிலப்பதிகாரமும்' டாக்டர். வி. ஐ. சுப்பிரமணியம். 1969. "தமிழ் வட்டம், 2-வது ஆண்டு மலர்" பக்; 87. 2, மலோனி ரோடு, தியாகராய நகர், சென்னை-17.

சிலம்பில் 15—வது காதையில் வரும் கீரிப்பிள்ளை – பார்ப்பினி கதை, வடமொழிப் பஞ்ச தந்திரக் கதை, நீலகிரி கோதர்களிடம் வழங்கும் கீரிப்பிள்ளை கதை (By. Emeneau 1947) இவற்றை ஒப்பு நோக்கி, இவற்றின் மூலக் கதை பற்றி எட்ஜர்ட்டன் (F. Edgerton,

The Panchatantra Reconstructed) கருத்தையும் எடுத்துக் காட்டிச் சிலம்பு கூறும் கீரி கதைக்கும், பஞ்ச தந்திரச் சுலோகக் கதைக்கும், மூலக் கதைக்கும் உள்ள வேறுபாடு எடுத்துக் காட்டப்படுகின்றது இக்கதை இந்திய மொழி பலவற்றிற் காணப் படுவது. இக்கதையைப் பஞ்ச தந்திரத்தின் வழித் தோன்றல் என்பதும், இக்கதை சிலம்பில் வருதல் கொண்டு சிலம்பின் காலம் பஞ்ச தந்திரத்தின் பிற்பட்டதென்றும் கொள்வது பொருந்தாது. பஞ்சதந்திரத்தில் காணும் சிபியின் கதை புறநானூறு மூன்று பாடல்களில் (39, 43, 467) வருவது கொண்டு அது பஞ்சதந்திரத்தின் பிற்பட்ட நூல் என்பது பொருந்தாது. இக்கதையைக் காட்டிச் சிலம்பு பிறப்பட்டது எனக் காட்டும் (கி. பி. 5-ம் நூற்றாண்டு பஞ்சதந்திரக் காலம்) வையாபுரிப் பிள்ளையவர்களே புறநானூறு கி. பி. 3-ம் நூற்றாண்டென்பர். சிபியின் கதை போன்று கீரியின் கதையும் பழைய கதையே. இக்கதை பின்னர் பஞ்சதந்திரத்தில் இடம் பெற்றிருக்கலாம். எனவே இதனைக் கொண்டு சிலம்பின் காலம் பஞ்சதந்திரத்தின் பிற்பட்டதென்பது பொருந்தாதென்பது கட்டுரையார் துணிபு.

206) 'பத்தினிச் செய்யுள்' வித்துவான் சிவலிங்கனார், அ. "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 23 பரல் 7 பக்: 261

யாப்பருங்கல விருத்தி – பத்தினிச் செய்யுள் கண்ணகி பற்றியதே என்ற கருத்தை மறுத்து – இப் பத்தினிச் செய்யுள் பேகன் மனைவி கண்ணகி பற்றியதே என்கின்றார். 'பன்னாள் அழுத கண்ணீர் துடைத்த கை' என்று பத்தினிச் செய்யுள் குறித்தலின் கண்ணகி (கோவலன் மனைவி) கணவன் காண அழுதிலள் என்பதாலும், 'கிடந்தூடத் துடைத்த கை' என்பதால் கண்ணகி கோவலனிடம் ஊடல் கொள்ளவே இல்லை என்பதும் காட்டி, இச் செய்யுள் குறிக்கும் இவ் வரலாறு சிலம்புக் கண்ணகியுடையதல்லவென்கின்றார். "ஒண் செங்குருதி" – என்ற சொல் போர்க்களக் குருதி சுட்டுமேயன்றிக் கொலைக்களக் குருதி சுட்டாது – கை'கண்டகம் (வாள்) பற்றிக் கடகமணி (அணி) துளங்க ஒண்செங்குருதியில் கிடந்தது என்ற பத்தினிச் செய்யுளால், கோவலன் கண்டகமும், கடக மணியும் பெற்றிருக்கவில்லையாகலின் – இவண் (பத்தினிச் செய்யுள்) குறிக்கும் 'பத்தினி' கண்ணகியல்லள். பேகன் மனைவி கண்ணகியே என்பர்.

207) 'பத்தினிச் செய்யுளும் கண்ணகியும்' மயிலை சீனி. வேங்கடசாமி. "தமிழ்ப் பொழில்" துணர் 35 மலர் 6,7 பக்: 181, 211

யாப்பருங்கல விருத்தியிற் காணப்படும் 'பத்தினிச் செய்யுள்' பற்றிய திரு. மு. இராகவையங்கார் (ஆராய்ச்சி தொகுதி), திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை (இலக்கிய மணிமாலை, காவிய காலம்) திரு. கே. ஏ நீலகண்ட சாஸ்திரி (History of Tamil Literature), ஆகியோர் கருத்துக்கள் எடுத்துக்காட்டப்பட்டு அவை பொருந்தாக் கருத்தென இக் கட்டுரை நிறுவுகின்றது. மு. இரா., பத்தினிச் செய்யுள் கண்ணகி பாடியதென்பர். திரு. எஸ். வை., திரு கே. ஏ. நீல., – இவர்கள் பத்தினிச் செய்யுள் சிலம்பிற்கு முற்பட்டு வழங்கிய பத்தினி பற்றிய கதை நூலில் 'பத்தினி வெண்பாவில்' இருந்த ஒன்றென்பர். இப் பத்தினிச் செய்யுள் கண்ணகி பற்றியதல்லவென, திரு. ஆ. சிவலிங்கனாரின் 'பத்தினிச் செய்யுள்' – கட்டுரைக் கருத்துக்கள் காட்டப்பட்டு மறுக்கப்படுகின்றது. அன்றியும் சிலம்பின் உரையார் 'பத்தினிச் செய்யுள்' – கண்ணகி வரலாறு பற்றியது எனக் குறிக்கவில்லை –என்று கூறி – மேற்கூறியார் மூவர் கருத்தும் தவறுடையதெனச் சுட்டுவர்.

208) 'பத்தினித் தெய்வம்' கி. வா. ஜகந்நாதன். "இலக்கியக் காட்சிகள்" — பக்: 33. மு. ப. 1956 கலைமகள் காரியாலயம், சென்னை-4 விலை ரூ. 2

இலங்கையிற் கண்ட கண்ணகி சிலை, அவண் கண்ணகி வழிபாடு நடைபெறும் முறை பற்றிக் கட்டுரை அமைகிறது. இரு நகிலுடைச் சிலையே கண்ணகி சிலை என்பதும் அதன் உரு ஒப்பொடு திருச்செங்கோடு அர்த்த நாரீசுவரர் வாமபாக உருவம் ஒப்பிடப்பட்டு வேறுபாடு சுட்டப்படுகிறது. இலங்கைக் கண்ணகி விழா, விழாவிலாடும் கொம்பு முறிக்கும் ஆடல், மட்டக்களப்பு கண்ணகி கோயில், கண்ணகி காவிய 'வழக்குரை காதை' எனும் மான்மியம் வாசிக்கப்படுதல், கண்ணகி பற்றிய அம்மன் பள்ளு, கண்ணப்பன் இயற்றிய பதினன்கு காவியம் இருந்த வரலாறு. முதலானவற்றை. 'மட்டக்களப்புத் தமிழகம்'– வி. சி. கந்தையா, 'ஈழத்தின் பிரசித்த இடங்கள்' (நான்காம் தமிழ் விழா மலர் – ஈழம்), 'கிழக்கு இலங்கையிலே கண்ணகி வழிபாடு' (ஸ்ரீ லங்கா – ஆகஸ்ட்: 1951 – திருவருள் என்பார் எழுதியது) வசந்தன் கவித்திரட்டு முதலியவற்றினின்று சான்று காட்டி விளக்குவர்.

209) 'பத்தினி தேவியைப் பற்றிய சில குறிப்புக்கள்' மு. இராகவையங்கார். "ஆராய்ச்சித் தொகுதி"- பக்: 230. 2-ம் ப. 1964. பாரிநிலையம், சென்னை-1. விலை: ரூ: 12—00.

'ஒரு மாமணியாய் உலகிற் கோங்கிய திருமாமணி'யில் இறுதியில் உள்ள 'திருமாமணி' கண்ணகியின் இயற்பெயர். தாமரைப் 'பொகுட்டு' 'மணி' என்று வழங்கிற்று. கண்ணகியைத் திருமகள் உரைவிடமான 'தாமரைப் பொகுட்டு' என்பதினுல், அவள் இயற்பெயர் குறிப்பிட்ட தாயிற்று. தாமரைப் பொகுட்டையுணர்த்தும் கர்ணக, கர்ணிக என்ற வடசொல்லிலிருந்து கண்ணகி என்று வழங்கியிருக்க வேண்டும், கண்ணகத்துள்ளாள் கண்ணகி என்பது பொருந்தாது. கர்ணம் (காது) வழியாகப் பிறந்தவளாதலின் 'கண்ணகி' எனப்பட்டாள்-என்பது கோவிலன் கதைச் செய்தி. அடுத்து கண்ணகி வரலாறு பற்றிய சங்கச் செய்யுள் (நற்: 216) கண்ணகியின் தமிழ்ப் புலமை (யாப்பருங் கலவிருத்தி-பத்தினிச் செய்யுள் கண்ணகி பாடியது என்று கொள்வர்) பத்தினிதேவி பற்றிய பிற்கால வழக்கு சில காட்டுவர் கட்டுரைக்கண். எந்த ஒரு 'செய்தியாகினும் வடமொழியினின்றே தமிழுக்கு வந்திருக்க வேண்டும் என்று கருதுகின்ற ஒருதலைப்போக்கு ஆசிரியருடையது என்பதற்கு இக்கட்டுரை சான்ருக அமைகின்றது.

210) 'பத்தினி வணக்கம்' மு. இராகவையங்கார். "கட்டுரை மணிகள்"—பக்: 47. 1959. எம். ஆர். நாராயணையங்கார் வெளியீடு, மானுமதுரை விலை: ரூ: 2-50.

கண்ணகி வரலாற்றுச் சுருக்கம், வழிபட்ட பிறநாட்டு மன்னர் பற்றிய குறிப்பு முதற்கண் இடம் பெறும். செங்குட்டுவனுக்குப் பிறகு இப்பத்தினி வழிபாடு துர்க்கை வழிபாடாக மாறியது. மதுரை மீனுட்சியம்மன் கோயில் வடக்கிலுள்ள செல்லத்தம்மன் கோயிலில் (துர்க்காலயம்) கண்ணகி சிலை ஒற்றைச் சிலம்புடன் உள்ளதாகத் தெரிகின்றது. நாட்டரசன் கோட்டை-கண்ணுத்தாள் கோயில் துர்க்கை-முன்னர் கண்ணகியாகவே வழிபடப் பட்டமை சுட்டப்படுகிறது. நாகபட்டினம் புறம்பேயுள்ள மரத்தடி ஒன்றில் பத்தினி வணக்கம் புரிதல் காணப்படுகின்றது. திருச்செங்குன்றூர்ப் பகவதியம்மன் கோயில், கொடுங்கோளூர் ஒற்றை மூலைச்சியம்மன் கோயில் முதலான கண்ணகியம்மன் கோயிலாகவே காணப்படுகின்றன, நீலகிரி, தொண்டைநாடு,

இலங்கை, கன்னடநாடு, மாளுவநாடு, ஆகிய இடங்களில் கண்ணகி வழிபாட்டின் சாயல், கண்ணகி வழிபாடு, ஆகியன காணப்படுகின்றன. கண்ணகி வழிபாட்டை மாற்றித் திரௌபதி வணக்கமாகவும் கொண்டுள்ளனர்.

211 'பாவை விளக்கவந்த பாவை' புலவர். த. சுந்தரேசன். "முருக தனுஷ்கோடி மணிவிழா மலர்"-பக்: 83.

பெண்மை இலக்கணம் முழுதும் நிரம்பியவள் கண்ணகி, குறள் விளக்கமாகக் கண்ணகி வாழ்வு அமைகின்றது. கண்ணகியின் தற்காத்தல், தற்கொண்டான் பேணல், சொற்காத்தல், சோர்விலாமையாகிய பண்பு பேசப்படுகின்றது.

212) 'புதிய கோணம்' அ. ச. ஞானசம்பந்தன். "புதிய கோணம்"-பக்: 1. மு. ப. 1965. வி. உ. பாரிநிலையம், சென்னை-1 விலை: ரூ: 3-25.

இளங்கோ சமணர் என்பதற்குச் சரியான சான்று கிடைக்கவில்லை. 'யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்குயர்ந்த உலகம் புகும்' என்று தமிழ் மறையும், அற்றது பற்று எனில் உற்றது வீடு' என்று. வைணவ மறையும் தமிழ்நாட்டுப் பழங்காலந் தொட்டு வழங்கிவந்த ஒன்று மதுரையை எரிப்பேன் என்று ஆணவ மலத்துடன் பேசிய கண்ணகி இறுதியில் ஆணவ மலம் நீங்கப் பெற்றுச் சுடர் விடும் பொன்னாகி விடுகின்றாள். ஆணவ மலத்தால் கட்டுண்டிருந்த காலை மன்னவனும், கோநகரும், தவறு இழைத்ததாகவும், தாம் தவறு இழைக்கப் பெற்றவளாகவும், தவறிழைத்தவர்கட்குத் தவறிழைக்கப்பெற்ற தான் தண்டனை கொடுத்தல் முறையே என்றும் கூறிய கண்ணகி அக்குற்றம் நீங்கியவுடன் தென்னவன் மாட்டும், மதுரை மாட்டும் தீதில்லை எனவுணர்கிறாள். இது கண்ணகியின் ஆன்மீக வளர்ச்சி என்பர்.

213) 'புவியரசு துறந்த கவியரசு' டாக்டர். த. வே. வீராசாமி. "தமிழ்ச் சுடர்" (சான்றிதழ் வகுப்பேடு) பக்: 36. மு. ப. 1970. கேரள மாநில மொழியகம், நலந்தா, திருவனந்தபுரம்.

புவியரசு துறந்த கவியரசு இளங்கோ பற்றிய கதைச்சுருக்கம், சிலம்பு காவிய அமைப்பின் சுருக்கம், காவியம் நெஞ்சையள்ளும் தன்மை இவை சுட்டப்பட்டு-ஓர் அறிமுகக் கட்டுரையாகச் சிலம்பு காவியத்திற்கமைகின்றது.

214) 'புறக்கணிப்பு' டாக்டர். மு. வரதராசனுர். 1961. "டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளி விழா மலர்"-பக்: 227.

ஒன்றைச் செய்யும் போது மற்றவற்றையும் உடன் எண்ணிச் சீர்தூக்கிச் செய்யும் திறன் கோவலனுக்கில்லை. செய்யும் ஒரு செயலுக்கு அப்போதைக்கு முழுதும் ஈடுபட்டுத் தன்னை இழக்கத்துணியும் துணிவு கோவலனின் சிறப்பாக அமைகின்றது. எண்ணுது துணியும் இப்போக்கைக் கோவலனிடம் பலமுறை காண்கிறேம் கானல்வரி பாடிய மாதவி கோவலனின் எண்ணுது துணியும் இயல்பை உணர்ந்திருந்தும் 'நம்மிடம் அவர் அவ்வாறு நடக்கமாட்டர் என நம்பி இருத்தல் கூடும். மாதவியிடம் பலவாண்டுகள் அன்பு பூண்டு ஒழுகிய கோவலன் அவளுடைய இயல்பை உணராதது குறையே. அவளின் இரண்டாவது திருமுகத்தின் விழுமிய அன்புதான் கோவலன் நெஞ்சை ஒரளவு மாற்றும் ஆற்றல் பெற்றிருந்தது. 'கடிதம் எழுதிய மாதவி தீதிலன் என்றுணர்ந்தும், நன்றி மறவா நன்னெஞ்சுடைக் கோவலன் தந்தை தாயர் துயர் தீர்க்கும் கடமையின் வேகத்தில் அக்கடிதத்தைப் பெற்றேர்க்கனுப்ப முனைந்த கோவலன், அதே நிலையில் கடிதம் எழுதிய மாதவியைப் போற்றத்தவறி விடுகின்ருன். கோவலன் மாதவியைப் புறக்கணித்த இடம் மூன்றில் ஒன்று இது. முதலிரண்டு, கானல்வரிப் பாடல்கேட்டுப் பிரிதல்; வசந்தமாலையிடம் மாதவி மடல்பெற மறுத்தல். முதற் புறக்கணிப்பில் ஆசிரியர் மாதவி சார்பாக நின்று இரங்குகின்ருர். 2-ம் புறக்கணிப்பில் கதைப் போக்கில் மாதவியின் துன்பத்தைப் புலப்படுத்துகின்ருர். இறுதிப் புறக்கணிப்பு ஆசிரியரைச் சாரினும் கதையின் வேகம் கருதிவிடுகின்ருர் என்பது பொருந்தாது. இப்புறக்கணிப்புக்குக் காரணம் காணமுடியாது கற்பார் நெஞ்சம் இரங்குகிறது கட்டுரை ஆய்வுத்திறன் மிக்கது.

215) 'புனிதவதி போற்றிய கன்னியர்' புலவர். செந்துறை முத்து. "தமிழகத்துக் கற்புக்கரசிகள்"-பக்: 129. மு. ப1 1962. வானதி பதிப்பகம், சென்னை—17. விலை: ரு: 3-50.

புனிதவதி-கண்ணகியாவள்—அவள் போற்றிய கன்னியர் ஏழு கற்புடை மாதர். அவர் பற்றி வஞ்சினமாலை கூறும் செய்தி எடுத்துக் காட்டப்படுகின்றது கட்டுரையில்.

216) 'பூங்குன்றனும் இளங்கோவும்' த. வடிவேலு. "செந் தமிழ்ச் செல்வி": சிலம்பு: 27. பரல்: 8. பக்: 373.

சிலம்பின்கண் வருகின்ற ஊழ் பற்றிய செய்திகளெல்லா வற்றையும் ஒருங்கு தொகுத்து, கணியன் பூங்குன்றனர் புறம் 192–இல் 'யாதும் ஊரே; யாவருங் கேளிர்' என்பதின்கண், 'நாம் அடைவதெல்லாம் நம் ஊழின் பயனே யாதலால் இவ்வுலகில் ஒருவரால் ஒருவர்க்கு நன்றோ தீதோ விளைகின்றதென்பதில்லை. அதனையுணர்ந்தோர் எல்லா ஊரும் எமதூரே என்பதையும், எல்லாரும் எமது சுற்றத்தினரே என்பதையும், உணர்வர். அவர வர் உறும் பயனுக்கு அவரவர் ஊழே வித்தாவது. ஊழ்வினையே உலகோர் வாழ்விற்குங் கேட்டிற்குங் காரணமாவது: ஊழின்றேல் பிறப்பின்று; ஊழினால் ஏற்பட்ட இப்பிறப்பில், இனிமேலும் பிறப் பிற்கு வித்தினைத் தேடாது, நல்வழியடைதற் கேற்றதான அல்ல வை கடிந்து நல்லவை செய்யுமாறு அறிவுரை பகர்ந்த கணியன் பூங்குன்றன் கருத்தினையே இளங்கோவடிகள் உலகந்தேற, வர லாற்று வாயிலாக உணர்த்திக் காட்டுகின்றுர் என்பர்.

217) 'பூம்புகார்' டாக்டர். மா. இராசமாணிக்கனர். "செந்த மிழ்ச் செல்வி": சிலம்பு: 26. பரல்: 11. பக்: 515.

சிலம்பை முதலாகக் கொண்டு இன்றய அமைப்பு வரை யுள்ள 'பூம்புகார்' பற்றி வரலாற்று அடிப்படையில் கட்டுரை அமைகின்றது. சிலம்பு கூறும் புகார் நகர அமைப்புக்களான, மருவூர்ப் பாக்கம், பட்டினப் பாக்கம், நாளங்காடி, பல்வகை மன் றம், கோயில்கள், தெருக்கள், வீடுகள் பற்றியும், அடுத்து மணி மேகலை கூறும் புகாரும், புத்ததத்தனரின் 'அபிதர்மாவதாரம்' நூல் குறிக்கும் பூம்புகார் பற்றிய செய்தி, சம்பந்தர் கூறும் புகார்ச்செய்தி, இன்றய மாயூரத்திற்கருகிலுள்ள காவிரிபூம் பட் டினம் பற்றியும், அவணுள்ள பழைய கோயில்கள், பழைய செங் கற்கள், வழக்கில் (Spoken) உள்ள அகழ்தல் சொல்வழக்கு காட் டல்–ஆகப் புகார்ப் பட்டின வரலாற்றை சிலம்பு முதல் தொடங்கி இன்றய நிலைவரை எடுத்துப் பேசுகின்றது கட்டுரை.

218) 'பெண்மை பெற்ற பெருவாழ்வு' புலவர் அரசுமணி. "பெண்ணே பெரியவள்" மு. ப. 1967. இ. ப. 1967. அருணோ தயம், சென்னை—14. விலை. ரூ. 2.50.

பெண்மை பெற்ற பெருவாழ்வு பற்றிப் பொதுப்படப் பேசப் பட்டுச் சிலம்பில் வரும் ஆற்று வண்ணனையில் பெண்ணியல்பு

புகுத்தப்படுதல் காட்டி அவை பெண்மை பெற்ற பெருவாழ்வெனக் காட்டப் படுகின்றது. இளங்கோ ஆற்றைப் பெண்ணுக்கிய தோடு அமையவில்லை. ஆற்றுக்கும் பெண்மைக்குரிய மென்மையை, பரிவை, பாசத்தைப் பெற வைக்கின்ருர். பூங்கொடியாய், குலக் கொடியாய்க் காட்சியளித்த வையையையும், தாயாகி நின்று தகைமை பெறும் காவிரியையும் பற்றிக் கட்டுரை குறிக்கின்றது.

219) 'பெண்மையின் மூன்று நிலைகள்!' தெ. ஞான சுந்தரம். "செந்தமிழ்ச்செல்வி". சிலம்பு: 40, பரல்: 3, பக். 123.

பத்தினிக் கண்ணகியின் மூன்று நிலைகள் பேசப்படுகின்றன. புகாரில், மதுரையில், வஞ்சியில் — கண்ணகியின் நிலை என்ற தலைப்புக்களில்: கண்ணகியின் மூன்று நிலை அமையும். தோற்றுவாய், அரசு துறந்திருந்த அடிகள், திருமாபத்தினி, அப்பத்தினியின் நிலை புகாரில், மதுரையில், வஞ்சியில் — என்ற தலைப்புகளில் கட்டுரை அமையும்.

220) 'பொங்கி எழுந்த புனிதவதி' புலவர் செந்துறை முத்து "தமிழகத்துக் கற்புக்கரசிகள்" பக். 107. மு: ப. 1962. வானதி பதிப்பகம், சென்னை—17. விலை. ரு. 3.50.

கோவலன் கண்ணகி மதுரையடைந்தது வரை (அடைக்கலக்காதை வரை) யுள்ள கதைச் சுருக்கம் பேசப்பட்டு, கொலைக்களக்காதையில் கண்ணகி வழக்குரை சற்று விரிக்கப்பட்டு அவள் மதுரைக்குத் தீ எரியூட்டி மீளுதல்வரை பேசப்படுகின்றது.

221) 'பொற்கொடியின் புரட்சி (நாடகம்)' சுப. மணிமொழியன். "செந்தமிழ்ச் செல்வி:" சிலம்பு: 30: பரல்:2. பக். 81.

நாடக அமைப்புடன், கோவலன் கண்ணகி, தோழி, ஊரவர், கோப்பெருந்தேவி, வாயிலோன், பாண்டியன் ஆகியோரின் கூற்றுக்களாகக் கொலைக்களக் காதை, ஆய்ச்சியர் குரவை, வழக்குரை காதை நிகழ்ச்சிகள் பேசப்படுகின்றன. நாடகப் பாணி சிறக்கவில்லை.

222) 'பொற்கொல்லன்' தி. வ. காந்திமதி நாதன். 1970 "கழகப் பொன் விழா மலர்:" பக். 24.

கோவலன் மதியை மயக்கிப் பொற் கொல்லனிடம் அவனைச் சேர்த்தது விதியே. பாண்டியனை மயக்கியதும் விதியே.

பொற்கொல்லன் ஒருவனே நம் வெறுப்பிற்கு ஆளாகும் பாத்திரப் படைப்பாகச் சிலம்பில் தோன்றுகின்ருன். முற்பிறப்பில் சங்கமன் என்ற வணிகனைக் கொல்வித்த மன்னனே இப்பிறப்பில் பாண்டியனுகப் பிறந்திருக்க வேண்டும். ஊழ்வினை உருத்து வந்தூட்டும் என்ற கருத்தை இளங்கோ காப்பியமெங்கும் கோடிட்டுக் காட்டிச் சென்ருலும் பொற்கொல்லன் மூலமாகத் தெளிவுபெறக் கோடிட்டுக் காட்டுகின்ருர், என்பர் கட்டுரையார்.

223) 'பொற்கொல்லன்' வித்துவான். ஆ. சிவலிங்கனுர். "செந்தமிழ்ச் செல்வி:" சிலம்பு: 32. பரல்: 9. பக்: 435.

பொற்கொல்லன் படைப்பு எடுத்துக்காட்டப் படுகின்றது. விலங்குநடைச் செலவினன்; களவு செய்ததின் காரணமாக விலங்கின் இயல்பான செயல் செய்தலின் விலங்கு நடைச் செலவினன் என்ருர்· கூற்றத்தூதன்; கலங்காவுள்ளம் உடையவன். கோயிற் சிலம்பு என்ருனுகவின் அரண்மனையில் பாதுகாவலான இடத்தில் வைக்கப்பட்டிருந்த சிலம்பு திருடப்பட்டது என்பதாம். கோவலனைக் கொல்வித்துக் கருந்தொழில் கொல்லன் ஆகின்ருன். களவு நூல்திறம் அறிந்தவன்; எண்ணியது முடிக்கும் திறத்தினன். இவை பொற்கொல்லன் பண்பாக இவண் காட்டப்படுகின்றது.

224) 'போற்ரு ஒழுக்கம்' கண. சிற்சபேசன். "செந்தமிழ்ச் செல்வி:" சிலம்பு: 42. பரல்: 6. பக்: 287.

ஒழுக்கம்–ஒழுகும் நெறி–The way of the lfie–ஆம். கோவலன் ஒழுகிய ஒழுக்கம் 'பிறர் போற்ரு நெறி' என்பது இவண் ஆய்வுப் பொருள். கோவலன் ஒழுக்கம் சிலம்பில் யாராலும் பழிக்கப்படவில்லை. எனவே கோவலன் பிறர்பழி வினையனல்லன். போற்றுதல் என்பது காத்து ஓம்புதல், காத்துக்கொள்ளல் எனப் பொருள்படும். இளங்கோ இறுதிநிலையில் 'அறமனை காமின்' என்பதும்' மனைகாக்க' என்றே பொருள்படும். எனவே 'போற்ரு ஒழுக்கம் புரிந்தீர்' எனக் கண்ணகி கோவலனிடம் கூறுதல், 'மனைவியைப் பாதுகாவாத ஒழுக்கம் புரிந்தீர்' என்றே பொருள்படும். 'என திளமையைப் பாதுகாக்காமல் போற்ரு ஒழுக்கம் புரிந்தீர்' என்றும் பொருள்படும். எனவே பிறர் போற்ரு ஒழுக்கம் வலிந்து கொளப்படுவதன்றி உண்மைப் பொருளன்று என்பது கட்டுரை முடிபு.

225) 'மதுராபதி' வித்துவான். ஆ. சிவலிங்கனார். "செந்தமிழ்ச் செல்வி:" சிலம்பு: 32: பரல்: 12: பக்: 575.

மதுராபதி பாண்டியன் குலமுதற் கிழத்தி, பாண்டியன் பழி துடைக்கக் கண்ணகி முன் வருகின்றாள்; கொற்றவை உருவினள். 'கேட்டிசின் என் குரல்' என்பதில் அவள் பேச்சுத்திறன் விளங்குகிறது. பெருந்தகைப் பெண், தோழி, மாதராய் என மும்முறை கண்ணகியை விளித்து மூன்று செய்திகள் கூறுவதாக முதற்கண் கூறுகின்றாள். முடிவாகக் கண்ணகி பழம் பிறப்பையும், கூறி மதுரையில் தீ பரவாதபடி வேண்டிச் செல்கின்றாள். மதுராபதி படைப்பு பேசப் படுதலன்றி அதன் முக்கியத்துவம் பேசப்படவில்லை.

226) 'மதுரைக் காண்டமும் மன்னவன் சிறப்பும்' மு. உலகநாதன். "செந்தமிழ்:" தொகுதி: 59: பகுதி: 2, 3, 9, பக்: 52, 153, 218.

அடிகள் உள்ளம் பாண்டியன் வினைவயத்தால் தவறு செய்தான் என்றே கூறுதலின் அதற்கு அடித்தளம் பலமாக அமைக்கின்றார். பாண்டியன் முன்னோன் பெருமை, பாண்டியன் ஆட்சிச் சிறப்பு, மதுரை மாண்பு, பொய்யாக் குலக்கொடி, அஃறிணைப் பொருட்களும் பாண்டியன் சிறப்பைப் பறைசாற்றுதல், முதலான பாண்டியன் சிறப்பு தொகுத்துக் கூறப்படுகின்றது.

227) 'மறையவன் மாண்பும்—அடிகளின் திறமும்' மா. எழில் முதல்வன். "செந்தமிழ்ச் செல்வி." சிலம்பு: 39: பரல்: 3, பக்: 108.

மாங்காட்டு மறையவன் பேசுவது 125 வரிகள் (காடு காண் காதை). வைணவன்; கவிதை மனக்கலைஞன்; பேசும் பேச்சு அவனின் உள்ளொளி விளக்கம். கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் கலை மனத்தன். சேரநாட்டு மறையவன் வாய்வழிப் பாண்டியன் புகழேற்றியது அடிகளின் ஒருமைகாணும் ஒற்றுமை மனப் பான்மைக்குச் சான்று. மறையவன் கதைக்கு இன்றியமையாப் படைப்பு. காப்பியத்தின் ஒரு கூறு (நாட்டு வண்ணனை) மறையவனால் நிறைவு பெறுகிறது. கவுந்தி பண்பு விளக்கம், கண்ணகி தெய்வநல விளக்கம் பெற ஏதுவினன் மறையவன். மறையவன் மொழியில் வருவது சுட்டல் என்னும் நாடகப் பண்புளது.

228) 'மாங்காட்டு மறையவன்' வித்துவான். ஆ. சிவலிங்கனுர். "செந்தமிழ்ச் செல்வி:" சிலம்பு: 32: பரல்: 4. பக்: 201.

மாங்காட்டு மறையவன் மாங்காடென்னும் ஊரினன். குல ஒழுக்கன். திருமாலை வழிபடுபவன்; 'வாழ்க எங்கோ' என்றது பாண்டியனைக் குறிக்காது. சேரனையே குறிக்கும். காரணம் தன் னுட்டு மன்னனையே 'எங்கோ' என்று உரிமையால் அழைப்பர். இவன் மூன்று வழித்திறம் (மதுரை செல்ல) கூறுகின்றுன். கோவலன் நிலைத்த அறிவினன் அல்லன் முன்னதாக அறியும் அறிவினனும் அல்லன். மறையவன் கூறியபடி மூன்று பொய்கை படிந்திருப்பின் நன்னிலை பெற்றிருப்பான். மறையவன் கூற்று கைக் கெட்டிய ஒன்ரும். வாய்க்கெட்டாமை போல அதனைப் பொருட் படுத்தாமல் தவறவிட்டான். இவன் தவறவிடக் கவுந்தியடிகளே காரணர். நல்லது சொன்னவனுக்கு (மறையவனுக்கு) அல்லது சொன்ன கவுந்தியடிகள் பிறர் யாது செய்யினும் பொறுக்க வேண்டிய துறவு நிலைக்கு ஏற்ப நடவாமல் மாறுபட நடக்கின்ருர். மறையவன் பண்பாய வந்த இக்கட்டுரைக் கண் கவுந்தி பழிப்பைக் கட்டுரையார் கொள்வது சமண வெறுப்பென்று தோன்றுகிறது.

229) 'மாடல மறையோன்' மது. ச. விமலானந்தம். "செந்தமிழ்ச் செல்வி:" சிலம்பு: 33: பரல்: 12: பக்: 569.

சிலம்பினைச் சிறக்கச் செய்யும் சிறுபாத்திரங்களில் அனைவர் உள்ளத்திலும் அமைந்து காப்பிய அழகு செய்பவன், அணிபெறச் செய்பவன் மாடலனே. இவன் தோன்றுமிடம் நான்கு. நுழையுமிடம் அடைக்கலக்காதை. விடுதலை பெறுமிடம் வரந்தரு காதை. பேசுமிடங்கள் ஒன்பது. கோவலன் பண்பு பற்றி, 'உம்மையிலும் நல்லனவே செய்திருப்பின் இம்மையில் இங்ஙனம் இன்னல் நேர இடமில்லை. இன்னல் நேர்ந்தமையால் நீ இம்மையிலும் தீயன செய்திருக்க வேண்டும்' என்று குறிப்பின் உணர்த்துகின்றுன். மறையவனின் ஊழின் பெருவலி யுணர்த்தும் திறமும், பழியஞ்சும் பண்பும், அஞ்சா நெஞ்சும், அறிவுரை பகரும் ஆசான் இயல்பும், சொல்லாற்றல் மாண்பும் பேசப்படுகின்றது. கண்ணகிக்கு ஆதரவாக, அவள் புகழ்பாடக் கவுந்தி படைக்கப் பட்டதுபோல் கோவலன் புகழ்பாட மாடலன் படைக்கப் படுகின்றுன். இவனின்றேல் இளங்கோ காவியம் சிறப்புருது என்பது கட்டுரையார் முடிபு.

230) 'மாடலன்' வித்துவான் ஆ. சிவலிங்கனார். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 30; பரல் 10 பக். 491

மாடலன் தலைச்செங்கானத்தன்; மறை வழி ஒழுக்கன். ஊழ் வினை உருத்து வந்தூட்டும் என்பதில் ஆழ்ந்த நம்பிக்கையுடையவன். சமயமறிந்து பேசும் ஆற்றலன். சொல்லின் செல்வன். இவன் கோவலனைப்பற்றி, 'இம்மை செய்தன யானறி நல்வினை' என்றது பொருந்தாது. 'இம்மை செய்தன யானறி நல்வினை, உம்மைப் பயன் கொல்' என்று ஐய நிலையில் வினவினன் ஆகலின் உம்மையிலும் அவன் நல்லனவே செய்திருக்கவேண்டும். ஆயின் இம்மையில் இவ்வாறு நேர்ந்தமையால் இம்மையிலும் நீ தீயன செய்தே இருக்கவேண்டும்; ஆனல் யானறிந்தவரை நல்வினையே செய்தனை' என்னும் குறிப்புத் தோன்ற 'இம்மை செய்தன யானறி நல்வினை' என்று கூறியதனல் சொல்லும் திறத்தால் சொல்லின் செல்வனகின்றான்.

231) 'மாதரி' வித்துவான் ஆ. சிவலிங்கனார். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 30 பரல் 1 பக். 41

மாதரி நெடுமால் அடி ஏத்துபவள்; விருந்தோம்பும் பண்பினள். தவத்தோர் அடைக்கலம் உவகையின் தாங்கும் பெற்றியள். அரண்மனை நெய்யளி உரிமை பெற்றவள். இயக்கி வழிபாடு செய்பவள். கவுந்தியை முன்னமே அறிந்தவள். அவரால் தீதிலள், அளியள், செவ்வியள், முதுமகள் எனப் பாராட்டப் பெறும் தகைமையள். மாதரி வணங்கிய இயக்கி எச்சமயத்தினள் என்று அறுதியிடற்கில்லை. சைன தீர்த்தங்கரர் யக்ஷியாகவும் இருக்கலாம். அவ்வாருயின் மாதரியின் சைன வழிபாடும் புலப்படும். ஆயினும் அவள் திருமாலை வழிபடும் வைணவ சமயத்தினள் என்பது கட்டுரையார் முடிபு.

232) 'மாதரி மாண்பு' சாமி. செல்வ விநாயகன். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 35; பரல் 2; பக்: 56

தன் மகள் ஐயையைக் கண்ணகியின் அடித்தொழிலாட்டியாக்கிக் கோவலனை மகனெனப் போற்றி அருள் சுரந்து நின்ற தாயுள்ளம், அடைக்கலம் ஓம்பிய சிறப்பு, அது இழந்தபோது, பழி நீக்க உயிர் நீங்கிய சிறப்பு இவை பேசப்படுகின்றன.

233) 'மாதவி உள்ளம்' விசு. திருநாவுக்கரசு. "பூச்சூட்டல்" —பக்: 12 மு. ப. 1947 ஸ்டார் பிரசுரம், திருச்சி. விலை ரூ. 2

ஆசிரியர் கனவில் வந்து மாதவி அவரோடு பேசுவதாகக் கட்டுரை சிறுகதை வடிவில் அமைகின்றது கோவலனைக் கோவலவன் என்றும், கண்ணகியைக் கர்ணகி என்றும், மாதவியை, மாதகி என்னும் பாதகியாகவும் ஆக்கிய கோவிலன் நாடகத்தின் கொடுமை கண்டு மாதவி வருந்தி, ஆசிரியரிடம் தான் பாதகியல்லள் என முறையுரைக்கின்றாள். நாடகச் சக்களத்திப் போராட்டம் (மாதவி, கண்ணகி) பற்றியும் மாதவி வருந்தித் தான் அவ்வாறில்லை என்று வருந்துவதாகவும், ஆசிரியர் அதற்குச் சமாதானம் கூறுவதாகவும் கட்டுரை அமைகின்றது.

234) 'மாதவி காவிரிப்பூம் பட்டினத்தின் 'கலைச்செல்வி'— மயிலை சீனி. வேங்கடசாமி. "சிறப்பு மலர்"— பெங்களூர் தமிழ்ச் சங்கம்-பக்: 57

அரங்கேற்றுக் காதை மாதவி நடனக் கலைத்திறன், கடலாடு காதை நாட்டியம், விஞ்சை வீரன் காண விழையும் மாதவி நடனச் சிறப்பு, பேசப்படுகின்றன. மாதவியின் குறை கணிகை குலத்திற்குரிய பகட்டான வாழ்க்கை வாழ்ந்தது. மாதவியின் இரண்டாவது கடிதச் சிறப்பு—கோவலன் கொலைப்படத் துய ருண்ட மாதவி துறவு,—மணிமேகலையில் வரும் மாதவி துறவுடன் இணைத்து நோக்கப்பட்டு—மாதவி சேற்றிலொரு செந்தாமரை யென மிளிர்கின்றாள் என்பர்.

235) 'மாதவி சேற்றிலொரு செந்தாமரை' டாக்டர் ஏ. என். பெருமாள் 19-7-1968 "தென் குரல்" மலர் 4; இதழ் 49 நிர்வாக ஆசிரியர் பி. அர்ச்சுன நாடார், குழித்துறை

ஈராறாண்டு அகவையள் மாதவி பெதும்பைப் பருவத்தி னள். ஆடற்றிறங் காட்ட அரங்கேறுகின்றாள். ஆடல் காணக் கோவலன் வந்திருந்தான். மாதவி இரண்டாவது கடிதம் தன்னைத் தவறாகப் புரிந்துகொண்டதையாவது திருத்திக் கொள்ளலாமே என்று கருதியே எழுதினாள். கண்ணகியைக் 'குலப்பிறப்பாட்டி' என்றதாற் றன்னைக் குலப்பிறப்பாட்டியல்லள் எனக் குறிப்பின் உணர்த்துகின்றாள். இரண்டாவது கடித ஒவ் வொரு சொல்லும் கோவலன் உள்ளக் கறை போக்கும் திறனு டையது. 'ஆடல் மகளே' என்றவனை இகழ்ந்த அதே நாவால்

'தன் தீதிலள்' எனப் புகழ்ந்துரைக்கின்றான். அதுவே கோவலன் வாயால் ஆசிரியர் இளங்கோ கூறும் முடிவு.

**236) 'மாதவி நல்லாள்' எஸ். கமலாதேவி. "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு 26 பரல் 12**

செவ்வையாகப் பெண்மை நடம்புரியும்வண்ணம் கற்பும் பொற்பும் பொருந்த வாழ்ந்து மண்ணோடு ஒழித்து விண்ணோடு ஏகின கலையின் செல்வி, மருவொன்று கூந்தலாள் மாதவி. மாதவியைக் காவியத் தலைவி எனவே கூறலாம். பொதுவான மாதவி மாண்பு பேசப்படுகின்றது.

**237) 'மாதவி பாடிய கானற்பாணி' அ. கிருட்டின மூர்த்தி. "செந்தமிழ்ச் செல்வி:" சிலம்பு: 19: பரல்: 12: பக்: 575.**

இன்பமும் துன்பமும் ஆகிய காவியப் போக்கு முதற்கண் சுட்டப்பட்டு, அடுத்த நிலையில் மாதவி பாடிய கானற் பாணியே கதை நிகழ்ச்சி பலவற்றிற்கு முதற் கருவியாகவும், ஆங்காங்குத் தோன்றும் ஏனைக் காரணங்களைத் துணைக் கருவிகளாகவும் கொண்டுள்ளது என்பது பேசப் படுகின்றது.

**238) 'மாதவி மாண்பு' அ. மு. பரமசிவானந்தம். "வையைத் தமிழ்"–பக்: 18. மு. ப. 1959. வி. உ. பாரிநிலையம், சென்னை–1. விலை: ரூ: 3–50.**

மாதவி சேற்றில் பிறந்த செந்தாமரை. கோவலன் பொருள் தொலைந்தது மாதவியால் அல்ல. கோவலனொடு பரத்தையாக வாழாது இற்கிழத்தியாகவே வாழ்ந்தாள். இளங்கோ கண்ணகிக்கும், மாதவிக்கும் யாதொரு வேறுபாடும் காணார்–மாதவியைக் கோவலன் பிரிய அவள் பாடல் காரணமன்று. கோவலனின் உள்ளமே காரணம். கோவலனைப் பிரிந்த கண்ணகி நிலை சிறப்பாகக் காட்டப்படவில்லை. ஆயின் மாதவி நிலையை இளங்கோ சிறப்பாகக் காட்டுகின்றார். கோவலன் வாய்மொழியே 'தீதிலள்' என்கிறது. கோவலன் துறந்த செய்தி கேட்ட மாதவி துறவும் கட்டுரையில் பேசப்படுகின்றது.

238–அ) 'மாதவியும் வசந்த சேனையும்:' கா. சுப்பிரமணியன் "ஆராய்ச்சி:" மலர்: 3. இதழ்: 1: பக்: 15. ந. வானமாமலை, நெல்லை: 2.

சிலம்பில் வரும் மாதவி, மிருச்ச கடிகத்தில் வரும் வசந்த சேனை - இருவரும் ஒப்பு நோக்கப் படுகின்றனர். சிலம்பு, மணி மேகலை, மண்ணியல் சிறுதேர் (மிருச்ச கடிகம்) காட்டும் கணி கையர் வாழ்க்கை விளக்கப்பட்டு, 'ஒரே ஆடவருடன் நிலைத்த தொடர்பு கொள்ளவோ, பெறவோ கணிகையருக்கு உரிமை யில்லை; அவர்களுடைய பரத்தமை வாழ்க்கையை விட்டு விலகாத படி சமூகம் பல சட்டங்களை விதித்திருந்தது' என்பர். இரு கணிகையரும் வாழ்ந்த செல்வநிலை, கலைத்தேர்ச்சி, காதலனொடு உறவு வாழ்க்கை விளக்கப் படுகின்றது. இருவரும் போகம் புரக் கும் பொதுவர். சமுதாயத்தில் ஆடவரின் பரத்தைமையால் நில வுடைமைச் சொத்துரிமைக்கு ஆபத்தில்லை. ஆடவர் சுதந்திரம் போலவே பெண்ணும் சுதந்திரம் நாடின் நிலப் பிரபுத்துவச் சொத்துரிமை சிக்கலாகி விடுமாகலின் 'கற்பு'க் கருத்து வலி யுறுத்தப்பட்டது. கோவலன், சாருதத்தன் வாழ்ந்த சமுதாயம் ஆணாதிக்க சமுதாயம். இருவரின் வணிககுல மேன்மை, பரத் தையர் ஒழுக்கம் ஒப்பு நோக்கப் படுகின்றது. கணிகை யுறவைச் சமுதாயம் நாணமுடையதாய்க் கருதவில்லை. நிலை தாழ்த்தவு மில்லை கணிகையுறவு கொள்வாரை; ஒருதார மணம் என்பது பெண்களுக்கே. கண்ணகி கூறும் பத்தினி வரலாறும் ஆணா திக்கச் சமுதாயத்தைக் காட்டுவனவே. குலமகளை (கற்புடை யாளை) நயந்தானுக்குத் தண்டனை விதித்த சமுதாயம், பரத்தை யிடம் சென்றவனுக்குத் தண்டனை விதிக்கவில்லை. இளங்கோ வும், சூத்திரகனும் கணிகையரான தம் கதை மாந்தரை முறையே துறவியாகவும், குலமகளாகவும் காட்டுகின்றார்.

239) 'மாதவியைக் கோவலன்' டாக்டர் மொ. அ. துரை அரங்கசாமி. "கந்தன் இனியன்" — பக்: 150. மு. ப. 1967. மீனாட்சி புத்தக நிலையம், மதுரை—1. விலை: 3.50.

திங்கள், ஞாயிறு, புகார் வாழ்த்து அரச வாழ்த்தே. 'தீதிலா வடமீனின் திறம்', 'காதலாள் பெயர் மன்னுங் கண் ணகி', 'காதலாற் கொண்டேத்துங் கிழமையான்' என்பதால் கண்ணகி கோவலர் மணம் களவு மணமே. மாதவி நடனம் 'வேத்திய' லாகலின் கோவலன் செல்லவில்லை. மாசாத் துவான், மாநாய்கன் சென்றிருந்தனர். குடி புரக்கும் நன்னெறி

வேந்தன் மாதவியைப் புரத்தல் பொருட்டு நாள்விலை ஆயிரத் தெண் களஞ்சு பொன் பெற மாலையளித்தான். அரங்கத்துள்ளார் ஒழுக்க சீலராகலின் மாலை வாங்குவாரிலை யாகலின் மாதவி தாய் சூழ்ச்சி செய்து நம்பியர் திரிதரு வணிகர் தெருவில் அழகிய கூனியை நிறுத்த அவள் நெடிது நின்ற வெறுப்பில் வணிக நம்பியரை வசை பாட, வந்த கோவலன் வணிகர் மானங்காக்க மாலை வாங்கி வீடு புறப்பட, கூனி அரசன் ஆணை கூறி அழைப்பப் பயந்து கோவலன் மாதவி மணவரை புக, மாதவி தன் தாயின் வஞ்சமும், தன் கற்பொழுக்கக் குறிக் கோளும் கூறி அது காக்க அவனிடம் இரந்து நிற்ப, இளகிய கருணைமறவன் அவள் துயர் களைய, குறிக்கோள் காக்க, வடு நீங்கு சிறப்பின் தன்மனையகம் மறந்தான். கட்டுரை புதிய நோக்கில் பொருந்தாக் கற்பனையாக அமைகின்றது.

240) 'முக்காலத் தமிழிசை' பூ. ஆலால சுந்தரன். "இயற் றமிழ்" — பக்: 122. மு. ப. 1963. இ. ப. 1964. பழனியப்பா பிரதர்ஸ். சென்னை—5. விலை: ரூ. 2.50.

தொல்காப்பியம் செய்யுளியல் 172-ஆம் நூற்பா, பேராசிரியர் உரைக்குறிப்பாலும், சிலப்பதிகார அடியார்க்கு நல்லார் உரைக் குறிப்பாலும் முக்காலத் தமிழிசை நன்கு விளங்குகிறது. சிலம்பு காட்டும் தமிழிசையின் தன்மை, இசைக் கருவிகள், யாழ் பற்றிய செய்திகள் சில குறிக்கப்படுகின்றன. தமிழிசையின் சிறப்பைச் சிலம்பிற் கண்டுகளிக்கலாம் என்பது ஆசிரியர் கருத்தாக அமைகிறது.

241) 'முடங்கல்' ந. மு. வேங்கடசாமி நாட்டார். "செந்தமிழ்ச் செல்வி" சிலம்பு: 3 பரல்: 9, 10: பக். 401 & 433.

ஓலை, முடங்கல், பத்திரம் — ஒரு பொருள் குறித்த வேறு சொற்கள். மாதவியின் இரண்டாவது மடலால் அவளின் மன வளர்ச்சியை அறியலாம் ('ஓலையை முத்திரித்துக் காப்புச்செயும்') பண்டைத் தமிழர் வழக்காறு, பெண்ணோலையை ஆணோலை யாக்கிய அடிகள் திறன், மாதவியின் முதல் மடல் பற்றிய செய்தி, பிரிவிற்குக் காரணமான கானல் வரி நிகழ்ச்சி, இவை முதலான பேசப்படுகின்றன. அடுத்துச் சிந்தாமணி முதலான வற்றில் வரும் மடல் பேசப்படுகிறது.

242) 'முதற் காப்பியத்தின் முரண் தொடை' டாக்டர். க. ஆறுமுகன். "ஆய்வுக் கோவை" — பக்: 1. இ. ப. க. த. மன்றம் — 3-வது கருத்தரங்கம். 1971 — அண்ணமலைப் பல்கலைக் கழகச் சார்பு வெளியீடு.

அரசர்களையும் வள்ளல்களையும் பாடும் மரபில் முரண், கடவுளைத்தான் பாட வேண்டுமென்பதில் முரண், தன்னேரில்லாத் தலைவனைக் கொள்வதில் முரண்போற் பல முரண்கள் சிலம்பிலுண்டு. குல மகளுடன் வாழும் ஒழுக்க நெறி, விலை மகளுடன் வாழும் இழுக்க நெறியாகிய இம்முரணே காப்பியக் கதைக் கரு. காதலைப் பற்றிக் கவலைப் படாது குடும்பமே கதியாய் வாழ்ந்த குல மகளிர் சமுதாயத்திற்குக் காதற் கலையும் தேவை என்பதையும், குடும்பத்தைப் பற்றிக் கவலைப்படாது காதலே கதியாய் வாழ்ந்த விலை மகளிர் சமுதாயத்திற்குக் குடும்பக்கலையும் தெரிந்திருக்கவேண்டும் என்பதையும் கண்ணகி, மாதவி வாயிலாக இளங்கோ உலகிற்கு உணர்த்துகின்றார். குடும்ப வாழ்விலும் (கண்ணகியுடன்) காதல் வாழ்விலும் (மாதவியுடன்) தோய்ந்து வெற்றிகாண முயன்ற கோவலன் தோல்வியடைகின்றான். அவனது வாழ்க்கையின் தோல்வியே இளங்கோவடிகளின் காப்பியத்திற்கு வெற்றி நல்குகிறது.

243) 'மூவகைக் கற்பு' புலவர். சி. செல்வத் தாண்டவன். 1970. "இ. ப. க. தமிழாசிரியர் மன்றம், 2-வது கருத்தரங்கு"

'கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை' — ஔவை. 'கற்பென்னும் திண்மை' யாவது 'கற்பென்னும் கலங்கா நிலைமை' என்பர் பரிமேலழகர். எனவே ஆணும் பெண்ணும் ஒழுக்கச் செறிவுடையவராக இருத்தல் கற்புடைமையாகும். தலையாய கற்பு, இடையாய கற்பு, கடையாய கற்பில் (மணி: 2. 42–48) கண்ணகி இம் மூன்றையும் பின்பற்றாது புது நெறி பின்பற்றுகின்றாள். கோப்பெருந்தேவிக்கு வேறு கடமை இன்மையால் கணவன் இறந்ததும் இறந்தாள். கண்ணகிக்குக் கணவன்மீதுள்ள கள்வன் என்ற பழிதுடைக்கும் கடமை இருந்ததால் இருந்து பழி துடைத்து இறந்தாள். மாதவிக்குத் தன் குலப் பழிதுடைக்க மணிமேகலையை வளர்க்கும் கடமை இருந்ததால் இருந்து தவ மேற்கொண்டாள். எனவே தேவி, கண்ணகி, மாதவி மூவரும் ஒத்த கற்புடையவரே. தலை, இடை, கடை என்று கற்பைப் பிரித்தல் அவ்வளவு பொருத்தமுடையதன்று, என்பது கட்டுரையார் துணிபு.

244) 'வங்கத் திருநாளும் வண்டமிழ்ச் சிலம்பும்' இளங்கோ. "செந்தமிழ்ச் செல்வி''. சிலம்பு: 39: பரல்: 9: பக்: 408.

வங்கத்து நடைபெறும் கொற்றவை விழா, சிலம்பு வேட்டுவ வரி விரிக்கும் கொற்றவை விழவன்னவே முற்றிலும் பொருந்தியமைகின்றது. தமிழினப் பண்பின் விரிவே இந்தியச் சமயங்கள் எனக் கருதி ஆராயப் புகும் மெய் ஆய்வினருக்கு இவ் விழாவமைப்பு பெரிதும் பயன்படும். தமிழினம், மங்கோலிய இனம் கலந்த கூட்டு இனமே வங்க இனம் என்பது கட்டுரையின் துணிபு.

245) 'வசந்த மாலை' வித்துவான். ஆ. சிவலிங்கனார். "செந்தமிழ்ச் செல்வி''. சிலம்பு: 33. பரல்: 5; பக். 224.

வசந்த மாலை படைப்பு கட்டுரையில் இடம் பெறுகின்றது. இவள்பாலும் கோவலன் மிக்க காமமுடையன். எனவே தான் வசந்த மாலை வடிவில் கானுறை தெய்வம் தோன்றிக் கோவலனை மயக்க முயன்றது. வசந்தமாலை, கூனி இருவரும் ஒருவரல்லர். இவை கட்டுரையார் துணிபு.

246) 'வஞ்சிக் காண்டம்' வை. தட்சிணாமூர்த்தி. ''செந்தமிழ்ச் செல்வி". சிலம்பு: 32: பரல்: 4: பக்: 205.

கோவலன் கண்ணகி கதை முதலிரு காண்டங்களில் முடிகிறது. செங்குட்டுவன் புகழ்பாடவே வஞ்சிக் காண்டம் அமைத்தாரோ என எண்ணத் தோன்றுகிறது. வஞ்சிக் காண்டம் அரசியலை — பொருளியலைக் கூறுகிறது. சிறு பாத்திரங்களான தேவந்தி, கவுந்தி, மாதரி, மாடலன், இவர்கட்கும் கோவலன் கண்ணகிக்கும் உள்ள தொடர்பு வஞ்சிக் காண்டத்தில் ஒளி வீசுகிறது. முதலிரு காண்டத்துச் சமண வைணவரால் வணங்கப்பட்ட கண்ணகி வஞ்சிக் காண்டத்துச் செங்குட்டுவனால் (சைவனால்), பௌத்தம் வளரும் இலங்கை மன்னனால் வணங்கப்படுகின்றாள். முதலிரு காண்டங்களில் கண்ணகியை மக்கள் வணங்க இறுதிக் காதையில் மன்னர்கள் வணங்குகிறார்கள். காப்பிய நிறைவுக்கு, கதைப் போக்கிற்கு, வரலாற்று வளத்திற்கு வஞ்சிக் காண்டம் இன்றியமையாத தாகின்றது.

247) 'வஞ்சிக்காண்டம் — ஒரு கண்ணோட்டம்' ம. ரா. போ. குருசாமி. "தமிழ் வட்டம்" 2-வது ஆண்டு மலர் பக்: 261. 1969. -2, மலோனி ரோடு, தியாகராயநகர், சென்னை-17

டாக்டர் கமீல் சுவலபில் 'வஞ்சிக்காண்டத்தை இணைப்பதால் காவியத்தின் கட்டுக்கோப்பும் ஒருமையும் (Structure and unity) சிதைவுறுகின்றது. வஞ்சிக்காண்டச் செய்திகள் வரலாற்று மரபுக்கு முற்றிலும் பொருந்தியிருந்தாலும், அழகுணர்ச்சியிலும், கலைநோக்கிலும், மற்றொரு கவிஞரின் படைப்பாகத்தான் இருக்கவேண்டும்' (All India writers conference Souvenir-p. 44) என்பதனை மறுத்து, 'இளங்கோவடிகள் கண்ணகி கதையை நோக்கமாகக் கொண்டு கண்ணகி வழிபாட்டை அறிமுகப்படுத்தி நிலைநாட்டிப் பரப்பவும் விரும்பினர். முதலிரு காண்டத்தில் கதையும் வஞ்சிக்காண்டத்தில் பத்தினி வழிபாடும் இடம்பெறுகின்றன. அதோடு தமிழக ஒற்றுமையையும் வற்புறுத்த நினைந்தார். எனவே வஞ்சிக்காண்டம் இன்றியமையாதது. அழகுணர்ச்சி, கலைப்போக்கிலும் வஞ்சிக்காண்டம் ஏனைக் காண்டங்களினின்று குறைவுடையதன்று. கமீலவர்கள் குறிக்கும் சிலம்பின் தலைமை சான்ற கூறுகள் நான்கும் (1. குடிமக்கள் காப்பியமாக விளங்கும் அடிப்படைச் சிறப்பு. 2. மனித இனநலக் கோட்பாடு 3. உருவச் செம்மை சான்ற முறையில் நாடகப் பாணியில் கதையை நடத்திச் செல்லும் பாங்கு, 4. காவியம், உணர்ச்சிப் பாங்கான தனி இசைப் பாடல்கள் இரண்டையும் இணையற்றதொரு முறையில் இணைத்துச்செல்லும் பாங்கு) வஞ்சிக்காண்டத்தும் உண்டெனக் காட்டுவர். அன்றியும் குறிஞ்சி நில வண்ணனை, பத்தினிக்கு நடுகல் செய்யும் புது மரபு, புறப்பொருள் மரபு புகுத்துவது (கால்கோட்காதை) கடற்கரைக் கண்ணகியைக் குன்றிலேற்றி வானுற ஒளிரச் செய்யும் நுட்பம் வஞ்சிக்காண்டத்து நிறைவேறுதலின் அதனை இளங்கோவே எழுதினர்; பிற்சேர்க்கை அன்று என முடிப்பர்

248) 'வஞ்சிக்காண்டமே வரலாற்றுக் காண்டம்' கோ. இராமச்சந்திரன். "ஆய்வுக் கோவை"—பக். 25. இ. ப. க. த. மன்றம், 3-வது கருத்தரங்கு 1971. அண்ணாமலைப் பல்கலைக்கழகச் சார்பு வெளியீடு

வஞ்சிக்காண்டம் வரலாறு அறிவுறுத்துவதல்லவெனக் கூறும் P. T. சீனிவாச ஐயங்கார் அவர்களின் கருத்தை, 'literature and History are twin sisters-inseparable' —என்ற

Travelyan கருத்தைக் காட்டி மறுத்து வஞ்சிக்காண்டம் வரலாற்றுக் காண்டமே என்பர். சிலம்பின் கருவாக விளங்கும் 'உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தல்' வஞ்சிக்காண்டத்தே பேசப்படுதலின் இக்காண்டம்பிற்சேர்க்கைஎன்றல்பொருந்தாது. பத்தினி வணக்கம் அக்காலத்து நாடெங்கும் பரவியிருந்ததென்பது இலங்கை வரலாறு மூலம் அறியப்படுகின்றது. எனவே இது ஒரு வரலாற்றுச் செய்தி. எனவே வஞ்சிக்காண்டம் வரலாறுணர்த்தும் காண்டம் என்பதும், அது பிற்சேர்க்கை என்பது பொருந்தாது என்பதும் இவண் வேறுபல ஆசிரியர்கள் கருத்துக்களை எடுத்துக்காட்டி விளக்கப்படுகின்றது.

249) **'விதியின் விளையாட்டு'** டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் **"உருவும் திருவும்"**—பக்: 69. மு. ப. 1965 வி. உ. பாரி நிலையம் சென்னை-1 விலை ரூ: 2-50

விதிக் கொள்கை சங்க இலக்கியத்தே பேசப்படுகின்றது. வாழ்வு, தாழ்வு வகுப்பது விதி. சுவர்க்க நீக்கம், எமர்சன் கட்டுரை—விதிக்கொள்கைக்குச் சான்று 'ஊழ்' இருவினைப்பயன் செய்தவினையே சென்றடைவதற்கேதுவான நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, வினை என்பன ஒருபொருட்கிளவி என்பர் பரிமேலழகர். ஊழ்வலி குறள், புறம், குறுந்தொகை, சிலம்பு, கம்பராமாயணம், பாரதம், கலிங்கத்துப் பரணி, பாரதியின் பாஞ்சாலி சபதம் முதலியவற்றுள் பேசப்படுகின்றது. யாழிசைமேல் ஊழ்வந்துருத்தல், கண்ணகி கோவலர் மதுரை செல வினை காரணமாதல், பாண்டியன் தவற, கோவலன் கொலைப்பட வினை காரணமாதல், வினை வலியே இராமன், நளன் காடுசெலக் காரணமாதலைக் கவுந்தி கோவலற்கெடுத்து மொழிதல் முதலான ஊழ்வினை வரும் இடம் தொகுக்கப்படுகின்றது. விதியின் வலி பெரிதாகினும், ஊக்கமுடன் முயல்வார் விதியை வெல்ல முடியும்; 'உழைப்பின் வாரா உறுதியும் உளவோ' என்பது கட்டுரையில் வலியுறுத்தப்படுகின்றது.

250) **'விலை மகளா? கலை மகளா?'** டாக்டர். தா. ஏ. ஞானமூர்த்தி. "பாவையின் உயிர்ப்பு" — பக்: 89. மு. ப. 1957. பழனியப்பா பிரதர்ஸ், சென்னை — 5. விலை: ரூ: 1·75.

மாதவி பால் கோவலனை ஈர்த்தது கலையே. பிறப்பால் உயர்வு தாழ்வு இல்லை. செயலால் என்பது மாதவி வாழ்வில் போதரும் மாதவி கலைச்செல்வி. கலை உள்ளத்தைப் பண்படுத்

தும்; அறிவைப் பக்குவப் படுத்தும் ஆற்றல் கலைக்குண்டு. எனவே மாதவி தவமேற் கொண்டதற்குக் கோவலனின் பிரிவுத் துயர் மட்டும் காரணமல்ல. அதற்கு அடிப்படைக் காரணம் கலை என்பது கட்டுரையாளர் கருத்தாக அமைகின்றது.

251) 'வேனிற் காதை இசைப் பகுதி விளக்கம்' சங்கீதம், ப. சுந்தரேசன். "தமிழ்ப் பொழில்" துணர்: 30. இதழ்: 8, 11, 12.

வலக்கைப் பாதகை கோட்டொடு சேர்த்தி, இடக்கை நால் விரல் மாடகம் தழீஇ, செம்பகை யார்ப்பே, கூட மதிர்வே, வெம்பகை நீக்கும் விரகுளியறிந்து — முதலாக வரும் இசைத் தொடர்புடைய சொற்றொடர்கள் கட்டுரைக் கண் இசைநூல் தொடர்பொடு விளக்கப்படுகின்றன.

252) 'வையையின் வளம்' டாக்டர். ந. சஞ்சீவி. "உணர்வின் எல்லை" — பக்: 192. மு. ப. 1959. பாரிநிலையம், சென்னை — 1. விலை: ரூ: 3·50.

ஆற்றைப் பெண்ணாக வண்ணிப்பது ஒரு இலக்கிய மரபு. சிலம்பு, காதை *13* (*151 — 174*) வரையுள்ள வரிகளில் உள்ள வையை வண்ணனையின் உரை விளக்கமாகக் கட்டுரை யமைகின்றது.

## பிற்சேர்க்கை

1) "கருணாமிர்த சாகரம் என்னும் இசைத்தமிழ் நூல்"— மு. ஆபிரகாம் பண்டிதர், 1917, கருணாநிதி வைத்தியசாலை, தஞ்சாவூர்.

தமிழிசை பற்றிய விரிவான ஆய்வு நூல். நூல் நான்கு பாகங்களாகப் பகுக்கப்பட்டு மொத்தம் *1346* பக்கங்களைக் கொண்டுள்ளது. சிலம்பில் வருகின்ற இசைக் குறிப்புக்கள் பல இந்நூற்கண் இசை நுணுக்கத்தோடு விளக்கப்படுகின்றன.

2) "யாழ்நூல்" — தவத்திரு. விபுலானந்த அடிகள், 1947, கரந்தைத் தமிழ்ச்சங்க வெளியீடு

சிலப்பதிகார இசைக் குறிப்புக்களை அடிப்படையாகக் கொண்டு பழந்தமிழரின் இசை நுட்பங்களை ஆராய்ச்சி முறையாக விரித்துரைக்கும் முதல் நூல். இசைத் தமிழ் நுட்பங்களை ஆராயும் இப் பெரு நூல் பண்டைத் தமிழரின் இசைக் கருவிக

ளாகிய வில்யாழ், பேரியாழ், மகரயாழ், செங்கோட்டியாழ், சகோடயாழ் என்பவற்றுள் முன்னைய நான்கினைப் பற்றிப் பொதுவாகவும், சகோட யாழினைப் பற்றிச் சிறப்பாகவும் கூறுவதால் 'யாழ்நூல்' என்னும் பெயர் பெற்றது. சகோட யாழ் என்பது ச+கோஷ+யாழ்; நல்ல ஓசையையுடைய யாழ்; செம்முறைக் கேள்வி என்னும் பழந்தமிழ்ப் பெயரின் மொழிபெயர்ப்பாக வடமொழியில் வழங்கப்பெறுவது; ஆயிரம் ஆண்டுகளாக மறைந்துபோன இதன் வடிவத்தினையும், இயக்கத்தினையும், பிற யாழின் வடிவங்களையும், கணித நுட்பத்தினை அடிப்படையாகக் கொண்டு, தமிழ் வட மொழிகளின் இசைநூல் முடிபுகளையும் ஒப்புவைத்து, ஆராய்ந்து வெளிப்படுத்தும் இறவாத ஒரு புது நூல்; அடிகளாரின் பதினன்கு ஆண்டு ஆராய்ச்சியின் பயனுகக் கிடைத்தது இந்நூல்.

—கலைக்களஞ்சியம்: தொகுதி 9 பக்: 330

3) **"கண்ணகி வெண்பா"** — மு. ரா. கந்தசாமிக் கவிராயர் மு.ப. 1972, பார்வதி பதிப்பகம், அம்பாசமுத்திரம், நெல்லை விலைரூ3

சிலம்பின் கதைச் சுருக்கம் (பாயிரம் உள்பட) 310 வெண்பாக்களில் இந்நூற்கண் அமைத்துக்காட்டப்படுகிறது. புகார், மதுரை, வஞ்சிக்காண்டமென முப்பகுதியாகப் பகுக்கப்பட்டு, காதைக்குப் பத்து வெண்பாக்கள் வீதம் 300 வெண்பாக்கள் அமைகின்றன. எஞ்சிய 10 வெண்பாக்கள் 'பாயிரத் திறனு'க அமைந்துள்ளது. ஒவ்வொரு வெண்பாவின் இறுதியிலும் சொற்குறிப்பு விளக்கம் ஆசிரியரால் தரப்பட்டுள்ளது. வெண்பாக்கள் சுவையுடன் அமையவில்லை.

4) "சிலம்பில் இயற்கை இறந்த நிகழ்ச்சிகள்" — ரெஜியா, 1973. எம். ஏ. (தமிழ்) தேர்வு ஆய்வேடு, கேரளப் பல்கலைக் கழகம்.

இலக்கியமும் இயற்கை இறத்தலும், கற்பனையும் இயற்கை மீறலும், மேனுட்டு இலக்கியங்களில் இயற்கைமீறிய நிகழ்ச்சிகள், சிலம்பில் இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் என ஆய்வுத் தலைப்பு வகுக்கப்பட்டுள்ளது. சிலம்பில் இயற்கை இறந்த நிகழ்ச்சிகள், முதற் கதையில் பங்கு பெறுபவை (கவுந்தி சாபம், சாலினி தெய்வமடைதல், வனசாரிணி தோற்றம், ஐம்பெரு மன்றங்கள், கோவலன் உயிர்பெற்று எழுதல், கதிரவன் சான்று பகர்தல், கொங்கைத் தீயில் மதுரை எரித்தல், மதுராபதித்

தெய்வந் தோன்றல், கண்ணகி விண்ணுலகம் அடைதல், கண்ணகி தெய்வமாதல், தேவந்தி தெய்வமுறுதல், மாடலன் பொய்கை நீரைத்தெளித்து கோவலன் தாய் கண்ணகி தாய் மாதரி ஆகியவர்களின் முற்பிறப்புணர்த்தல், பாண்டியன் தேவி கனவு நிகழ்ச்சிகள் முதலாயின), கிளைக் கலதகளில் வருபவை (மணிமேகலா தெய்வம், வன்னிமரமும் மடப்பள்ளியும் சான்று சொலல், தன் முகத்தைக் குரக்கு முகமாக்கிய பத்தினி பற்றிய செய்தி, ஊர்வசி சயந்தன் சாபம் பற்றிய குறிப்பு, பாசண்ட சாத்தன் வரலாறு முதலான), தேவர்கள் நிலை, (விச்சாதர வீரன், முசுகுந்தன், குரங்குக்கை வானவன்), பேய்கள் நிலை (இடாகினிப்பேய், குட்டுவன் போர்க்களத்தில் பேய்களின் நிலை), என்ற நான்கு பகுதிகளில் பேசப்படுகின்றன.

5) "சிலம்பில் கண்ணகியும் மாதவியும்"—செ. சானகி தங்கத் தாய், 1972. எம். ஏ. (தமிழ்) தேர்வு ஆய்வேடு. மதுரைப் பல் கலைக் கழகம்.

சிலம்புச் செல்வியர் கண்ணகியும், மாதவியும் பெண்ணிற்குப் பெருமை தேடித்தரும் உன்னத நிலையினர். இருவரில் உயர்ந் தோர், சிறந்தோர் இவரெனத் துணிதற்கியலா இயல்பினர். இருவரும் கோவலனோடு கூடி, ஊடி வாழும் அகநிலையிலும், புறத்தோற்ற நிலையிலும் மாறுபாடுடையவர். கண்ணகி, தன் கணவன் முதல், காப்பியப் பாத்திரங்கள் பலவற்றாலும் புகழப் பட்டு உயர்ந்து விளங்குபவள். மாதவியோ கணவனாலும் ஏத்தப் பெறும் பெற்றி பெற்றிலள். எனினும் உயர் குலத்திற் றோன்றித் தெய்வநிலை எய்திய கண்ணகியினும், இழிகுலப் பரத்தையாய்ப் பிறந்து, கற்பரசியாய் வாழ்ந்து, காதற் கொழு நன் பிரியத் தன்னையே ஒறுத்து, வெறுத்துத் துறவு வாழ்க்கை மேற்கொண்ட மாதவியே ஏற்றம் பெறுதற்குரியள். கண்ணகி கல்லில் இடம் பெற்றாள்; கலையரசி மாதவியோ கற்றோர் உள்ளத்தில் இடம் பெற்றுள்ளாள், என ஆய்வேடு கண்ணகி, மாதவியர் படைப்பை ஒப்பு நோக்குகிறது.

6) "சிலம்பில் மெய்ப்பாடுகள்" — J. G. N. தாசன், 1973 எம். ஏ (தமிழ்) தேர்வு ஆய்வு நூல் கேரளப் பல்கலைக்கழகம்

ஆய்வு பன்னிரு கட்டுரைகளில் அமைகிறது. முதலிரு கட்டுரைகளில் (மெய்ப்பாடு ஓர் அறிமுகம், வகை விளக்கம்)

சுவை, மெய்ப்பாடு பற்றிய விளக்கமும், தொல்காப்பியர் கூறும் மெய்ப்பாடுகளின் விளக்கமும் காட்டப்பட்டுள்ள. அடுத்தமையும் இரு கட்டுரைகள் (மெய்ப்பாடும் காப்பியமும், மெய்ப்பாடு—வெளியீட்டு நிலைகள்) காப்பியத்திற்கும் மெய்ப்பாட்டிற்குமுரிய தொடர்பையும். காப்பியக் கவிஞன் மெய்ப்பாட்டை வெளியிடும் முறையையும் விளக்குகின்றன. பின்னுள்ள எட்டுக் கட்டுரைகள் (நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை) எட்டு மெய்ப்பாடுகளும் சிலம்பில் எவ்வெவ்வாறு அமைந்துள்ளனவென விளக்கும். சிலம்பின் அகத்திணை மெய்ப்பாடுகளும் விளக்கப்படுகின்றன. இறுதியில் மெய்ப்பாடு வருகின்ற இடங்கள் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது. இம் மெய்ப்பாட்டைப் பாத்திரப் படைப்போடு இணைத்து, வெற்றி பெறுகின்றார் இளங்கோ என்பதும் சுட்டப்படுகின்றது.

7) "சிலம்பின் துணைப்பாத்திரங்கள்"—டாக்டர் கா. மீனாட்சிசுந்தரனார், மு. ப. 1973. மெர்க்குரி புத்தக நிலையம். கோவை–1 விலை ரூ: 6

சிலம்பின் துணைப் பாத்திரங்கள் பற்றிச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் 1971-இல் மூன்று நாட்கள் இவ்வாசிரியர் நிகழ்த்திய, டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளையவர்களின் வெள்ளி விழா நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவுகளோடு பின்னிணைப்புக்களாக 'மாதவி', 'சேரன் செங்குட்டுவன்', 'ஊன்று பாத்திரங்கள்' என்னும் கட்டுரைகளும் இந்நூற்கண் இணைக்கப் பட்டுள்ளன.

8) 'அடியார்க்கு நல்லாரின் ஆய்வு முறைகள்' — மா. இளைய பெருமாள் "4-வது ஆண்டு மலர்" — பக்: 35, 1—10—1967, திருவனந்தபுரம் தமிழ்ச் சங்கம்.

சிலம்பு ஓர் இயலிசை நாடகப் பொருள் தொடர்நிலை எனக் கொள்ளும் நல்லார், இயலுக்கு இலக்கணம் தொல்காப்பியமெனவும், இசை நாடகத்திற்குச் சிறந்த இலக்கண நூல் இல்லையெனவும் கருதுகிறார். உரைப்பாயிரத்துச் சிலம்பு பெருங்காப்பியம் அன்று என்பதற்கு இரு மறுப்புக் குறிப்புகள் தருகின்றார். கண்ணகியொடு மதுரை செல்லும் கோவலன், 'யாண்டும் மெய் யுறல் மாத்திரமல்லது புணர்ச்சி இல்லான்' எனவும், கவுந்தி

பற்றி. 'அவள் தவத்திற்குச் சினமுறும் போது சபிக்கும் வலிமை யன்றி வருங்காலத்தை உணரும் ஆற்றலில்லை' எனவும், ஆடரங் கேறிய மாதவி அழகு கண்ட சோழன், 'நாம் இவளை வரையின் நவை பிறக்கும்' எனக் கருதுவதாகவும் நல்லார் உரை வகுத்துச் செல்லல் பாத்திரப் பண்பை நன்கு நிலைநிறுத்துகிறது. பதிக முதலிரு அடிகட்கு உரை விரிவாக எழுதிய நல்லார், 'முதல் ஈரடியும் போல யாண்டும் (உரை) விரியாதது உரை பெருகும் என்பதனைக் கருதி என்க' எனவும், 'இவ்வாறே அடுக்கிக் கொண்டே சென்றால் கேட்போர்க்கு இன்பம் பயவாது உணர்வு சலிக்கும்' எனவும் குறித்தல், படிப்போரின் மனநிலையறிந்து உரைசெய்யும் திறனுக்குச் சான்றுகள். இவை கட்டுரை தரும் செய்திகள்.

9) 'ஒரு சொல்' — சி. சத்திய மூர்த்தி, "தென் மொழி" — பக்: 23–24, அக்டோபர், 1967, கடலூர் – 1.

அருகன் திருமொழி பிறழாச் சாவக நோன்பியாகிய (சிலப்: 10:47–48;16:18) கோவலன், தேன் உண்ணலாகாது என்ற சமண சமயக் கொள்கைக்கு (சிலப்: 10:81–85,96–97) மாறாகத் 'தேனே!' எனக் கண்ணகியை விளிக்கின்றான் (சிலப். 2: 74). இச் சொல்லை வைத்துக் கொண்டே ஐம்புல இன்பத்தால் விளையும் மயக்கத்தைச் சுட்டும் பெருவுத்தியை இளங்கோ செய்துவிடுகின்றார்' என்பது கட்டுரையின் உட்கோள்.

10) 'கண்ணகிக் கோட்டம்' — கரந்தை கோவிந்தராசன், "தமிழரசு'', சூலை, 1972.

மதுரை செல்லத்தம்மன் கோயிலில் கருவறைக்கு முன்னருள்ள மண்டபத்தில், கிழக்கு நோக்கியுள்ள சிலை, பாண்டிய மன்னன் ஒருவனால் அமைக்கப்பட்ட கண்ணகி சிலையே என்பது கட்டுரையின் கரு.

11) 'கண்ணகி சிலையும் கல்வெட்டுக்களும்' — புலவர் செ. இராசு "கொங்கு"—டிசம்பர் 1972, பக்: 291.

மதுரை செல்லத்தம்மன் கோயிற்–கருவறைச் சிலைகளன்றி வெளியேயுள்ள, வலக்கை இடமார்பைத் தழுவியவாறு அமைந்திருக்கும் சிலையும் கண்ணகி சிலையே என்று சுட்டி யதனை இடையர் திருப்பணி செய்தனர் எனக் கல்வெட்டுச் சான்றுடன் கட்டுரை விளக்குகிறது.

12) 'காப்பியப் பின்னணியில் வரலாற்று இணைப்பும் சேரன் செங்குட்டுவனும்' — இரா. காசிராசன், 27-7-1972, கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை ஆய்வாளர் கருத்தரங்குக் கட்டுரை.

உலகப் பெருங் காப்பியங்களில் வரலாற்றுப் பின்னணியில் அமைந்த ஒருபெரும் போரே காப்பியக் கருவாதல் போன்று சிலம்பிலும் செங்குட்டுவன் இமயப் போரே காப்பியக் கதைக் கரு என்பதும், பரணர் பாடிய கடல்பிறக்கோட்டிய வேல்கெழு குட்டுவனும், சிலம்புச் செங்குட்டுவனும் வெவ்வேறு காலத்து வாழ்ந்தவர் என்பதும் கட்டுரையின் உட்கோள்.

13) 'சிலப்பதிகாரம்' — சு. சிவகாமசுந்தரி, "தமிழகப் பெண்கள் வாழ்வும் வளர்ச்சியும்" — பக். 56-67, மு. ப. 1971, மெர்க்குரி புத்தக நிலையம், கோவை — 1. விலை: ரூ. 3.00.

கண்ணகி, குலமகள் வாழ்க்கையில் கணவனுக்குக் கட்டுப் பட்டுக் கணவனையும் இழக்கத் துணியும் கற்பு மகள்; மாதவி காதலனைப் பெறமுயற்சி செய்யும் கற்பு வாழ்க்கையள், என்பது கட்டுரை தரும் விளக்கம்.

14) 'சிலம்பு — பெருங் கதை ஓர் ஒப்பாய்வு' — இரா. காசி ராசன், கேரளப் பல்கலைக் கழகத் தமிழ் துறை ஆய்வுக் கருத்தரங் குக் கட்டுரை.

சிலம்பு, பெருங் கதையாகிய இரு காப்பியங்களின் பதிப்பு விவரம், அவற்றிற்கு வந்துள்ள திறனாய்வுகள்பற்றிய குறிப்பு, இரு காப்பியங்களின் அமைப்பும் போக்கும், அவை காட்டுகின்ற வேறுபட்ட பண்பாடு, அவற்றிற்கிடையே அமைந்துகிடக்கும் மொழிநடை வேறுபாடு ஆகியவை எடுத்துக் காட்டப்பட்டுப் பெருங் கதை சிலம்பிற்கு முன்னர் எழுந்திருக்க முடியாது என்ற முடிவைக் கட்டுரை தருகிறது.

15) 'தமிழிலக்கியங்களும் ஆரிய ஆதிக்கமும்' — ஈ. வெ. ரா. பெரியார், "உண்மை" (பகுத்தறிவு மாத இதழ்), மார்ச், 1973, பெரியார் சுய மரியாதைப் பிரச்சார நிறுவனச் சார்பு வெளியீடு, சென்னை.

கண்ணகி மதுரை எரித்ததில் அயோக்கியத்தனம், முட் டாள்தனம், மூடநம்பிக்கை, பார்ப்பனீயம் ஆகிய பல ஆபாசம்

கலந்திருக்கிறது. கூடா ஒழுக்கத்துக்கும், விபச்சாரத்துக்கும் துணைபோன கண்ணகியைப் பத்தினி யாக்குவது பெண்ணிழிவுக்கும், ஆரியக் கொள்கை வளர்ப்புக்கும் வழிகோலுவதாகும். தமிழ் வேந்தர்கள் ஆரிய அடிமைகள்; சிலம்பு காட்டுவது ஆரிய ஆதிக்கம் எனக் கட்டுரை சுட்டி அடுத்து மணிமேகலை காட்டும் ஆரிய ஆதிக்கத்தைப் பற்றியும் பேசுகிறது.

16) 'தாழை முடங்கலும் ஓலைமுடங்கலும்' — மங்களவதி மேபெல், "இலக்கியப் பூங்கா" - பக்: 33, A Literary Educational Journal issued by the Tamil M. A. Students of S. T. Hindu College, Nagercoil, Feb. 1973.

மாதவி முதல் மடல் தாழை மடல், அடுத்த மடல் ஓலை முடங்கல். முன்னது ஆணவமும், காமவேட்கையும் மிகுதியாக வுடையது. அடுத்தது பணிவும் இன்பமும் மிக்கது. இன்ப நோக்குடை முதல் மடல், அவள் உள்ளப் பண்பைத் தெளிவின் தெரிக்கவும், பிரிந்த கோவலனைத் திரும்ப அழைக்கவும் வலிமை யின்றி யமைகிறது. இரு முடங்கலும் கட்டுரையில் ஒப்பு நோக்கப் படுகிறது.

17) "சிலப்பதிகாரம் மூலமும் உரையும்" — புலவர் பொ. வே. சோமசுந்தரனூர் உரை, மு. ப. 1970, கழக வெளியீடு விலை ரூ: 16

18) "கண்ணகி வழக்குரை"—(கண்ணகையம்மன் ஊர் சுற்று காவியம் அல்லது உடுகுச் சிந்து & கண்ணகையம்மன் குளுத்திப் பாடல்களுடன்)—பதிப்பாசிரியர் வி. சீ. கந்தையா-1968, காரைத் தீவு இந்து சமய விருத்திச் சங்க வெளியீடு - காரைத்தீவு, மட்டக் களப்பு, இலங்கை

19) "கோவலன் கண்ணகி நாடகம்"—வீரபத்திரன்.

20) "கோவலன் சரித்திரம்"—தா. தூ. சங்காதாஸ்

21) "கோவலன் நாடகம்"— ச. சு சங்கரதாஸ்.

22) "பெரிய எழுத்துக் கோவிலன் கதை"-புகழேந்திப்புலவர்

23) "இளங்கோவின் உள்ளம்" — புலவர் செந்துறை முத்து மு. ப. 1962 குமாரவேல் பிரசுரம், சென்னை-17

24) "இளங்கோவின் உள்ளம்"— ஆ. செபரத்தினம்.

25) "கண்ணகி சரித்திரம்" — தி. செல்வக் கேசவராய முதலியார்.

26) "கண்ணகி தேவி" — ஆ. கார்மேகக் கோனார், 6-வது பதிப்பு 1970, ஆ. கார்மேகக் கோன், மதுரை-2 விலை ரூ: 1

27) "காவியம் செய்த மூவர்"—ஏ. கே. நவநீதகிருஷ்ணன்— மு. ப. 1958, கழக வெளியீடு

28) "சிலப்பதிகார ஆராய்ச்சி" — வே. சு. சுப்பிரமணிய ஆச்சாரியார், மு. ப. 1947, ஆனந்த போதினி, சென்னை

29) "சிலப்பதிகாரச் சுருக்கம்"—லிப்கோ வெளியீடு

30) "சிலப்பதிகாரப் பெண்டிர்"— " "

31) "சிலப்பதிகாரமும் ஆரியக் கற்பனையும்"—வே. சு. சுப்பிரமணிய ஆச்சாரியார், மு. ப. 1951, ஆனந்த போதினி, சென்னை

32) "சிலம்பு பிறந்த கதை"-கி. வ. ஜகந்நாதன், மு. ப. 1965 அமுதா நிலையம், சென்னை

33) "தெய்வம் தெளிமின்"—கவிதாமணி, பிறைமுடி வெளியீடு, 40, சஞ்சீவிராயன் கோயில் தெரு, சென்னை-21, விலைரூ.2·50

34) "பெருங்காப்பியப் பெண்டிர்" — கோ. செல்வம், மு. ப. 1965, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5

35) "விதியோ வீணையோ" —கவிஞர் தமிழ்ஒளி, மு. ப. 1961 2-ம் ப. 1971, புதுமைப் பிரசுரம், சென்னை-5, விலை ரூ. 3

36) 'ஆய்வுக் கோவை ஒரு திறனாய்வு' — ஆ. சிவலிங்கனார் "செ. செல்வி"—சிலம்பு 46, பக். 412, 479. 582, 618

37) 'இளங்கோவின் மறதி'-ம. பொ. சிவஞானம், தமிழ்நாடு ஞாயிறு மலர்"

38) 'சிலப்பதிகார ஆய்வுரை' — மயிலை சீனி வேங்கடசாமி "செ. செல்வி" சிலம்பு 46, பரல் 2, பக்: 85

39) 'மாநாய்கனும் மாசாத்துவானும்'—மயிலை சீனி வேங்கடசாமி "செ. செல்வி", சிலம்பு 46, பரல்: 1, பக்: 17

# Books & Essays in English

1) *"Shilappadikaram" (The ankle bracelet) Alain Danielou George Allen & Unwin Ltd., Ruskin House, Museum street, London. 1st Published in 1967 in Great Britain.*

This book is a very good translation of the epic Shilappadikaram by Prince Ilango Adigal, into English in verse and also in prose. In his preface the author says that these poems are really novels in verse. As we learn in the novel, three great religions of India, Brahminism (Hinduism), Jainism & Buddhism. He concludes that the age of the epic is 2nd century A. D.

2) *"The Silappatikaram" V. R. Ramachandra Dihshitar, 1st Published in 1939. Humphrey Milford (Indian Branch) Oxford University.*

This book is also a translation of the epic Silappatikaram into English. In his introduction, the author analyses the well suited topic of the epic Silappatikaram, its form, the story in brief, its place among the sangam works, the date of Ceran Senkuttuvan (2nd century, A. D.), his achievements, his character, Karikalan's place in Silappatikaram, the political condition of North India & South India at the time of Ilango, the administration of the three kings in Tamilnad, geographical data of the three kingdoms, religious data in Tamilnad, social conditions, superstitions, traces of Aryan culture, the author of the poem a historian, his religion, commentators and commentaries of Arumpatavuraiyasiriyar and Adiyarkkunallar.

3) *"Cilappatikaaram" Descriptive grammar with Index Dr. S. V. Subramanian. 1963 : Selling Rights : Pari Nilayam, Madras-1. Rate: Rs. 18.*

The preface of this thesis contains the story of Cilappatikaaram in short, its critical editions, nature of corpus and the purpose of this work. The work is divided into two parts. The first part consists of seven chapters;

1) Phonology, 2) Sandhi, 3) Morphology, 4) Appelative verbs, 5) Nouns, 6) Clitics, 7) Uriccol. The second part gives the index of Cilappatikaaram.

3–A) "*Gajabahu and the Gajabahu Synchronism*" *Gnananath Obeyesekere. 'The Ceylon Journal of the Humanities' Vol: 1. No: 1. January 1970.*

The main aim of this article is to date the epic, Cilappatikaram. It argues that the knowledge of Gajabahu Myth has arrived in public only between 10 to 13th century A. D. It comes to the conclution that the date of Cilappatikaram is only between 10 to 13th century A. D. because, the mythical Gajabahu was spoken in Cilambu.

4) "*Ilango Adigal*" *Dr. M. Varadarajan. 1st. ed. 1967. Sahitya Akademi, New Delhi.*

This book consists of five chapters, namely 'A great life' 'Tamilnad during the days of Ilango', 'the story of the epic', 'the epic and its features' and 'a connoisseur of arts'. The first chapter clears the story of the author, Prince Ilango, his renunciation and his ascetic life. The second chapter 'Tamilnad during the days of Ilango' gives a vivid picture of historical, social, political and religious aspects of the epic. The third chapter narrates the story of Cilappatikaram, the fourth chapter 'the epic and its features' is a depiction of the important action of the anklet in the story, the impartial treatment of the three cantos, Ilango's artistic and moralistic feature, his art of impressing the readers by contrasts, the first prayers of the epic and its artistic features, the hero and the heroine a commoner and the Villainless narration of the epic. The author concludes that these qualities are the excellencies of the epic Cilappatikaram. In the last chapter, 'A connoisseur of arts', the author points out various songs like Ammanai, the ball songs, Kanal vari etc.

5) "*Kovalan and Kannaki*" *(The story of the Silappathikaram) A. S. Panchapakesa Ayyar, 1st. ed. 1947. Kumarasamy Naidu & Sons. 27, Chinna Tambi St. Madras. Rate: Rs. 1.*

This book depicts the story of Kovalan & Kannaki which is based on the epic story of Cilappatikaram and also the story of Kovilan katai.

6) *"Tale of the Anklet"* (*Silappathikaram*) *M. Karunanithi, 1st. ed. 1968. Anchugam Publication, Madras–6. Rate. Rs: 5.*

This play is a translation of the drama 'Poompuhar' in Tamil by M. Karunanithi and it contains thirty eight small scenes.

7) *"The Great Twin Epics of Tamil" V. Kanakasabhai 1st. ed. 1956. Kazhaham, Madras–1. Rate: Rs. 2.*

The story of Cilappatikaram and Manimekalai form the subject of this book and that of "Early Tamils—Eighteen hundred years ago" in English and Tamil. In this book the author says that Cilappatikaram and Manimekalai are twin epics and he gives a brief account of the story of the two epics.

*8) 'Administration and Palitics of the ancient Tamils as reflected in Silappatikaram', M. Shunmugam, "Journal of the Annamalai University" 1957. Part A. Humanities. Vol XXI–P. 143. & 1960. Part A. Humanities. Vol XXII–P. 115.*

In this essay the author analyses the 'tayamurai' of the Cera kings and finally comes to the conclusion that the ancient Ceras followed only the 'makkal tayam' and not 'marumakkal tayam'. He is of the opinion that if the padigams of Patirrupattu are supposed to betray the existence of 'marumakkal tayam', it is due to some misconception on the part of the author of the padigams. For example he takes the padigam of Silappatikaram and the speech of Kannaki in Varantaru katai. The second part of this research article depicts Shenkuttuvan's predecessors, his contemporaries, conquests, form of government, divinity of kingship in ancient Tamilnad, the council of ministers, the income of the state, welfare of the subjects (People), army and war, patronage of fine arts, the pattinicult, peace and prosperity and the love of the people for their king etc.

9) *'Ancient Musical Modes in Cilappatikaram' S. Ramanathan. "Proceedings of the first International Conference Seminar of Tamil Studies." Vol II P. 371. 1966, Kuala-Lumpur, Malaysia.*

Here, the author classifies the musical modes in Cilappatikaram, Vattappalai and divides it into twenty two srutis. Also he points out four major modes and 103 pans in Cilappatikaram - Palaiyal, Kurinchiyal, Marutam, Neydal, Mullaippan. Definitions are given and also Pan Notiram or Puranirmai is defined in this paper.

10) *'Cilappatikaram' Dr. A. Chidamparanatha Chettiar. "Journal of the Annamalai University" Vol XVI P. 7. 1951. University of Annamalai, Annamalai Nagar.*

This epic is divided into three cantos and thirty kathais. The main themes of the epic, social, political, religious and economic life of the people are explained. The matters of the epic composed, language and style of Ilango which differ in different situations and characterisations, the extreme quality of the chaste woman Kannaki and the valour and benevolence of Kovalan are briefly described in this essay. Here, the author points out that Kannaki's boldness to appear before the king to point out his mistake is the basic theme of the epic, and that Ilango has raised the story to the epic level by incorporating into the work, supernatural events, which however are made to appear probable.

11) *'Classical Dance of the Ancient Tamils' Nirmala Ramachandran, "Proceeding of the first International Conference Seminar of Tamil Studies" Vol. II P. 379. 1966. Kuala-Lumpur Malaysia.*

Silappatikaram is not only one of the world's greatest literary masterpieces, but also a vast storehouse of information on the arts of music, dancing, building and other activities of the ancient Tamils. In this paper, the author explains various kinds of dancing (kuuttu) which are found in Silappatikaram Arangeettukaatai and other katais. Silappatikaram gives the legendary origin of dancing (birth of Matavi). Definition of Talaikkol, KunRakuravai, Aachiyar

kuravai etc. are given. The author concludes that the influence of Aryan culture is clearly seen in the life described in Silappatikaram.

11 — A) *'Colours in Early Tamil. A Study Based on Cilappatikaram' Klaus L. Janert and P. Rajagopal Subramanian, (Koeln University, Germany) "I J D L" (International journal of Dravidian Linguistics) – P. 141. Vol: 2. No 1: - January 1973*.

This paper clearly presents the various occurances of five different colours in cilambu, such as pacumai (green), cemmai (red), VeNmai (white) niilam (blue) and karumai (black) and gives a suggession that 'with regard to deities, Ilango distinguishes only three distinctly different colour concepts such as red, white and blue.'

12) *'Epic of the Anklet — Cilappatikaram' (p 88) & 'The characters in the Epic of the Anklet' (P. 92) Selected and Introduced by X. S. Thani Nayagam. "Tamil culture and civilization" 1st e 1970. Asia Publishing House, Madras.*

The first essay gives an introduction of Ilango, the ascetic and a brief account of the story of Cilappatikaram. The second essay 'the characters in the epic of the Anklet' is taken from the book 'A history of Tamil literature' P: 54–58, by C. Jesudasan and H. Jesudasan. The author is of the opinion that the poet, Ilango, has synthesised in this epic a discription of the triple monarchy of the Tamils, their historical greatness, their principal cities, the lives of the people of the five regions and their characteristic music, song and dance. Also he adds that 'Cilappatikaram is a romantic, one might almost say mantic epic in Tamil'.

13) *'From the Epic of the Anklet' (The song of Benediction) Translated by Prof. R. S. Desikan. 1963. "Bharathi Jayanthi Souvenir" – P 137. Bharathi Tamil Sangam (Regd), Calcutta.*

Here, the English translation of the opening songs of praise of 'Mankala Valtukaatai' and the praising words of Kovalan about the beauty of Kannaki in Manai aram patutta kaatai are given.

14) *'Gleanings from the Silappatikaram' V. S. Mudaliyar. "Tamil Culture" Vol. VII. No. 2. April, 1958. The Academy of Tamil Culture. Madras.*

The author of this paper speaks about the marriage of Kovalan and Kannaki according to vedic rites, the temples and Gods mentioned in Indra vizha–voor–edutta katai and Kanattiram—Uraitta katai, the dancing and the six tutors mentioned in Arangetru katai and the three musical instruments. Finally he analyses the meaning of the word 'karpu', explains what is 'karpu' and concludes that 'karpu' means the 'life of Kannaki'. Kannaki is a classic example of two kinds of karpu called 'arakkarpu' and 'marakkarpu'. In his conclusion he says that any women who attains a higher level of karpu than that of normal human beings, may become a goddess on the earth.

15) *'Ilango Adigal' V. R Ramachandra Dikshitar, "Studies in Tomil literature and History" P. 70. Ist. ed. 1930. IInd. ed. 1936. University of Madras.*

This essay depicts the story of Prince Ilango, his renunciation and his ascetic life. Secondly the author analyses the religion of Prince Ilango. Mr. V. Kanakasabhai says that his religion is Nigrantha sect and Dr. U. V. Swaminatha Iyar says that it is Saivism. He takes and analyses these two opinions and he himself comes to the conclusion that Ilango's religion is Jainism. Then he goes to the date analysis of Ilango and says that the argument of Mr. Swamikkannu Pillai, by the way of the astronomical data given by the commentator, Adiyarkku Nallar (comming of ஆடித்திங்கள்) and the literary data of Bharata Natya Sastra and Panchatantra (The message found in these two literature are In Silappatikaram and so the date of Silappatikaram is after that of those two literary works) is not correct and he comes to the conclusion that the date of Prince Ilango is the latter period of Sangam Age.

16) *'Pandiyan Neduncheliyan — The symbol of justice' Dr. D. Singaravelu. "Aivukkovai" P: 422. A. I. U. T. T. Association, IIIrd Conference. 1971 Annamalai University Publication.*

The author makes clear two facts. They are, the time & place where Kannaki met the Pandia king, the meaning of fate and its influence on people. At first he proves that Kannaki met the Pandia king in his bed-room at night and that time his wife, the Queen alone was by his side. Then he expresses and elaborates the verse 'uuzh vinai uruththu vanthu uuttum' of Ilango and concludes that fate can be avoided by perseverance and strong will power like that of Kannaki.

17) "*Silappatikaram*' *J. H. Somasundaram Pillai.* "*A history of Tamil Literature*" *– p. 341. 1st. ed. 1968. J. H. Somasundaram Pillai, 28, Lecturer's Lines, Annamalai Nagar.*

Silappatikaram is the first epic in Tamil. The age of the epic (2nd century A. D.), the brief story of the three cantos, the three canons of the epic, the message of the epic (given in the end of the epic), the folk songs of the epic (Aichiyar kuravai, kunRakkuravai etc) the author a mystic, are all given in short.

17–A) '*Silappatikaram and Manimekalai*' *S. Vaiyapuri Pillai, "History of Tamil Language and Literature"—pp 139–157, 1st. ed. 1956, New century Book House, Madras. Rt. 4–12–0.*

In this article, prof. Vaiyapuri Pillai gives a brief story of Silappatikaram and then he comes to date the epic. 'A story from Panchatantra (ch: 15, 11, 54–74) is proof enough of the purely imaginative character of this work. It is a story but not a historical truth. Paranar in all his poems not a single word to say either about Senguttuvan installing Kannaki as deity or Ilango or Gajabahu. Ilango and Sattanar are not Sangam Poets. A week day has mentioned in cilambu (velli vaarattu) and this is found in an inscription in A. D. 484. The knowledge of calender has arrived in public in the 9th century A. D. only and so the date of Cilambu is 9th century A. D. 'Tondi' of Cera and 'Pangalar', mentioned in Cilambu are further evidence to prove its date'. Thus he argues about the date of Silappatikaram.

18) *Silappatikaram: From the cultural point of view'* *V. Perumal. "4th Conference Publication", p. 631. A.I.U.T.T. Association 1972 Department of Tamil, University of Kerala Rate: Rs. 20.*

Silappatikaram, the ancient Tamil epic, throws a flood of light on the literary religious, social, political, economical and cultural aspects of the Tamils in the early centuries of the Christian Era. It is the history of the Tamils in the Sangam Age. It is crystal clear that this epic depicts the Tamil as well as the Aryan culture. Devanthi represents the Aryan culture. So do the old Brahmin (Kosikamani) Madalan and the Brahmin lady (பார்ப்பினி). Pandian truely exposes the Tamil culture. Kannaki, Kovalan, Cera King and others do the same. Thus the Tamil epic Silappatikaram, beautifully exposes the two distinct cultures of the ancient Tamilnad.

19) *'Silappatikaram of Ilango' C. Jesudasan & Smt. Hephzibah Jesudasan. "A History of Tamil Literature"– P. 54. 1st. ed. 96 Y. M. C. A. Publishing House, 5, Russell Street, Calcutta–16.*

This essay contains the story in short, with a character anlalysis of Kannaki, Kovalan and Kaundi and the speciality of the epic. Silappatikaram, reflecting the religious trends of the times but with an inclination towards Jainism, is the first available great Tamil epic. Silappatikaram is certainly a noble story, told in a long and loose narrative, interspersed with digressions and lyrics. To remove Kaundi would be to omit a very strong emotional factor from the story. Ilango makes the story realistic by blending legend with historical facts. The religious conditions of Ilango's time are naturally reflected in his work.

20) *'Situation – Action – Relation – Analysis in Silambu'* *K. S. Kamaleswaran. "4th conference Publication" – P: 107. A. I. U. T. T. Association. 1972 Department of Tamil, University of Kerala. Rate: Rs. 20.*

In this article, the author explains three kinds of situations, simple situation, superior situation, and supreme situation. Silambu opens with a situation but without an action, either preceeding or succeeding. In the second unit, as the non-story portion occupies the major part of the book, and as it is framed in a detached manner, the elaborate description of the stage and the detailed delineation of the initial phases of dance become a non-story situation. The superior situation contains an important action worth mentioning. The supreme action – Kannaki wrenching the left breast and burning the city of Madurai has no equals or sequals.

21) *'Story of the Anklet' Prof. T. P. Meenachisundaranar. "Prof. T. P. M's Sixty-first birthday commemoration Volume" — Collected Papers of T. P. M. — P: 41. 1961. Annamalai University Publication.*

A brief story of Kannaki is given. The greatness of the epic Cilappatikaram, the society of its age and the greatness of Kannaki, Kovalan and Matavi are also spoken in this paper in a very good manner. In his conclusion he says that, Cilappatikaram is dramatic and has set the ideal for future epics. Also it reveals the cultural unity but not of political unity.

22) *'The age of early classics' (200 A. D,) K. S. Ramasamy Sastry. "The Tamils and their Culture"– P. 57. 1st ed. 1967. Annamalai University Publication. Rate; Rs. 6.00.*

The age of Ilango Adigal's Silappatikaram belongs to the second century A. D. The poem Silampu, reflects the inner (Aham) and outer (puram) life of humanity. Malati is a pure Sanskrit name. We find from Devanthi, the worship of a North Indian God. The poem 'Indra Festival' refers so many Gods. This itself shows the mingling of North Indian and South Indian cultures. Madari's worship of Krishna is another proof for this.

23) *'The Architectonics of Silappatikaram'* *K. Chellappan.* *"A. I. U. T. T. Association" 1970. Second Seminar.*

Ilango brings out a closer kinship between the universe and man, between heaven and earth. The first katai starts from Heaven and the last katai ends with the heavenly blessings of Kannaki. Silappatikaram portrays an apparent conflict between order and tension, between symmetry and contrast, between macrocosm and microcosm, between universe and the individual. The first prayer of the first katai, stands for the three concepts of love (moon), justice or fate (sun) and mercy (rains). In this epic we can see Madavi evolving into Kannaki and Kannaki evolving into fate.

24) *'The chorus in Cilappatikaram'* *E. K. Ramaswamy.* *"A. I. U. T. T. Association" 1970 — Second Seminar.*

The chorus is a prominent element in the greek dramas. The meaning of the word chorus has been described by using various dictionaries. The functional aspects of Aayychiyar kuravai, Vettuvavarl and KunRa Kuravai in Cilappatikaram resembles the chorus in ancient Greek mythology. KunRa kuravai is the final chorus in Cilappatikaram. Using of chorus technique started in Tamil Literature from 2nd century. A.D.

25). *'The Folk Motif in Silappatikaram'* *N. Vanamamalai.* *"Proceedings of the first International Conference. Seminar of Tamil Studies" Vol: II P. 138. 1966 Kuala Lumpur, Malaysia.*

The two types of folk songs are: 1. Songs of events that happened in the distant past that still linger in folk memory. 2. Songs of ordinary events of every day life. The influence of folk motif entering into Sangam Literature and Silappatikaram and Thirukkural. The author of this essay points out the folk-motif in Silapatikaram from Mangala Valtu to the end of the epic. He concludes that the simple beliefs, hopes and fears of the folk are brought into the epic and the culture. The classical forms of art draw upon folk motif, folk Gods and goddesses, folk songs are all identified in the epic Silappatikaram.

26) *'The Story of Kovalan' (Ceylon Tamil version) Translated by Hugh Neville, "Tamil Culture" Vol: X No. 2. P: 72. April — June 1963. The Academy of Tamil Culture.*

The story of Kovalan here described is quite different from Cilapptikaram. The Son (an oil merchant) of-Maniarasan lighted thousand lamps in the temple of Kali. For that he was killed by King Pandia. To take revenge for this cruelty, Kali become Kannaki, the daughter of King Pandia. Oil merchant got the birth of Kovalan, his wife Mayilaniyal became Matavi. Pandian kept the child in a box and put it in a river and the box was taken by Masatan Chetti. Kovalan married Kannaki in her fifth year, and Mathaki danced in the function. Kovalan fell in love with Mathaki and lived with her. When Kannaki was twelve years old, she noticed the marriage badge round her neck. When asked, her maid told her about her marriage with Kovalan and Kannaki wrote a letter to Kovalan. He came to her in a poor condition. So both came to Madurai to sell the anklet and there he was killed.

27) *'Treatment of dreems in Cilappatikaram' Dr. S. V. Subramanyam. "Proceedings of the First International Conference Seminar of Tamil Studies" Vol. II P. 164. 1966. Kuala Lumpur, Malaysia.*

Various doctrines of dreams from various authors are pointed out in the beginning and then comes to the point of the conception of dreams in Tamil Literature. Dreams in Ceevakacintamani, Kampa Ramayanam and other Tamil Literature and their (dreams) functions are explained in those literature. And finally the author of this paper comes to the analysis of the three dreams in Cilappatikaram. He says that they are used to give a sense of destiny. They also give a tempo of the epic. The dreams of Kannaki and Kovalan depict their characters.

—

# APPENDIX

1) *Translation of Cilappatikaram in Indian Languages— Socorce: 'Tamil Studies Beyond Tamil Nadu'–V. I. Subramaniam– "Tamil studies Abroad — A Symposium" — PP. 124 — 125 — Edited By Xavier S. Thani Nayagam — 1st ed. 1968. — The International Association of Tamil Research.*

The story of 'Cilappatikaram' was translated into Hindi under the title 'Suhag Ke Nuupur', by Amrutalal Nugar and published by Rajkumal Prakashan, New Delhi 1964. N. Ganesan of the Madras University has translated in Hindi verse the whole of Cilapptikaram. So also V. S. Raganathan has translated it into Hindi verse. K. Kasthuri Rengachariar too is preparing a Hindi version in verse.

The stories of Cilappatikaram, Manimekalai, and Jeevaka-cintamani have been summarized in Marathi book, Mani-mekhala by Pandit Mahadeva Sastri Joshi which was published in 1955.

In Malayalam, Nenmara Narayanan Nair translated into verse and prose 'Cilappatikaram', the second edition of which was published in 1955. A. Narayana Panikkar translated into verse by C. Neelakanda Panikkar, retired Inspector of Exise, Valyathura, Trivandrum, was published in 1957 by the Educational Supplies Depot., Trivandrum. The 'Vanchik-kandam' of that epic has been translated into broad verse form by S. V. Subramanian and was published by the Baskara Prinding works, Trivandrum, in 1965. Suchindrum Thanu Pillai is said to have prepared a translation of Cilappatikaram under the name 'Kovalanum Kannakium'. K. N. Gopala Pillai, retired Professor of Malayalam, American College, Madurai treated the Kannaki story into an Oottantullal (a dance drama form) and named it as Karpin Ooviyam or kannaki Caritam. Nenmara Narayanan Nair has translated into Sanskrit verse Cilappatikaram and named it as 'Kannaki Kovalan'. It has six sarkas.

2) *"Pisen O Klenotu" — (Silappatikaram) — Zvelebil, kamil — 1965. Prague.*

3) *"A study of Cilappatikaram" — M. Shunmugam — 1969. M. Litt. Thesis — Annamalai University.*

4) *"Study of the Vocabulary of Cilappatikaram" — S. Kanagasoundari - 1958. M. Litt. Thesis - Madras University.*

5) *'A Historical Anthropological and Philosophical study of the Kodungallur Temple' — V. T. Indu Chudan – 1969. "The Secret Chamber."*

6) *'Cilappatikaram' — P. Coomaraswamy.' "J.R.A.S.C." — Vol. XIII, No. 44. 1893.*

7) *'Cilappatikaram' — T. P. Meenachisundaram "A History of Tamil Literature" — PP. 34–43 — Annamalai University.*

8) *'Dates of Cilappatikaram and Manimekalai' — V. Chelvanayagam — University of Ceylon — Review, Vol: VI.*

9) *'Date of Cilappatikaram and Manimekalai"–K. K. Pillai — "A Social History of the Tamils" — PP. 128–150 – 1st ed 1969 — University of Madras.*

10) *'Pancatantra And Silappatikaram'—V. I. Subramaniam — 1969. "Mysore Orientalisi" Vol: II. No. 1.*

11) *'Pattini cult as a Socia — Religion Institution' — M. D. Raghavan - 1951. "Spolia Zeylanica." Vol: XXVI.*

12) *'Thematic and Structural Antithesis in Shilappatikaram' — John B. Alphongo karkala — "Indian Literature"—PP. 52–62 — 1972 March; Published quarterly by Sahitya Akademe, New Delhi — 2.*

—: ✻ :—

# பிழை திருத்தம்

| பக்கம் | எண். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 4 | 15 | 1 | ஆலாவ | ஆலால |
| 6 | 36 | 1 | சிலப்பதிகர்ரத்தில் | சிலப்பதிகாரத்தில் |
| 13 | 11:9 | 2 | Descriptire | Descriptive |
| 31 | 9 | 6 | த்லைப்புக்களில் | தலைப்புக்களில் |
| 32 | 10-அ7 | | வெதம் | வேதம் |
| 34 | 13 | 6 | தலைப்புக்கன் | தலைப்புக்கள் |
| 35 | 15 | 1 | கடப்படுகிறது | காட்டப்படுகிறது. |
| 36 | 18 | 22 | பேசப்படுகின்றது | பேசப்படுகின்றன. |
| 41 | 25 | 7 | சிலப்பிற்கு | சிலம்பிற்கு |
| 41 | 26 | 18 | புனித | பதிக |
| 43 | 29 | 8 | சா. லைசான் | ச. லைசாள் |
| 47 | 35 | 33 | கூறுதல் | காணுதல் |
| 48 | 36 | 7 | சந்தங்கும் | சந்தங்களும் |
| 59 | 52 | 21 | கொவலனும் | கோவலனும் |
| 60 | 54 | 25 | அவனை | அவளை |
| 61 | 56 | 27 | நன்மைத் | நன்மை |
| 70 | 68 | 2 | நின்றச்சிலம்பு | கொன்றச்சிலம்பு |
| 75 | 75 | 11 | நிறையளித்து | நிறையழித்து |
| 75 | 76 | 29 | மாதரி | மாதவி |
| 86 | 17 | 11 | நாடடுப்பற்றையூட்டிக் | நாட்டுப்பற்றையூட்டக் |
| 93 | 36 | 18 | புரட்சித் | புரட்சி |
| 94 | 38 | 13 | ஓட்டிச் | ஒட்டிச் |
| 98 | 48 | 12 | கட்டுரைக் | கட்டுரை |
| 106 | 67. | 9 | ரூ 300 | ரூ. 3 00 |
| 109 | 71 | 3 | சார்த்தான் | சார்ந்தான் |
| 109 | 73 | 17 | துண்ப | துன்ப |
| 110 | 73 | 2 | வழித்தணையாக்கியது | வழித்துணையாக்கியது. |
| 111 | 77 | 35 | எழுதப்படுகின்றுது | எழுதப்படுகின்றது. |
| 119 | 96 | 1[illegible] | [illegible]ாழ்ச் | வழச் |
| 119 | [illegible] | [illegible] | [illegible]ற்பதங்கட்டு | சொற்பதங்கட்கு. |
| 119 | 98 | [illegible] | காப்பிபச் | காப்பியச் |
| 120 | 99 | 10 | கோகிலனும் | கோவலனும். |
| 127 | 115 | 4 | இன்மூன்றனுள் | இம்மூன்றனுள் |
| 127 | 116 | 17 | உறும்புக்களை | உறுப்புக்களை |
| 149 | 169 | 1 | செயராமள், வெ. | செயராமன், வெ |

## கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை வெளியீடுகள்

| | Rs. |
|---|---|
| சேர வேந்தர் செய்யுட் கோவை - vol. i | 4—50 |
| ,, ,, —vol. ii | 4—50 |
| ஹரிச்சந்திர வெண்பா | 1—75 |
| திருக் குற்றாலக் கோவை | 3—00 |
| ஸ்ரீ சுவாதி திருநாள் மஹாராஜா | 1—25 |
| *Index of PuRanaanuuRu* | 10—00 |
| *Grammar of AkanaanuuRu* | 15—00 |
| சங்க இலக்கியம்—மருதம் | 7—50 |
| சிலப்பதிகார ஆய்வு அடங்கல் | 2—25 |

Copies can be had from

**DIRECTOR**

Department of Publications

Uuiversity of Kerala

TRIVANDRUM.